உ

ஓம்நமோ பகவதே சங்கராய.

# ஸ்ரீ சங்கரோபதேச ரத்னம்.

## (Sayings of Sree Sankara)

ஸ்ரீ காஞ்சீ காமகோடி பீடாதிபதி ஸ்ரீ சந்த்ரசேக
ரேந்த்ர ஸரஸ்வதீ ஸ்ரீஜகத்குரு
**ஸ்ரீசங்கராசார்யஸ்வாமிகள் அவர்களால்**
அநுக்ரஹிக்கப்பெற்றது.

---

மஹோபதேசக ப்ரஹ்மஸ்ரீ
**K. S. ராமஸ்வாமி சாஸ்திரிகள், B.A.B.L.**
(டிஸ்ட்ரிக்ட் ஜட்ஜ்) அவர்களது
முன்னுரையுடன் கூடியது.

---

ப்ரஹ்மஸ்ரீ ஸாஹித்ய வாங்முகபூஷண ஸ்ரீவத்ஸ
**வே. ஸோமதேவ சர்மா அவர்களால்,**
தொகுக்கப்பட்டது.

---

ப்ரஜோத்பத்தி௵ மேஷ சுக்ல பஞ்சமி

 [விலை ரூ. 2

# FOREWORD.

BY BRAHMASREE MAHOPADESAKA
**K. S. RAMASWAMY SASTRIGAL Avl. B.A., B.L.**
**District & Sessions Judge, CUDDAPPAH.**

---

I regard it as a unique privilege to have the honour of writing a foreword to this laudable work by a learned scholar who aims at broadcasting in Tamil the world-shaking and soul-saving ideas of the immortal Sri Sankaracharya. Swami Vivekananda was never weary of saying that the Adwaita Vedanta carried its twofold message of spiritual unity and of self-realisation of spiritual power to the whole world and that such a lesson is specially needed to be re-affirmed to-day in India which is distracted by disunion of men and degeneracy of power. The aim of this work is to restore spiritual unity and Spiritual power by fertilising our minds and hearts by many channels taking thereto the life-giving waters of the spirit from the infinite reservoir of Sri Sankara's devine mind. Charles Johnston says well: ' Shall we say that the great **Upanishads** are the deep still mountain torrents fed from the pure water of the everlasting snows, lit by clear sunshine or by night mirroring the high serenity of the stars?

**The Bhagawad Gita** is, perhaps, the lake among the foot-hills, wherein are gathered the same waters of wisdom, after flowing the forest of Indian History, with the fierce conflict of the children of Bharata. Then in the **Brahma Sutras** we have the reservoir, four-square, where the sacred waters are assembled in ordered quiet and graded depth, to be distributed by careful measure for the sustenance of the sons of men. What shall we say, then of the Master Sankara! Is he not the guardian of the sacred waters, who, by his commentaries, has hemmed about, against all impurities or Tiures Jealousy, first the mountain tarus of the Upanishads, then the serene forest lake of the **Bhagawad Gita** and last the deep reservoir of the Sutras, adding from the generous riches of his wisdom, lively fountains and lakelets of his own, the crest jewel, the awakening, and the discenment.

Some people think to-day that, though Sri Sankara's system has been criticised without any tangible victory or effect for over two thousand years, they can easily dispose of it by uttering the word **Maya Vada** as a kind of **Mantram**. Such glib gibes can be flung at any system of philosophy or at any religion. **Maya** means what is meant by that word which is so popular to-day in the realm of modern thought—Relativity. Sri Sankara's comprehensive mind realised and taught the implica-

ஸ்ரீ சந்த்ரமௌளீஶ்வராய நம:



ஸ்வஸ்தி ஸ்ரீமதகில பூமண்டலாலங்கார த்ரய ஸ்த்ரிம்
ஶத்கோடி தேவதாஸேவித ஸ்ரீ காமாக்ஷீ தேவீ ஸ
நாத ஸ்ரீமதேகாம்ர நாத ஸ்ரீ மஹாதேவீ ஸநாத
ஸ்ரீ ஹஸ்திகிரிநாத ஸாக்ஷாத்கார பரமாதிஷ்டாந
ஸத்யவ்ரத நாமாங்கித காஞ்சீ திவ்யக்ஷேத்ரே, ஶார
தாமட ஸுஸ்திதாநாம் அதுலித ஸுதாரஸ மா
துர்ய கமலாஸந காமிநீ தம்மில்ல ஸம்புல்ல மல்லிகா
மாலிகா நிஷ்யந்த மகரந்த ஜரீ ஸௌவஸ்திக வாங்நி
கும்ப விஜ்ரும்பணாநந்த துந்திலித மநீஷி மண்ட
லாநாம், அநவரதாத்வைத வித்யா விநோத ரஸி
காநாம், நிரந்தராலங்க்ருதீக்ருத ஶாந்தி தாந்தி
பூம்நாம், ஸகலபுவந சக்ர ப்ரதிஷ்டாபக ஸ்ரீ
சக்ர ப்ரதிஷ்டா விக்யாத யஶோலங்க்ருதாநாம், நி
கில பாஷண்ட ஷண்ட கண்டகோத்பாடநேந விஶதீ
க்ருத வேதவேதாந்த மார்க ஷண்மத ப்ரதிஷ்டாபகா
சார்யாணாம், ஸ்ரீமத் பரமஹம்ஸ பரிவ்ராஜகா
சார்யவர்ய ஜகத்குரு ஸ்ரீமச்சங்கர பகவத்பாதா
சார்யாணாம் அதிஷ்டாநே ஸிம்ஹாஸநாபிஷிக்த

ஸ்ரீமஹாதேவேந்த்ர ஸரஸ்வதீ ஸம்யமீந்த்ராணாம் அந்தேவாஸிவர்ய ஸ்ரீசந்த்ரசேகரேந்த்ர ஸரஸ்வதீ ஸ்ரீபாதை:, அஸ்மத்பக்தஜன ப்ரியஶிஷ்யாணாம் ஸ்ரீவத்ஸ ஸோமதேவ ஶர்ம நாராயண ஶாஸ்த்ரி ஸம்பாதயாசார்யாணாம் ஸவர்ணாஶிஷ ஸிதேத்யே க்ரியதே நாராயணஸ்ம்ருதி:.

பரம காருண்யமூர்த்தியான ஸ்ரீமதாசார்ய பகவத்பாதாள் உத்தமஶ்ரேயஸாதனமாக அனுக்ரஹித்திருக்கும் உபதேஶ க்ரந்தங்களின் தாத்பர்யத்தை ஸாமான்ய ஜனங்களும் அறிந்து க்ருதார்த்தர்களாக ஆகும்படி த்ராவிட பாஷையில் ஸ்ரீமதாசார்யர்கள் அருளியிருக்கும் க்ரந்தங்களை "ஸ்ரீ ஶங்கரோபதேஶ ரத்னம்" என்னும் நாமதேயத்துடன் நீங்கள் ப்ரசாரம் செய்துகொண்டு லோகத்திற்கு பரோபகாரத்தைச் செய்வதைக் குறித்து, அத்யந்தம் ஸந்தோஷிக்கிறோம். ஸ்ரீமதாசார்ய பக்தாக்ரகண்யர்களான நீங்கள் ஸ்ரீ சந்த்ரமௌளீஶ்வர க்ருபையால் ஸகல ஶ்ரேயஸ்களையும் அடையவேண்டியது.

(முகாம்) எசையனூர்
ப்ரஜாபதி வருஷம் தை மீ 3௳ } நாராயணஸ்ம்ருதி:

tions of Relativity better than the vain and self-boastful modern mind and showed also its relation to the Absolute. Like Monsieur Jourdain in Moliere's play who talked prose without knowing it, we are all Mayavadi's even if we do not know that fact and even if we deny it, Swami Vivekananda says well: "But the Maya of the Vedanta, in its last developed form, is neither Idealism nor realism nor is it theory. It is a simple statement of facts—what we are and what we see around us." It is not the Mayavadis that negate the world. Maya and universe being one, it is they that attack Maya that negate the world, One of the great masters of English Poetry says:

"The one remains; the many change and pass;
Heaven's Light for ever strives; earth; shadows fly;
Life like a dome of many—coloured glass
Staws the white radiance of eternity.

The flying and mutually chasing shadows of the universe are called by the compendious term Maya. The refractions of the infinite Light into the inter-connected chromatic scheme of the spectrum by the three-faceted prism of the mind are described by the brief word Maya. Sri Sankara never said that the world is a mirage. He never said that the world is the mere projection of the mind. He said

that perception is **Vasthu tantra** and that Maya is **Bhavarupa** and not **Thuchcha** or **Abhavarupa**. He pointed out that when we conquer **Avidya** by **Vaidya** and reach the highest realisation (**Anubhaya**) the contradictory discord of the finite are resolved into the unitary melody of the infinite. The breaking of the pot does not effect the ether which seems to be within it but which is really without and within, being infinite and eternal.

It is not proper or possible to make this foreword a treatise on the glory of the Adwaita. This brief book aims at doing such a work on a small scale. It is best described by the description which Sr Sankara gives in regard to the Brahma Sutras (वेदान्त वाक्य कुसुमग्रथनार्थात्वात् सूत्राना). By a similar metaphor the author of this work calls it a necklace of gems from Sri Sankara's teachings. Sri Sankara taught truth in one verse, in five verses, in eight verses, in ten verses, in a hundred verses, in a thousand verses, and in even more extensive works. The author Prasangavara Somadeva Sarma has given us the essence of all these works—the attar of the roses—unfading, fragrant and fair—which bloom in the extensive rose garden of Sri Sankara's thought.

It will nct be out of place if I indicate here what we can realise by a scrutiny of the gems which tie scattered over a vast field and which are gathered here like Homer in a nutshell The Adwaita doc trine is in accord with the Vedas. To take but one illustration the **Tripadvibhuthi Maha Narayana Upanishad** says: संकोच विकासात्मकमहामायाविलासात्मक एव सर्वो प्याविद्याप्रपंच : । परमार्थतो न किंचिदास्ति क्षणशून्यादि मूला विद्याविला सत्वात् । तत्कयमिति । एकमेवाद्वितीयं ब्रह्म । नेहनानास्ति किंचन । तस्माद्दयति रिक्तं सर्वं बाधितमेव ॥ To attain this realisation we need the aid of Jnana, just as Arjuna needed the gift of the **Divya** vision by *Sri* **Krishna** to see the Viswarupa of the Lord. (दृष्टिं ज्ञानमयीं कृत्वा पश्येद्ब्रह्ममयं जगत्) Further, the Adwaita finds a place within itself for all other systems and faiths, like the infinite sky where all luminaries shine. It appeals to the thinker and the devotee and the mystic and the man of action. It has specially conserved what other systems have ignored or neglected—the **Sadhana** of Raja Ycga. It is specially attached to the way of devotion i. e., **bhakthi** and **prapathi** (ईश्वरानु ग्रहादेव पुंसामद्वैतवासना). Prosessor Deussen has said well that "it is the strongest support of pure morality". It is also the supreme source of unity and power. Its doctrine of **Ananda** as the use of being enables us to

realise the centrality of bliss. In short, those who find the Adwaita a little difficult and distasteful at the beginning will soon realise its surpassing sweetness (यत्तदग्रे विषमिव परिणामेऽमृतोपमम्) It is to this ambrosial feast that the author bids us come. Shall we lag behind?

How charming is divine philosophy !
Not harsh and crabbed as some dull fools suppose !
But mus'cal as is Apollo's lute !
And a perpetual feast of nectared sweets !
Where no crude surfeit reigns !

K. S. RAMASWAMY SASTRI

---

# ஆசிரியர் உரை.

ஸ்ரீமஜ்ஜகத்குரு பகவத்பாதாளது பாஷ்யங்களைப் படித்தபோது மனுஷ்ய சரீரத்தோடு லோகோபகாரமான இவ்வளவு ருசியான க்ரந்தங்களை எப்படி எழுதியிருப்பார் என்ற எண்ணம் தோன்றிற்று. தற்சமயம் ஸ்ரீகாமகோடி பீடாதிபதியாய் அமைந்துள்ள பரம ஹம்ஸபரிவ்ராஜகாசார்யாளான ஸ்ரீ சந்திரசேகரேந்த்ர ஸரஸ்வதீ ஸ்வாமிகளை தர்சித்தவுடன் அச்சங்கை அகன்றது. ஸர்வஜ்ஞரான பகவத் பாதாளது அழகிய சொற்சுவை நிறைந்த வாதங்களைவிட உலகக்ஷேமத்தில் அவாள்கொண்ட கருணையே என்னுள்ளத்தைக் கொள்ளைகொண்டது. மூக்கனூரில் தற்கால பீடாதிபதி ஸ்ரீஸ்வாமிகள் ஆனந்த பாஷ்பம் பெருக "ஸஹ்ருதயீதா கிம்ஹி தயீதா" என்று ஆசார்ய வாக்கின் பெருமையைக் கூறியபோது மேன்மேலும் பரமாசார்யாளது நூல்களுக்கு யான் பரவசமானேன். "க்ஷணமிஹ ஸஜ்ஜனஸங்கதி" என்றசொல் மனதில்புக, எனதுஸ்வல்பவருவாயில் ஓர் சிறிது பாகத்தைக்கொண்டு ஸ்ரீசங்கரரது சரித்தைத் தமிழில் சிறு நூலாக வெளியிட்டேன். இதேபோல் மற்றும் எட்டுநூல்களையும் அயாசித வ்ரதம் பூண்டு அச்சியற்றினேன். ஆசார்யாளது நூல்களையும் தமிழில் வெளியிட பேராவாகொண்டேன்.

இதை ஒரு பொருட்டாக எண்ணிக் கடாக்ஷித்து ஸ்ரீமுகத்தையும், அப்ரார்த்திதமாக ரூ. 25யும் அருள்புரிந்த ஸ்ரீகாமகோடி பீடாதிபதி ஸ்ரீ சங்கராசார்ய ஸ்வாமிகள் திருவடியைப் பன்முறைப்பணிந்து எங்கள் ஹ்ருதய கமலாலயத்தில் வைத்துப் பூஜிக்கின்றோம். மிக அழகான முக

வுரை எழுதிய ஸ்ரீமான் மஹோபதேசக K. S. ராமஸ்வாமி சாஸ்திரிகளை என்றும் பாராட்டுகிறோம்.

எனக்கு உத்ஸாஹ மளித்து தனது ஸம்ஸ்க்ருத புத்தகாலயத்தை என்வசமாக்கிய ஸ்ரீமான் T. R. வேங்கடராமய்யர் B.A., B.L., அவர்களையும், பணப்பொறுப்பை ஏற்று பிரசுரிக்க முன்வந்த ஸ்ரீமான்களான ராமசந்திர சாஸ்திரியையும் கங்காதரய்யரையும் மறக்க முடியாது.

நான் இதை வெளியிடப்போகிறேன் என்பதைப் பத்ரிகைகளில் கண்டு எப்படியிருக்கும் என்றுகூட பாராமல் என்னிடம் நம்பிக்கைகொண்டு சந்தாத்தொகையை மணியார்டர் மூலமனுப்பி ஆதரித்த அன்பர்களுக்கு நன்றிபல. சந்தாதாரர்களது பேருதவிக்குக் கைம்மாறேது?

தொழின்முறையிலல்லாது பக்திச்ரத்தையுடன் இதை அச்சிட்ட கார்லண்டு கம்பெனி சொந்தக்காரர்களுக்கு ஈசனருள் பெருகுக.

இந்நூலில் கண்டதுதான் ஸ்ரீ சங்கர உபதேசம்; மற்றவை அல்ல என்று யான் நினைக்கவில்லை. சிற்றறிவிற்கேற்றதைத் தொகுத்தேன். பலவகையில் பிழைகள் நேருவது ஸஹஜமே. ஈசனருளால் இரண்டாம் பதிப்பு வருமாயின் அன்பர்கள் அனுப்பும் அபிப்ராயத்திற்கேற்ப பிழைகளை யகற்றி அச்சிடுவோம். குருசரணம் சரணம்

சாந்தாச்ரமம்
154, தம்புசெட்டி வீதி,
சென்னை.

பண்டிதபாத பாம்ஸு
ஸ்ரீவத்ஸ வே. ஸோமதேவ சர்மா.

# விஷய ஸூசிகை.

HADDON AND CO., PRINTERS, MADRAS.

அமரகலா விலாஸினி மலர் 9.

# ஸ்ரீ சங்கரோபதேச ரத்னம்.



ப்ரஜோத்பத்தி௵ வருஷ சந்தா 2-0-0.

Garland & Co., Madras.

உ

# அவதாரிகை.

அறிவுடையீர் !

பெறுதற்கரிய மானிடப் பிறவியைப் பெற்றோர், பிறவிப் பயனை பெறவேண்டுமாயின், பிறப்பிறப்பெனும் பெரும் பவக்கடலை கடந்து பேரானந்தம் பெற முயற்சிக்க வேண்டும். இத்துறையில் ஈடுபட ஸ்தோத்ரம் முதல் பிரும்மஸூத்ரம் வரை எண்ணிறந்த நூல்கள் நம் நாட்டில் வழிகாட்டிகளாய் விளங்குகின்றன. இவ்வெல்லா நூல்களுக்கும் தலையாய் விளங்குவது வேதமென எல்லோருமறிந்த உண்மை. அவ்வேதம் கர்ம காண்டம், உபாஸனா காண்டம், க்ஞான காண்டமென மூவ்வகைப்படும். முன்னிரண்டும் பின்னுள்ள காண்டத்திற்கு ஸாதகமாம். அதை வேதாந்தம் அல்லது உபநிஷத் என்பர் பெரியார். இதில் ஆத்மா, ஜீவன், மாயை, அதை அகற்றும் வழி ஆன்ம ஸாம்ராஜ்யம் பெறும் மார்க்கம் இதுபோன்ற விஷயங்கள் விளக்கப்பட்டிருக்கின்றன.

உலகமனைத்தும் நச்வரமென உணர்ந்து ஆணுவத்தை அகற்றி காமக்ரோதங்களைக் களைந்து, வேதாந்த விசாரம் செய்தலொன்றே மோக்ஷமெனும் பேரானந்தத்திற்கு வழி, வேறு வழியில்லையென உபநிஷத்துகள் உத்கோஷிக்கின்றன. இவ்வழி, காலம், கலி, விசேஷமாக பௌத்த மதம் முதலிய புற்பூண்டு முட்செடி கொடிகளால் மறைபட்டது. எனவே இம்மார்க்கத்தின் கோடி வழியான

கர்ம காண்டத்தால் வரும் உணவைப் பெறாது தேவர் தவித்தனர். ஆடி ஓடி அலைந்துத் திரிந்து அல்லல்படும் உலகமனைத்தையும் தமக்குள்ளே லயமாக்கி ஜாக்ரத் ஸ்வப்ந ஸுஷுப்தி எனும் மூன்றவஸ்தைக்கு மேலான துரீய நிலையில் வைக்கும் துரீய மூர்த்தியாய் சுத்த ஸத்வகுணனாய் வெள்ளை விபூதியணிந்து வெள்ளையங் கிரியிலே வீற்றிருக்கும் எம்பிரானை சரணமென அண்டினர்.

கருணைக் கடலான அந்த ஞானமூர்த்தி இன்றைக்குச் சற்றேறக்குறைய இரண்டாயிர மாண்டுகளுக்கு முன்னர், காலடியில் ஸ்ரீ சங்கர குருவாக அவதரித்து கன்யாகுமரி முதல் காசிவரைப் பலமுறைச்சென்று மலிந்த வழியைச் செப்பனிட்டனர். அன்னாரது அபூர்வமான சரிதத்தை தனியாக நாமெழுதிய "ஸ்ரீ சங்கர குரு சரிதம்" என்பதில் காணலாம். எல்லோரும் இன்பமுற அவரவர் பரிபாகத்திற்கேற்க பற்பல நூல்களை யியற்றியுள்ளார் இவ்வவதார புருஷர். இதில் சில தற்சமயம் அச்சிடப்பட்டிருக்கின்றன. இவைகளின் பெயரே பலர் காதுக்கெட்டியிராது. ஆதலின் இவைகளை கேட்டறிவதும் மிகப் பயனுள்ளதென அவைகளின் பெயரை குறிப்பிடுகிறோம்.

பத்து உபநிஷத் பாஷ்யம், கீதா பாஷ்யம், ஸூத்ர பாஷ்யம், ந்ருஸிம்ஹ தாபோபநிஷத் பாஷ்யம், லலிதா த்ரிசதீ பாஷ்யம், ஹஸ்தாமலகீய பாஷ்யம், விவேக சூடாமணி, உபதேச ஸாஹஸ்ரீ, அபரோக்ஷாநுபூதி, வாக்ய விருத்தி, ஸ்வாத்ம நிரூபணம் ஆத்ம போதம், சதச்லோகி, தசச்லோகி, ஸர்வ வேதாந்த ஸித்தாந்த ஸாரஸங்க்ரஹம், ப்ரபோத ஸுதாகரம், ஸ்வாத்ம ப்ரகாசிகா, மநீஷா பஞ்சகம், அத்வைத பஞ்சரத்நம், நிர்வாண ஷட்கம், அத்வைதாநுபூதி, பிரும்மாநு சிந்தநம், ப்ரச்நோத்தர ரத்ந மாலிகா, ஸதா சாராநு ஸந்தாநம், யோக தாராவளி, உப

தேச பஞ்சகம், தன்யாஷ்டகம், ஜீவன்முக்தானந்தலஹரி, அநாத்மஸ்ரீ விகர்ஹண ப்ரகரணம், ஸ்வரூபாநு ஸந்தானம், யதி பஞ்சகம், பஞ்சீ கரணம், தத்வோபதேசம், ஏகச்லோகி, மாயா பஞ்சகம், ப்ரௌ டானுபூதி, பிரும்மக்ஞானவலீ மாலா, லகுவாக்ய விருத்தி, நிர்வாண மஞ்ஜரி, ப்ரபஞ்சஸாரம் முதலிய பாஷ்ய ப்ரகரணங்களும், கணேச, சுப்ரமண்ய, ஈச்வர,தேவி, விஷ்ணு, கங்கா, யமுநாதி ஸ்தோத்திரங் களுமாம்.

இவைகளைக் கற்றுணர கூறிய புத்தியும் பாஷாக்ஞானமும் சதுச் சாஸ்திர பாண்டித்யமும், நீண்டகாலமும், தக்க ஆசார்யனும், இடைவிடாத ஊக்கமும் வேண்டுமன்றோ? ஒவ்வொரு பொருளின் தாரதம்யத்தையறிய ஒப்பற்ற ஸாதனமான மனத்தையும், ஐம்புலன் களையும், கைகால் முதலிய கர்மேந்திரியங்களையும் பெற்ற இவ்வுட லுள்ளபோதே நமக்கென அன்புடன் நாம் நற்கதி பெருமாறு ஜகதா சார்யர் அருளிய இன்னூல்களை அறியாவிடின் நமது பிறவி பசு பக்ஷிகளைவிட எவ்வகையில் உயர்ந்ததாகும்? வயிற்றை வளர்க்கவும் மக்களைக் காக்கவும் நமது ஆயுளில் பெரும்பாகம் சென்று விடுகிறது. மிகுதியிருந்தால் அக்காலத்தையுங் கொள்ளை கொள்ள தாத்காலிக மான பற்பல ஸாதனங்களிருக்கின்றன. ஆனால் உயிரைவிட மதத்தை மதிக்கும் மஹா உத்தமர்களும், லௌகிக கார்யத்திற்கு மிகுதியாக கிடைத்த அவகாசத்தை மத விஷயத்தில் செலவிடும் மத்யமர்களும் மாநிலத்தி லில்லாமலில்லை.

அத்தகையோர் வடமொழி பயின்று சாஸ்திரார்த்தங்களை உணரத்தக்க அவகாசம் பெறுவது துர்லபமென்றெண்ணி எல்லோ ரும் எளிதில் உணருமாறு ஜகதாசார்யர் நூல்களிலுள்ள உபதேச மதுவை மதுரம்போல் மதுரமான தென்மொழியில் ஸாரங்களை மாத்திரம் திரட்டி மாத சஞ்சிகை எனும் தேனடையில் வெளியிட விரும்புகிறோம்.

மலரில் நாவுக்கு மதுவேயின்றி கண்ணுக்கிசைந்த உருவ அழகும் நாஸிகைக்கேற்ற நல்மணமும் இருப்பதுபோல் எல்லா சுவையும் நிறையப்பெற்ற ஸ்ரீ மதாசார்ய நூலில் எதை எடுப்பது எதை விடுவதென்ற விஷயம் மிகக் கஷ்டமானதே. ஆயினும் எது எளிதில் எல்லோருள்ளத்தும் பசுமரத்தாணிபோல் பதியுமோ அத்தகைய அத்புத மொழிகளையே இங்கு வெளியிட உள்ளங்கொண்டோம். குற்றத்தை யகற்றி குணத்தைக் கொள்வீராக.

இவ்வுத்தம கைங்கரியத்திலீடுபடுவோர் வருடமோர் முறை இரண்டு ரூ. (2-0-0) கொடுத்து போஷகராகச் சேரின் மாதமோர் ஸஞ்சிகையாக எவரையும் அதிகக் கஷ்டப்படுத்தாமல் புத்தகம் வெளியாகும். இப்பாவன வேலையைக் கைகொள்பவர், மிகப் பெருமை வாய்ந்த இது, நாவலைப்போல் எல்லோரகத்தும் புகுந்து பிரசுரிப்பவருக்கு ஐஹிக சுகத்தை அதிகம் தராதென உணராமலிருக்க முடியாது. ஆதலால் வியாபார நோக்கமின்றி தோரணையில்லாமல் ஆசார்ய தொண்டில் அவாகொண்டே இத்துறையிலிறங்குகிறோம். ஆஸ்திகாளனைவரும் அன்புடனிதில் தாங்கள் சேருவதோடு நண்பர்களைப் படிக்கும்படி செய்து பரமாசார்யாளின் அநுக்ரஹத்திற்கும் பாத்திரமாகி போராநந்தத்தைப் பெறுமாறு பிரார்த்திக்கிறோம்.

இங்ஙனம்,

ஸஜ்ஜந விதேயர்கள்,

ஸ்ரீவத்ஸ. வே. ஸோமதேவ சர்மா, (திரட்டுபவர்).

,, ல. ராமசந்திர சாஸ்திரி, (பிரசுரிப்பவர்).

# ஸ்ரீ சங்கரோபதேச ரத்னம்.

**ஸ்தோத்ராதி ஸூத்ரபாஷ்யாந்த ஸூக்திரத்னைஸ்ஸுதுர்லபம்,**
**தர்சயாமாஸ யோத்வைத மார்க்கம் தம் ப்ரணமாம்யஹம்.**

ஸ்தோத்ரம் முதல் ஸூத்ரபாஷ்யம் வரையிலுள்ள ஸூக்தி ரத்னங்களால் மிகவும் துர்லபமான அத்வைத மார்க்கத்தை எவர் காட்டினாரோ அவரை யான் நமஸ்கரிக்கிறேன்.

(ஏகச்லோகீ ஒரே சுலோகம் கேள்விக்குப் பதில் வடிவம்).

1. எந்த ஜ்யோதியால் நீ உலகைக் காண்கிறாய்? பகலில் சூர்யன், இரவில் தீபம் முதலியவற்றால் காண்கிறேன். சூர்யன் முதலியவைகளை விளக்கும் ஜ்யோதிஸ் எது? கண். கண் மூடியிருந்தால்? புத்தியைக் கொண்டு காண்கிறேன். அதைக் காண்பதெது? 'நான் என்பது. ஆதலால் நான் எனக்கூறும் நீதான் ஜ்யோதிஸ். அதே ஆத்மா. அதுதான் எல்லாவற்றையும் விளக்கும் ஜ்யோதிஸ்.

## உபதேச பஞ்சகம்.

2. வேதத்தை எப்போதும் ஓது. அது கூறிய கர்மாவை நன்கு அநுஷ்டானம் செய். அக்கர்மாவே ஈசனுக்குச் செய்யும் பூஜை. காம்ய விஷயத்தில் ஆசையை அகற்று. குவிந்த பாபத்தை நீ கர்மாநுஷ்டானத்தால் களை. இல்லறத்தில் உள்ள துக்கத்தை யோசித்துப் பார். பரமாத்மாவினிடம் ஆசை வை. ஸம்ஸாரத் தொல்லையிலிருந்து சீக்ரமாக கிளம்பு.

3. ஸாதுக்களுடன் சேர். பகவானிடத்தில் ஆழ்ந்த அன்பைச் செலுத்து. பொருமையை அப்யாஸம் செய். பயனற்ற கர்மாவை விடு. ஸத் வித்வானைத் தேடிச்செல். ப்ரதிதினம் அவன் பாதுகையை ஸேவி. பிரும்மத்தைக் கூறும் ப்ரணவமெனும் ஓர் அக்ஷரத்தை வேண்டு. வேதாந்த வாக்யத்தைக் கேள்.

4. அவ் வாக்யத்தின் அர்த்தத்தை விசாரி. வேதாந்தத்தின் கருத்தைக் கைகொள். வீண் வாதம் செய்யாதே. வேதங்கூறிய தத்துவத்தில் உன்னுடைய யுக்தியைச் சேர்த்து யோசி. நான் பிரும்மம் என தினந்தோறும் அநுஸந்தானம் செய். கர்வத்தை விடு. உடலில் நான் எனும் எண்ணத்தை அகற்று. பண்டிதர்களோடு வாதம் செய்யாதே.

5. பசியைப் பிணியாக எண்ணி பரிஹாரம் செய். ருசி பார்த்து நாக்கை வளர்க்காதே. பிக்ஷையையே அதற்கு மருந்தாகக் கொள். ருசியான பதார்த்தத்தை யாசிக்காதே ? தைவச்செயலாக கிட்டியதைக்கொண்டு ஸந்தோஷப்படு. சீதோஷ்ணஸுக துக்கங்களைப் பொறுத்துக்கொள். வீணாகப் பேசாதே. உதாஸீனனாயிரு. எதிலும் தலையிடாதே. ஒருவரிடத்தில் தயை ஒருவரிடத்தில் நிஷ்டூரம் வேண்டாம்.

6. ஏகாந்தத்தில் சுகமாக வீற்றிரு. பரமனிடத்தில் மனதைச் செலுத்து. எங்கும் நிறைந்ததாக ஆத்மாவைப் பார். ஜகத்தெல்லாம், அவ்வான்மாவை அறிந்தபிறகு மறைந்துபோம். ஞானத்தால் ஸஞ்சிதம் ஆகாமி எனும் கர்மாக்களை ஒழி. பிராரப்தத்தை அநுபவி. பரப்ரம்மமாக இரு. (பல ஜன்மங்களிலும் சேர்த்து வைத்த பாபம் ஸஞ்சிதம், தற்சமயமநுபவிப்பது பிராரப்தம். இனிமேல் செய்து வரப்போகிறது ஆகாமியாம்.)

## மாயா பஞ்சகம்.

7. ஒப்பற்ற நித்ய அகண்ட சின்மயமான ஆன்மாவாக நாமிருக்க ஜீவன் ஈசன் உலகம் என பின்னப்படுத்தியது மாயையன்றோ ? சூர்யனைப்போல் பிரகாசிக்கும் ஆன்மாவை மறைக்கும் ஸாதனமான கார்யத்தைச் செய்யும் சக்தி இம் மாயைக்குண்டு.

8. ஆயிரம் வேதாந்த சொற்களை அலசிப் பார்த்தவரையும், தநத்தைக் கண்ணால் கண்டவுடன், அவ்வேதாந்தத்தை மறந்து பசுக்களைப்போல் விவேகமற்றவராகச் செய்வது மாயை.

9. ஸுகவடிவனும் அகண்டபோதமாய் அத்விதீயமாயுள்ள ஆன்மாவை ஆகாசம் வாயு முதலியவைகளைக் கொண்டு, கல்பிதமான ஸம்ஸார ஸாகரத்தில் மூழ்க்வைத்து ஆட்டிவைப்பது இம் மாயையன்றோ?

10. வர்ணம், ஜாதி, குணம் முதலியவை ஆத்மாவிற்கில்லை. ஸுகமயமான வஸ்து அது. அவனிடத்தில் நான் பிராமணன், நான் க்ஷத்ரியன் என அஹங்காரத்தை உண்டுபண்ணி, புத்ரன் களத்ரம் வீடு முதலியவைகளிடத்தில் மோஹத்தையுங் கற்பித்த ஸாமர்த்யம் வாய்ந்ததிந்த மாயை.

11. அகண்டமான ஆத்மாவினிடம் ஹரிஹரன் பிரும்மா என பேதத்தைக் கல்பித்தது, நான் வைணவன் நான் சைவன் என பண்டிதர்களையுமாட்டிவைப்ப திம்மாயை.

## யதி பஞ்சகம்.

12. வேதாந்த வாக்யங்களில் எப்போதும் ரமிப்பார். பிக்ஷான்னத்தினாலே ஸந்தோஷமடைவர். சோகமோஹத்தை கவனிக்க மாட்டார். புத்தி வியாபாரம் ஒன்றை மாத்திரம் பிரம்மத்தினிடம் செலுத்துவார். இவரே பாக்யவானான ஸன்யாஸி.

13. மரத்தடியில் படுத்து கையில் பிக்ஷையேந்தி ஐச்வர்யத்தைக் குப்பையாகக் கருதும் ஸந்யாஸி பாக்யவான்.

14. உடலை மறந்து தன்னைத் தானே கண்டு வேறொன்றையும் உள்ளும் புறமும் நினையாதவன் பாக்யசாலி.

15. ஆத்மானந்தத்தில் களித்து இந்திரிய வியாபாரங்களனைத்தையுமடக்கி இரவும் பகலும் பிரம்மத்தில் ரமிப்பவனன்றோ பாக்யசாலி.

16. பவித்ரமான பஞ்சாக்ஷரியை ஜபித்து பசுபதியை மனதிலே இருத்தி பிக்ஷையெடுத்து திக்கு திக்காக திரியும் ஸந்யாஸி பாக்யவான்.

## அத்வைத பஞ்சரத்னம்.

17. நான் என்பது தேஹமல்ல, இந்திரியமல்ல, அஹங்கார மல்ல, பஞ்சப்ராணமுமல்ல. புத்ரகளத்ர க்ஷேத்ராதிகளுக்கு ஆரத்தி லுள்ள ஸாக்ஷியாய் ப்ரத்யகாத்மாவாயுள்ள சிவனென்பதே நான்.

18. புழுதை என்றறிவில்லாததால் பாம்பென்றெண்ணம் தோன்றுகிறது. அதேபோல் ஆத்மா என்றுணராததால் அதை ஜீவ னென்கிறாய், ஆப்தனது மொழியால் பாம்பெனும் அக்ஞான மொழிவது போல் குருபதேசத்தால் ஜீவனல்ல சிவனென உணர்வாயாக.

19. ஸத்ய க்ஞானாநந்த ரூபமான ஆத்மாவினிடத்தில் மோஹத்தினால் தூக்கத்தில் கினவு தோன்றுவதுபோல் அஸத்யமான எல்லா உலகும் தோன்றுகிறது. ஆனால் சுத்த பூர்ண நித்ய ஏக வஸ்துவாய் இருப்பது சிவனே.

20. பிறப்பு வளர்தல் இறத்தல் முதலியவைகள் தேஹதர்ம மாகும். செய்கிறேன், புஜிக்கிறேன் என்பதெல்லாம் சுத்தாத்மாவி னிடம் தோன்றாது.

21. ஆத்மாவைத் தவிர வேறு ஸத்யமான வஸ்து வேறொன்று மில்லை. ஆனால் தோன்றுபவை எல்லாம் மாயையால் கல்பிக்கப்பட் டதே. பிரதி பிம்பம் கண்ணாடியில் தெரிவதுபோல் ஆத்மாவின் நிழலே இது.

## மநீஷா பஞ்சகம்.

[காசியில் விச்வநாதர் சண்டாளவடிவமாக வந்து அநுபவவேதாந் தியா என சோதித்தபோது சொல்லியவை.]

22. விழித்திருத்தல் கினவு தூக்கம் என்ற காலங்களில் எந்த அறிவு நான் என விழித்திருக்கிறதோ எது பிரும்மாமுதல் எறும்புவரை எல்லோரிடத்தும் நான் என ஜகத்ஸாக்ஷியாக பார்த்து கிற்கிறதோ அதுதான் நான் என்பது. காணும் வஸ்துக்க ளல்ல என எவனுக்கு நிச்சயமான புத்தியிருக்கிறதோ அவன் சண்டாளனாயினும், பிராம்மணனாயினும் எனது குருவே.

23. இந்த ஜகத்தெல்லாம் பிரும்மமே. ஸத்வம்ரஜஸ்தமஸ் என்றமுக்குணமுள்ள மாயையால் இந்த நாமரூபம் நித்ய நிர்மலமான ஆத்மாவினிடத்தில் கல்பிதம், இவ்வுடம்பு அறிவற்றவைகளும் என் குருவே.

24. காணப்படும் வஸ்துக்கள் எல்லாம் நிச்சயமாக அழிவுள்ளவை. அழிவற்ற பொருள் பிரும்மம் ஒன்றே என ஆசார்யனுபதேசத்தைக் கொண்டு சுத்தமநதால் விமர்சை செய்து க்ஞானச் சுடரால் ஸஞ்சிதம் ஆகாமி எனும் கர்மத்தை எரித்து பிராரப்தத்திற்காக இவ்வுடல் எனும் எண்ணமுள்ளவரே குரு.

25. பசுபக்ஷி மனிதர் தேவர் முதலியவைகளால் எது நான் என கிரஹிக்கப்படுகிறதோ, எதன் ஒளியால் அசேதனமான மனம் இந்திரியம் உடல் முதலியன பிரகாசிக்கின்றதோ, மேகத்தால் சூர்ய மண்டலம்போல் அசேதக வஸ்துக்களால் மறைக்கப்பட்டு கிடக்கும் அத்யோதிஸ்வை நியாசம் [illegible]

26. எந்த ஆனந்தக்கடலின் [illegible] இந்திரன் முதலியோர் சுகம் பெறுகின்றனரோ, எதை சாந்தமான மனதில் வைத்து முனிவர் சுகம் பெருகிறாரோ, எதனிடத்தில் லயமானவர் தன்மய மாகிறாரோ, அப்படிப்பட்ட அறிவுள்ளவனை இந்திரனும் காலில் விழுந்து பணிவான்.

## நிர்வாண ஷட்கம்.

27. நான் என்பது மனஸ்புத்தி அஹங்காரம் சித்தம் இவைகளல்ல. காது நாக்கு மூக்குமல்ல. பிருதிவி தேஜஸ் வாயு ஆகாசமுமல்ல. சித்தாய் ஆநந்தமாய் சிவமாய் இருப்பவன் நான்.

28. பிராணன், பஞ்சவாயு, ஸப்த தாது (ரஸ ரத்த மாம்ஸ மேதஸ் மஜ்ஜா அஸ்தி ரேதஸ்). அன்ன ப்ராண மனோ விக்ஞான ஆனந்தமெனும் ஐந்து கோசமும் வாக்பாணி பாதம் பாயு உபஸ்த (ஜலமலம் கழிக்கும் கருவியு) மல்ல நான்.

29. த்வேஷராகம், லோபமோஹம், மதமாத்ஸர்யம் தர்ம அர்த்தகாம மோக்ஷம் இவைகளல்ல நான்.

## அத்வைத பஞ்சரத்னம்.

17. நான் என்பது தேஹமல்ல, இந்திரியமல்ல, அஹங்கார மல்ல, பஞ்சப்ராணமுமல்ல. புத்ரகளத்ர க்ஷேத்ராதிகளுக்கு தூரத்தி லுள்ள ஸாக்ஷியாய் ப்ரத்யகாத்மாவாயுள்ள சிவனென்பதே நான்.

18. பழுதை என்றறிவில்லாததால் பாம்பென்றெண்ணம் தோன்றுகிறது. அதேபோல் ஆத்மா என்றுணராததால் அதை ஜீவ னென்கிறாய். ஆப்தனது மொழியால் பாம்பெனும் அக்ஞான மொ ழிவது போல் குருபதேசத்தால் ஜீவனல்ல சிவனென உணர்வாயாக.

19. ஸத்ய க்ஞானாநந்த ரூபமான ஆத்மாவினிடத்தில் மோ ஹத்தினால் தூக்கத்தில் கனவு தோன்றுவதுபோல் அஸத்யமான எல்லா உலகும் தோன்றுகிறது. ஆனால் சுத்த பூர்ண நித்ய ஏக வஸ்துவாய் இருப்பது சிவனே.

20. பிறப்பு வளர்தல் இறத்தல் முதலியவைகள் தேஹதர்ம மாகும். செய்கிறேன், புஜிக்கிறேன் என்பதெல்லாம் சுத்தாத்மாவி னிடம் தோன்றாது.

21. ஆத்மாவைத் தவிர வேறு ஸத்யமான வஸ்து வேறொன்று மில்லை. ஆனால் தோன்றுபவை எல்லாம் மாயையால் கல்பிக்கப்பட் டதே. பிரதி பிம்பம் கண்ணாடியில் தெரிவதுபோல் ஆத்மாவின் நிழலே இது.

## மநீஷா பஞ்சகம்.

[காசியில் விச்வநாதர் சண்டாளவடிவமாக வந்து அநுபவவேதாந் தியா என சோதித்தபோது சொல்லியவை.]

22. விழித்திருத்தல் கனவு தூக்கம் என்ற காலங்களில் எந்த அறிவு நான் என விழித்திருக்கிறதோ எது பிரும்மாமுதல் எறும்புவரை எல்லோரிடத்தும் நான் என ஜகத்ஸாக்ஷியாக பூர்ந்து நிற்கிறதோ அதுதான் நான் என்பது. காணும் வஸ்துக்க ளல்ல என எவனுக்கு நிச்சயமான புத்தியிருக்கிறதோ அவன் சண்டாளனாயினும், பிராம்மணனாயினும் என் து குருவே.

23. இந்த ஜகத்தெல்லாம் பிரும்மமே. ஸத்வம்ரஜஸ்தமஸ் என்றமூக்குணமுள்ள மாயையால் இந்த நாமரூபம் நித்ய நிர்மலமான ஆத்மாவினிடத்தில் கல்பிதம். இப்படிப்பட்ட அறிவுள்ள எவனும் என் குருவே.

24. காணப்படும் வஸ்துக்கள் எல்லாம் நிச்சயமாக அழிவுள்ளவை. அழிவற்ற பொருள் பிரும்மம் ஒன்றே என ஆசார்யனுபதேசத்தைக் கொண்டு சுத்தமநதால் விமர்சை செய்து க்ஞானச் சுடரால் ஸஞ்சிதம் ஆகாமி எனும் கர்மத்தை எரித்து பிராரப்தத்திற்காக இவ்வுடல் எனும் எண்ணமுள்ளவரே குரு.

25. பசுபக்ஷி மனிதர் தேவர் முதலியவைகளால் எது நான் என கிரஹிக்கப்படுகிறதோ, எதன் ஒளியால் அசேதனமான மனம் இந்திரியம் உடல் முதலியன பிரகாசிக்கின்றதோ, மேகத்தால் சூர்ய மண்டலம்போல் அசேதக வஸ்துக்களால் மறைக்கப்பட்டு கிடக்கும் அஜ்யோதிஸ்ஸை தியானம் செய்யும் யோகியே குரு.

26. எந்த ஆனந்தக்கடலின் திவிலையின் திவிலையால் இந்திரன் முதலியோர் சுகம் பெறுகின்றனரோ, எதை சாந்தமான மனதில் வைத்து முனிவர் சுகம் பெருகிறாரோ, எதனிடத்தில் லயமானவர் தன்மய மாகிறரோ, அப்படிப்பட்ட அறிவுள்ளவனை இந்திரனும் காலில் விழுந்து பணிவான்.

## நிர்வாண ஷட்கம்.

27. நான் என்பது மனஸ்புத்தி அஹங்காரம் சித்தம் இவைகளல்ல. காது நாக்கு மூக்குமல்ல. பிருதிவி தேஜஸ் வாயு ஆகாசமுமல்ல. சித்தாய் ஆநந்தமாய் சிவமாய் இருப்பவன் நான்.

28. பிராணன், பஞ்சவாயு, ஸப்த தாது (ரஸ ரத்த மாம்ஸ மேதஸ் மஜ்ஜா அஸ்தி ரேதஸ்). அன்ன ப்ராண மநோ விக்ஞான ஆனந்தமெனும் ஐந்து கோசமும் வாக்பாணி பாதம் பாயு உபஸ்த (ஜலமலம் கழிக்கும் கருவியு) மல்ல நான்.

29. த்வேஷராகம், லோபமோஹம், மதமாத்ஸர்யம் கர்ம அர்த்தகாம மோக்ஷம் இவைகளல்ல நான்.

30. பாப புண்யம் சுக துக்கம் மந்த்ர தீர்த்தம் வேத யக்ஞம் உணவு உண்ணத்தக்கது உண்பவன் இவைகளுக்கு அதீதமாக ஆனந்தமாயுள்ளது ஆத்மா.

31. யமன் பயம் ஜாதி தந்தை தாய் பிறப்பு பந்து மித்ரன் குரு சிஷ்யன் இப்பேதமற்று ஆனந்தமாயுள்ளது ஆத்மா.

32. நிர்விகல்பமாய் உருவற்றதாய் எங்கும் நிறைந்து எல்லா வற்றிலும் தங்கி பந்தமோக்ஷமற்றதாய் ஆனந்தரூபமாய் விளங்குவ தாத்மா.

## தன்யாஷ்டகம்.

33. அறிவென்பது யாது? புலன்களை அடக்குவதே. அறி யத்தக்கது எது? உபநிஷத்தில் நிச்சயிக்கப்பட்ட பரம்பொருளே. அப்பரம்பொருளில் அடங்காத அவா கொண்டோரே மேலானவர். மற்றவர் ஸம்ஸார சுழலில் சுழல்வோர்.

34. ராகத்வேஷ மதமோஹம் முதலிய சத்ருக்களை ஜெயி. ஆசையில்லாத ஸ்வதர்மமெனும் ராஜ்யத்தைப் பிடி. உனக்கு வேண் டியது சுகம் என உணர். ஆத்மவித்யை எனும் மனைவியை மணந்து வநமெனும் வீட்டில் வஸி. நீ தன்யனுவாய்.

35. கேவல ஸம்ஸாரத்தையே சுகமாக எண்ணி உழைப்பவன் நாஜன்மத்திலும் தாழ்ந்த ஜன்மாவைப் பெறுவான். ஆதலால் ஆத்மாவினிடம் ஆசைகொள். உபநிஷத்திலுள்ள ரஸத்தைப்பருகு. விஷய சுகத்தை வெறுத்துத் தள்ளு. பற்றுதலை விட்டு ஏகாந்தமா யிரு. பேரானந்தம் பெறுவாய்.

36. நான் என்னுடையது என்பவை நம்மை பந்தப்படுத் தும் சங்கிலி. அதை அறு. மான அவமானங்களை ஸமமாக எண்ணு. நீ காணும் வஸ்துவினிடம் பிரும்மம் ஸமமாயிருப்பதாக நினை. நம்மை ஆட்டிவைப்பவன் வேறொருவன் என அறிந்து உன் கர் மாவிற் கேற்றபடி அவனளிக்கும் பயனைப்பெற்று சுகமாக வாழ்.

37. புத்ரன் மனைவி பொருள் இம்மூன்றாசைக்கும் ஈஷணாத் ரயமெனப் பெயர். அதைக்களை. மோக்ஷமார்க்கத்தை தேடு.

ஆஹாரத்திற்கென் செய்வதென்று கலங்காதே. கையேந்தி பிக்ஷை எடு. பரமாத்மாவெனும் சுடரை உன் உள்ளத்தே பார்.

38. ஆத்மா இல்லையென்றில்லை இருக்கிறதென்றுமில்லை. இல்லாமலிருப்பதென்றுமில்லை மஹத்து மணுவுமல்ல. பெண்ணு மாணும் நபும்ஸகமுமல்ல, என்றுணர்ந்து அகண்டமான பொருளை ஏகாக்ர சித்தனயிருந்து உபாஸி. இல்லையேல் ஸம்ஸார பாசமுன்னைக் கட்டிவிடும்.

39. இந்த ஸம்ஸாரம் அக்ஞானமெனும் சேற்றினல் பூசப்பட்டது. ஸாரமில்லாதது. அலசிப்பார்த்தால் துன்பம் நிறைந்தது. பிறப் பிறப்பு பிணி ஜரைகளால் சூழப்பட்டது. இப்பாசத்தை அறிவெனும் கத்தியால் அறுத்துத் தள்ளு.

40. அடக்கமுள்ளவர். பிரும்மத்தைத் தவிற மற்றதை எப்போதும் எண்ணுதவர். நல்ல ஸ்வபாவமுள்ளவர். கடவுள் ஒன்றே என நிச்சயமுள்ளவர். மோஹமற்றவர். இவரே பெரியார். இவருடன் சேர்ந்து வநத்தில் வஸித்து பரமாத்மாவின் பதத்தை தேடு.

## ஸ்வரூபாநு ஸந்தாஷ்டகம்.

41. உபவாஸம் ஸத்யம் வேதமோதல் முதலிய தவத்தாலும் தேவர்களைக் குறித்துச் செய்யும் பூஜை ஹோமம் முதலிய யாகத்தாலும் தானத்தினுலும் சித்தத்தை சுத்தமாக்கு, ராஜபதவியும் துச்சமானதென்றெண்ணு. எல்லாவற்றையுந் துறந்தபின் நித்யமாய் உன்னுள்ளே விளங்கும் ஓர் பொருள். அதே நான் என உணர்வாய்.

42. அடக்கமும் தயையுமுள்ள பிரும்மநிஷ்டரான குருவைத் தேடி பூஜை செய். அவர் கூறும் பிரும்மத்தை உன் புத்தியால் விசாரி. இடைவிடாது அதை மனதில் நினை. நீயே பிரும்மமென உணர்.

43. ஆனந்தமாய் பிரகாசமாய் அளவற்றதாய் பிரபஞ்சத்திற்கு மேலாகத் தோன்றுமாத்மாவே நான் என பலமுறை ஓயாது உணர்ந்தால் நீயே துரீய பிரும்மமாக நிற்பாய்.

44. அப்பரம்பொருளை யுணராக குற்றத்தால் நீ உலகைக் காண்கிறாய். அதை உணர்ந்தால் உலகம் அதில் ஒளிந்துவிடும். மனதுக்கும் வாக்குக்கும் எட்டாது சுத்தமாய் பந்தமற்று நிற்பது பரம்பொருள்.

45. வேதாந்த வாக்யங்கள் இதில்லை இதில்லை என எல்லாவற்றையும் தள்ளியபோது ஸமாதியிலுள்ளோர் உள்ளத்தில் பூர்ணமான வஸ்து ஒன்று விளங்கும். அது மூன்றவஸ்தைகளுக்கும் மேலானது. அதே பரமாத்மா.

46. உலகில் நாமனுபவிக்கும் சுகமெல்லாம் பரமானந்தத்தின் ஓர் திவலை. அதனொளியால் உலகம் விளங்குகிறது. அப்பொருளைக் கண்டோமானால் மற்றதெல்லாம் அதனுள்ளே தோன்றும்.

47. பரம்பொருள் முடிவற்றது. எங்கும் பரவியது. விகல்பமற்றது. ஆசையற்றது. ஸங்கமில்லாதது. ஓங்காரத்தா லறியத்தக்கது. உறுவில்லாதது. மரணமற்றது.

48. அது ஆநந்தக்கடல். அதில் மூழ்கியவன் இவ்வுலகமனைத்தும் மாயா விலாஸமென்பான். அவ்வாத்ம நிமித்தமான ஆச்சரியத்தைக் காண்பான்.

49. ஆத்மஸ்வரூபத்தை அநுஸந்தாநம் செய்யும் ஸ்துதிகளை ஆதரவுடன் அர்த்தமுணர்ந்து படிக்கவேண்டும். சொல்லக் கேழ்க்க வேண்டும். சித்தந் தெளிந்தால் பக்தன் தன் மயமாக அதிக காலமாகாது.

## நிர்வாணமஞ்ஜரி. (12 சுலோகங்கள்.)

50. தேவன், மனிதன், ராக்ஷஸன், கந்தர்வன், யக்ஷன், பிசாசம், புருஷன் ஸ்திரீ நபும்ஸகம் என்பதெல்லாம் உடலை ஒட்டிய வ்யவகாரமே தவிற, ஆத்மாவைப் பற்றியதல்ல. ஆத்மாவோ ஸ்வயம் ப்ரகாசனாய் இவைகளுக்குமேலாக நிற்கும் சிவவடிவமாம்.

51. பாலன் யுவா கிழவன் பிரும்மசாரி கிருஹஸ்தன் வானப்ரஸ்தன் ஸந்யாஸி என்பதெல்லாம் தேஹ தர்மமே. ஆன்மா என்பது உலகம் தோன்றி ஒடுங்கும் ஸ்தானமாம்.

52. பிரத்யக்ஷம் அநுமானம் முதலிய பிரமாணங்களால் ஆத்மாவை அறியமுடியாது. மாயா கல்பிதமான வஸ்துக்களையே அவைகள் காட்டும். இவனே மாயையைக் கடந்தவன். அவனைக் காண வேறு உபாயமும் கிடையாது. ஸ்தூல சூக்ஷ்மகாரணமெனும் மூன்று சரீரமுள்ளவனுயினும் அத்விதீயன். இந்திரியங்களுக்கெட்டாதவன். எல்லாமாயிருப்பவன்.

53. ஒரு விஷயத்தை நினைத்து அதை அறிந்து அதைப் பிறரிடம் சொல்லி, அதைச் செய்து பயனை அநுபவித்து, இதெல்லாம் துச்சம் என வெறுத்து நிற்கிறோம், இதெல்லாம் ஆத்மாவின் வேலையல்ல. ஆனால் மனதில் தோன்றும் எண்ணங்களை ப்ரகாசப் படுத்தும் சாக்ஷி ரூபமாய் நிற்பது ஆத்மா.

54. உணவு முதலிய உலக விஷயத்தில் முயற்சிப்பதும் இது நம்மைக் கட்டிவிடும் என அதிலிருந்து விலகி நிற்பதும் ஆத்ம கார்யமல்ல. மனதில் ஆத்ம ஸ்வரூபத்தை அனுஸந்தானம் செய்யாதபோது உலகப்ரவிருத்தி உதிக்கும். எப்பொருளின் நிழல் சித்தத்தில் உதித்து வியவஹாரங்கள்தோன்றுகின்றனவோ அவனே ஆத்மா.

55. மாயைக்கும் எது காரணமோ, உலகைக்கொண்டு எதை ஊகிக்கிறோமோ, எது எல்லா ப்ரகாசத்திற்கும் காரணமோ, அப்பொருளே மெய்ப்பொருள்.

56. புத்தியே எல்லா வ்யாபாரங்களுக்கும் காரணமாயிருப்பதால் அதே ஆத்மா என்பர் சிலர். அதில்லை. அதைவிட ஆத்மா வேறு. இதால் ஆத்மாவிற்கு யாதொரு கார்யவித்தியுமில்லை. அழிவுள்ள அங்கங்களை ஆத்மா என்லாமோ? இல்லை. ஆத்மாவிற்கு ஆண் பெண் என பேதமும் மங்கமுமில்லை. ஆனால் ஹிருதய புண்டரீக ஆகாசத்திலுள்ளது, ஆத்மா. ஆத்யாத்மிகம் ஆதிபௌதிகம், ஆதிதைவிகமெனும் துக்கமில்லாதது.

57. உலகத்தைத் தனியாக உலகமெனப் பார்க்கும்போது உலகில் ஆத்மா மறைந்துவிடுகிறது. ஆத்மாவை கவனிக்கும்போது

அதனுள் உலகம் மறைந்திருக்கும். மனஸ்புத்தி சித்தம் அஹங்காரம் இவைகளைத் தாண்டிவிடுவதாத்மா.

58. உள்ளும் புறமும் நித்யசுத்தமாய் ஒன்றாய் ஸத்சித் ஆனந்தமயமாய் ஸ்தூலஸூக்ஷ்ம உலகைத் தோற்றிவைத்து தனக்குள்ளே லயப்படுத்துவது பரம்பொருள்.

59. ஒளியுள்ள சந்த்ரசூர்யாதிகளுக்கு ஒளியை யளித்து, தனக்குள்ளும் பேதமற்று எல்லா உலகையும் தன் பாதத்தால் (கால் பங்கால்) வியாபித்து சக்தியை நமக்களிப்பது பிரும்மமே.

60. இவ்வான்மாவினிடம் பயந்து யமன் சூர்யன் வாயு முதலியவர்கள் தன் தன் வேலையைச் செய்கின்றனர். சித்தம் புத்தி இந்திரியம் இவைகளுக்கு சக்தியையளித்து ஹரிஹர பிரும்மா என அழைக்கப்படுவதுமாத்மா.

61. ஆகாசம்போல் பற்றற்று எங்கும் நின்று சாந்த சுடர் வடிவமாய் உருவற்று, அடிமுடியில்லா சங்கரனாய் நிற்கும் அப்பொருளை உள்ளத்திலே ஊன்றியுணர்ந்து சுகம்பெறு.

## ஜீவன்முக்தாநந்த லஹரீ. (17 சுலோகங்கள்.)

62. அழகான பட்டணத்தில் நாகரிகம் நிறைந்த ஜனங்கள் மத்தியில் அழகிய சித்ரமமைத்து அதில் உயிரைப் பெற்றவர்போல் பலவகை ஆபரணம் பூட்டிய யுவதிகளிடையே கூடிக்குலாவித் திரிந்தாலும் அம்மோஹத்தில் மாத்திரம் அகப்பட்டுக் கொள்ளாதே. நிச்சயமாக ஆத்ம ஞானம் பெறுவதென நிலைசெய்துக் கொண்டால் தமோ குணம் உன்னைவிட்டுப் பறந்துவிடும்.

63. வாஸனை நிறைந்த புஷ்பம், ருசியான பழம், நிழலடர்ந்த மரம், மதுரமாகப் பாடும் பக்ஷி, இவைக்கண்டு மனஞ் சலிக்கலாகாது. பூமியில் படுத்து பரமனை நினைத்து விஷயத்தை ஜெயி.

64. அரசர் அரண்மனையிலோ தனிகர் மாடியிலோ ஒரு ஸமயம் மலையிலோ, மற்றோர் ஸமயம் நதிக்கரையிலோ பரிசுத்தமான முனிவரது பர்ணசாலையிலோ வஸிக்கும் ஜீவன் முக்தன், பெருமை சிறுமைகளைப் பாரான்.

65. ஓரிடத்தே கைதட்டிக் களியாடும் சிறுவர்களுடன் ஆடுவான். ஓரிடத்தே அழகு நிறைந்த யுவதிகளுடன் ரமிப்பான். மற்றோரிடத்தே ஓயாது குடும்ப விஷயத்தைச் சிந்திக்கும் கிழவர்களுடன் கூடி சிந்திப்பான். ஆனால் எதிலும் மதிமயங்காம லிருப்பான் க்ஞானி.

66. வித்வானுடன் கூடி சர்சை செய்தாலும், கவியுடன் காவ்ய ரஸத்தை உணர்ந்தாலும் தர்க்கிகளுடன் தர்க்கம் புரிந்தாலும் பற்றற்று நிற்பான் பரிபாகமுள்ளவன்.

67. சற்று நேரம் த்யானம் புரிவான். மலர்ந்த மலரெடுத்து பரமனுக்கு பூஜைசெய்து அவர் பாதம் பணிந்து நிற்பான்.

68. அம்பிகே! சம்போ! நாராயணா! கருத்யக்ஷ! வரத! என பகவன் னுமாவளியைக் கூறி கண்ணீர் பெருக பக்தி பரவசனுவான்.

69. கங்கையிலோ கிணற்றிலோ மற்றெந்த ஜலத்திலோ மூழ்கி விபூதியணிந்து இதே புருஷார்த்த மென்றெண்ணுமை விருப்பான்.

70. ஜாக்ரத் ஸ்வப்ன ஸுஷுப்தி எனும் மூன்றவஸ்தையிலும் அனுபவிக்கும் சுகதுக்கங்களில் பற்றற்று நிற்பான்.

71. திகம்பரனுய் நிற்பான். திவ்யாம்பரம் தரிப்பான். புலித்தோலையு முடுப்பான். இவனது அஹங்தையற்ற செயல் சிறுகுழந்தைகள் செயலைப்போல் கண்டோர் மனதை இழுக்கும்.

72. ஸத்வம் நிரைந்திருப்பான். காரணமின்றி ரஜோ குணத்தி லிருப்பான். நிமித்தமின்றி தமோ குணத்தை அடைவான். மூன்றையும் விட்டு நிற்பான். இல்லறத்தில ஈடுபடுவான். துறவறத்தில் புகுவான். மோஹ மென்ப தவனருகே நிற்காது.

73. ஒரு ஸமயம் மௌனியா யிருப்பான். ஓர் ஸம யம் வாதம் புரிவான். ஆனந்தமாக சிரிப்பான். உடனே மௌனியாவான். உலகப்போக்கை விசித்ரமாகக் கவனிப் பான்.

74. ஓர் ஸமயம் மலரை பராசக்தியின் முகத்தில் அர்ப்பணம் செய்வான். தன் வாயால் அதைக் கவ்வித் தானே சக்தியென நிற்பான். இரண்டு மொன்றென்பதை இது விளக்கு மன்றோ? ஆத்மாவைத் தவிர மற்றொன்று மில்லை என்பான்.

75. சைவனோ சாக்தனோ வைணவனோ ஸௌரனோ காணபத்யனோ அவருடன்கூடி எம்மதமும் ஸம்மதமே. ஆன்மா ஒன்றே என ரமிப்பான்.

76. உருவற்று நித்யமாய் நிற்கும் பரம்பொருளென நினைப்பான். குற்றமற்ற நற்குணம் நிறைந்தவனென உபா ஸிப்பான். இஃதென்ன விந்தையெனப் பிரமித்து ஆச்சரி யத்துடன் பார்த்து நிற்பான்.

77. ஆத்மா அத்விதீயனென உணர்ந்திருந்தாலும் ஒரு ஸமயம் மஹா வாக்யார்த்தத்தைக் கூறுவான். சிவ, சிவ எனக் கூறிக்கொண்டே யிருப்பான். இதே ஜீவன் முக்தன் நிலை.

## 12, அநாத்மச்ரீ விகர்ஹணம்.

ஆத்மாவைத் தவிர மற்றவை துச்சமெனல்.

(18 சுலோகங்கள்)

78. அரசர் போற்றும் கல்வி கற்றாய், எண்ணிறந்த செல்வம் பெற்றாய், ஸௌந்தரமான பெண்களை அநுபவித்தாய் இதனால் அழியாப் பேரானந்தம் கிட்டுமோ ? ஆத்ம ஸாக்ஷாத்காரமானால் அப்போது அழியாப் பேரானந்தத்தைப் பெறலாம்.

79. நவரத்ன மிழைத்த ஆபரணங்களைத் தரித்தாய் வெண்பட்டே உடுத்தினாய் அறுசுவை அன்னம் புஜித்தாய், இவ்வுடல் அழியத்தான் போகிறது. அழிவற்றது ஆன்மாவே. அதைக் காண முயற்சி.

80. பல தேசங்களைச் சுற்றிப்பார்த்தாய், இஷ்டமான பந்துவர்க்கத்தைப் போஷித்தாய், ஏழ்மையை யகற்றி செல்வம் சேர்த்தாய், யாது பயன் ? பிரும்மத்தைக் காணவில்லையே?

81. கங்காநதியில் ஸ்நாநம் செய்தாய், ஷோடச தானம் செய்தாய், கோடிகோடியாக மந்திர ஜபம் செய்தாய், ஆத்ம ஸாக்ஷாத்காரம் செய்யாவிடில் இவைகளால் யாது பயன்?

82. மோக்ஷம் பெறாமல் உன் கோத்திரத்திற்கு கௌரவம் வரும்படி ஸத்கர்மாவைச் செய்தாலும் பஸ்ம ருத்ராக்ஷத்தால் உடலைப் பூசி அலங்கரித்தாலும் பயனுண்டோ ?

83. அன்னதானம், யாகம், நற்கீர்த்தி உபவாஸம், ஸத்புத்ரன், பிராணாயாம ஸித்தி, சத்ரு ஜயம், மித்ரகோஷ்டி, அணிமாதி ஸித்தி இவை மோக்ஷத்திற் கீடாமோ ?

84. காலால் கடலைக் கடந்தாய், வாயு ஸ்தம்பம் செய்தாய், மஹாமேருவைக் கையிலேந்தினாய், பாலைப்போல் விஷ

த்தைப் பருகினுய், பொரியைப்போல் நெருப்பைப் புஜித்தாய், ஆகாயத்தில்தான் பறந்தாய், அனலைக் கட்டி இரும்பைக் கையால் முறித்தாய், அஞ்ஜனத்தால் நிதியைப் பெற்ருய், இதால் மோக்ஷம் பெறலாமோ?

85. அரசனுனுய், இந்திரபதவி பெற்ருய், ஸன்யாஸியானுய், மந்திரத்தால் எல்லோரையும் ஸ்தம்பிக்கச் செய்தாய், குறிதவராமல் அடிப்பாய், காலத்தைக் கண்டறிந்தாய், காமத்தைக் களைந்து கோபத்தைக் குறைத்தாய், லோபத்தை விட்டொழித்தாய், அதனுலென்ன மோக்ஷத்தை ஸாதித்ததாமோ ?

86. மதமோஹ மாத்ஸர்யங்களைக் களைந்தாய், ஸத்யலோகம் வைகுண்டம் கைலாஸம் தான் சென்ருய், இவ்வெல்லாம் மோக்ஷ ஸாம்ராஜ்யத்திற் கீடாமோ ? மற்றெல்லா ஸம்பத்தும் ஏற்கத் தக்கதல்ல என்றுணர்வோர் மோக்ஷம் பெற யோக்யதை உள்ளவராவார்.

## 13. பிரும்மக் ஞானுவலீ மாலா. (21 சுலோகங்கள்).

87. நான் பற்றற்றவன், ஸச்சிதானந்த வடிவன், எப்போதும் சுத்தன், பந்த மற்றவன், உருவற்ற பேரானந்தமாய் நிற்பவன், நித்யன், குற்றமற்றவன், குறைவற்றவன், பரமானந்தன், என அநுஸந்தானம் செய்.

88. சுத்த சைதன்யன். வேறொன்றில்லாது தனக்குத் தானே சந்தோஷப்படுபவன், அகண்டானந்தன், சாந்தன், மாயைக்கு மேலானவன், சாச்வதானந்தன் நான், என உபாஸி.

89. உலக தத்துவங்களைக் கடந்தவன், பரமாத்மா, சிவன், பரஞ்சுடர், சின்மயன், ஸுகவடிவன். தேஹம் இந்திரியம் முதலியன மாயா கல்பிதம், நான் தானே ப்ரகாசிக்

கும் அழிவற்ற ஆத்மா. முக்குணங்களைக் கடந்து மும்மூர்த்திக்கும் ஸாக்ஷியா யிருப்பவன், என்றுணர்.

90. எல்லாவற்றிற்கும் உள்ளே யிருந்து ஆட்டிவைப்பது ஆத்மா. பட்டறை மேல் வைத்து கொல்லனால் அடிக்கப்பட்ட லோகங்கள் பற்பல உருவத்துடன் மாறுகின்றன. பட்டரை தான்மாறாது நிற்கும், அதேபோலாத்மா, கலையில்லாது கர்மாவற்று ப்ரத்யக்ஷமாய் விளங்குவது என அறி.

91. இன்பதுன்பங்கள் தோன்றும்போது இரண்டிற்கும் ஸாக்ஷியாக நிற்ப தாத்மா, க்ஞானம் நிறைந்தவன். கர்த்தா போக்தா என்ற வியவஹாரமற்றவன். எல்லாவற்றிற்கு மாதாரமானவன், தனக்கோர் ஆதாரமில்லாதவன், வியாதி முதலிய ஆத்யாத்மிகம், புலி கரடி முதலிய பூதங்களால் தோன்றுவது ஆதிபௌதிகம், இடி மழை முதலிய தேவர்களால் உண்டாவது ஆதி தைவிகம், என்ற மூன்று துக்கமும் ஆத்மாவிற்கில்லை. மூன்று தேஹத்திற்கும் மூன்ற வஸ்தைக்கும் மேலானவன் என உபாஸி.

92. காண்பது காணப்படுவ தென இரண்டு பொருளுண்டு. காண்பதாத்மா. காணப்படுவது மாயை. இதைப் பகுத்தறிந்து நான் ஸாக்ஷி என உணர்பவன் முக்தனாவான்.

93. பானை சுவர் முதலியவைகளுக்கு மண் காரணம். நாம் காணும் வஸ்துவுக்கு ஆத்மா காரணம். பிரும்மம் ஒன்றுதான் ஸத்யம். மற்றது மாயை. பிரும்மம் தான் ஜீவன். என்பதே ஸகல வேதாந்த நூலின் உட்கருத்து. அவ்வாத்மா! ஜ்யோதி ஸ்வரூபி.

## 14. ப்ரபோத ஸுதாகரம்.

(257 சுலோகம், 19 ப்ரகரணம்) சரீர நிந்தா.

94. முக்திக்கு பக்தி வைராக்யம் ஆத்மக்ஞானம் என மூன்று ஸாதனங்களாம். வைராக்கியமென்பது ஆசையில்லாமலிருத்தல். இது பூர்ண ஸ்வரூபனான ஆத்மா எல்லோருள்ளத்திலு மிருப்பதால் எல்லோரிடமுமிருக்கிறது.

95. இவ்வாசை யில்லாமையை, உடலை நான் என்றெண்ணும் அஹங்கையும் மனைவி மக்களை என்னுடையதென்றெண்ணும் மமதையுமே மறைத்துவிட்டது.

96. தேஹம் எத்தகையது? விஷயங்களுடன் இதற்கென்ன ஸம்பந்தம் என நன்கு குருசாஸ்த்ர யுக்திமூலம் விசாரித்தால் அஹங்தையும் மமதையும் கம்மைவிட்டகலும்.

97. ஜீவன் தனது கர்மபலனை அனுபவிக்க தந்தை தாய்களின் சுக்ல சோணிதத்தால் உடலைப் பெறுகிறான்.

98. மல மூத்ர, ரத்த மாம்ஸ, கபமஜ்ஜைகளால் நிறைந்த தாய் கருவில் ஜடராக்கினி கொளுத்த பத்துமாதம் படாதபாடு படுகிறான் பிறக்கும் ஜீவன்.

99. பிறக்கும்போது முன்னே தலைவரவேண்டும். எக்காரணத்தினாலாவது குறுக்கே சிக்கிக்கொண்டால் சிசுவோ தாயோ மரிக்க நேரிடுகிறது. சிசுவைச் சேதித்து தாயைக் காக்க நேருகிறது. ஸரியாக ப்ரஸவமானாலும் தாயுக்கும் சேயுக்கும் உண்டாகும் துன்பம் அளவிட முடியாதது.

100. மனதில் தோன்றும் துன்பம் ரோகம் வேண்டியவரைவிட்டுப் பிரிதல், தனதுடலுக்கு ஆபத்து சண்டை ஏழ்மை மரணாவஸ்தை அடிக்கடி பிறப்பிறப்பு. இதை வர்ணிக்க எவரால் முடியும்?

101. புழுபூச்சி, பசுபக்ஷி நாய் நரி முதலிய 84 லக்ஷம் ஜீவராசிகளுண்டு. அப்பிறவி யெல்லா மனுபவித்து புண்ய ராசியால் கடைசி ஜன்மாவான மானிடப் பிறவியை யடைந்தும், நற்குலத்தி லுதித்தும் ஆத்மவிசாரம் செய்யாமல் பண்டிதரும் வீணுகக் காலத்தைக் கழிக்கின்றனர்.

102. தைவச் செயலால் நமக்குக் கிடைத்ததைவிட ஒரு க்ஷணம் அதிக ஆயுள் வேண்டுமென கோடிப் பவுன் கொடுத்தாலும் வாராது. அத்தகைய ஆயுளை வீணுகக் கழித்தால் அதைவிட நமக்கு வேறென்ன ஹானி இருக்கிறது?

103. இப்பிறவி தப்பி லெப்பிறவி வாய்க்குமோ? தன்னையே அறியமுடியாத பசுவாய் பிறக்கின் வேதாந்த விசாரம் செய்வ தெங்ஙனம்?

104. பசியால் வாடி சுமையால் மெலிந்து ஓயாது சுமந்து ஓடும் காளை குதிரை கழுதை யானை எருமை இவைகள் தன் துன்பத்தை வாய்விட்டு சொல்லவும் முடியவில்லையே! இப்பிறவியைப்பெறாது தடுக்க நாம் நற்கருமம் செய்யவேண்டாமா?

105. ரக்தம் வாத பித்த ச்லேஷ்மம் மஜ்ஜை மேதஸ் மாம்ஸம் இவைகள் நிறைந்த இந்த உடலைத் தோலைப்போட்டு கடவுள் மூடாமலிருந்தால் காக்கையுங் கழுகும் கொத்தித் தின்றுவிடுமன்றோ ?

106. நமது மூக்கு வாய் காது பாயு முதலிய விடங்களிலிருந்து வெளிவரும் மலத்தைக் கண்டே நாமே அருவருக்கிறோம். உள்ளிருப்பதைக் கண்ணால் கண்டுவிட்டால் உணவேற்க மனம் வருமோ?

107. நகம் முதல் சிகை வரை துர்நாற்றம் நிறைந்த இவ்வுடலுக்கு கஸ்தூரி சந்தனம் பச்சகர்ப்பூரம் பூசுவதால்

துர்நாற்ற மகனுமோ? இவ்வுடலை வளர்த்துப் போற்றுப வன் மூடனன்றோ?

108. உடலிலுண்டாகும் மலத்தை மூன்று நாள் சுத் தம் செய்யாவிடில் துர்கந்தம் நிரைந்த புழுக்கள் தோன்று மன்றோ?

109. காம்பாய்ந்த புஷ்ப சயனத்தில் பரிமளம் நிறை ந்த படுக்கையில் புரண்ட இத்தேஹத்தைப் பழுதையால் கொம்போடு கட்டி கட்டைமுட்டை நிரைந்த நெருப்பிலிடப் போவதை சற்று உற்றுநோக்கு.

110. அழகிய ஸிம்மாஸனத்தில் அலங்காரமாக அமர் ந்த இச்சரீரத்தைக் கண்டு எவர் அகமகிழ்ந்தாரோ? அவரே காலன் வந்து பாசத்தை வீசியபோது இதைக்கண்டு கண்களை மூடுகின்றனர்.

111. இப்படி மலம் நிரைந்த நச்வரமான உடல் எந்த ஓர் சக்தியால் பேசவும் பார்க்கவும் முகரவும் நடக்க வும் சக்தி பெற்றதோ அந்த மஹாத்மாவை மறந்து நிலையில் லா காயத்தில் அஹந்தை வைப்பது அனுசிதமன்றோ?

112. ஸச்சிதானந்த வடிவமான ஆத்மா எங்கே? ரத்த மாம்ஸ எலும்பு நிறைந்த இக்கூடெங்கே? எனப் பகுத் தறிவுள்ளோர் தன்னுடலைத் தானென என்னார்.

## 2 விஷய நிந்தா.

113. தாகிருஷ்டமெனும் மழையால் கலங்கிய, விஷ யமெனும் சேற்றைவாரி மேலே வீணைப் பூசிக்கொள்பவன் விவேகியாவானு?

114. மனைவி அழகில்லாமலிருந்தால், ஐயோ அழகா யில்லையே என துக்கம். மிக அழகாயிருந்தாலோ தெருவில்

செல்வனோ, நண்பனோ, வேலைக்காரனோ, பிச்சைக்காரனோ ஆசையுடன் அவளைப் பார்க்காமல் போவதில்லை.

115. பதிவிரதையா யிருந்தால் பர்த்தா அதிருஷ்ட சாலி. இல்லையேல் இவளைவிட ரூபம் தனம் நிறைந்த புருஷனை இவள், மனதாலாவது நினைக்காம லிராள். ஆயிரங் காக்கையினிடையில் ஓர் காக்கைபோல் இவள் புருஷன் ஸதா ஸந்தேஹங்கொண்டு ஸுகத்தை அனுபவியான்.

116. மனைவி ஒன்றுமறியாதவளா யிருந்தாலும் மத்யமமா யிருந்தாலும் எல்லா மறிந்து புருஷன் ஆணையை மீறி நடந்தாலும் சத்ருவைவிட புருஷனுக்கு அதிக துன்பத்தை விளைவிப்பாள். பரபுருஷனிடம் பற்று வைத்திருந்தால் கேழ்க்கவும் வேண்டுமா?

117. "புத்ர னில்லாதவனுக்கு கதியில்லை" என்ற வேதச்சொல் புத்ரனைப் பெறவும் யாகாதி கர்மாக்களைச் செய்யவுந் தூண்டுகிறதே யல்லாது ஸ்வர்க்கமோ மோக்ஷமோ கிட்டாதெனக் கருத்துகொண்டதல்ல.

118. சங்கு பட்டணி, மிளகு பட்டணி, ஷஷ்டி விரதம் சதுர்த்தி விரதம், ஸேது யாத்ரை, அச்வத்த பிரதிஷ்டை, நாகப் பிரதிஷ்டை முதலிய உபாயங்களால் சரீரச்ரமத்துடன் தன கஷ்டத்துடன் புத்ரன் ஜநித்தால் அதோடு தீர்ந்ததோ துன்பம்? நோய்வாய்ப் படாமல் சிசு பிழைத்திருக்க வேண்டுமே என கவலை.

119. பிழைத்திருந்தாலும், மூர்க்கனாக, துச்சீலனாக பரஸ்த்ரீகமனம் களவாடல் குடித்தல் சூதாடல் கோள்சொல்லல் க்ரூரனாய் பதிதனா யிருத்தல், பந்துவைக் கொல்லல் முதலிய துர்க்குணம் இல்லாம லிருக்கவேண்டுமே என்ற விசாரம்.

120. மேற்கண்ட துர்க்குணமற்று ஸத்குணசீலனான புதல்வன் எல்லோருக்கும் எப்போதும் கிடைப்பதில்லை. அப்படிக் கிடைத்தாலும் அல்பாயுஸ்ஸாக ரோகியாய் புத்ரனில்லாதவனாயிருந்தால் பெருந்துன்பமன்றோ?

121. தாய் தந்தை, அண்ணன் தம்பி, அக்காள்தங்கை, மாப்பிள்ளை மாமனார், முதலிய உறவெல்லாம் நானா தேசம் செல்லும் ப்ராணிகள் ஓர் மரத்தின்கீழ் கூடி கலைவதுபோலாகும்.

122. தைவானுகூலம் உள்ளவரை பரோபகாரம் நன்கு செய்யும்வரை எல்லோரும் ஒற்றுமையாக நண்பர் போலிருப்பர். இது கொஞ்சம் மாறினால் போதும். பரம சத்ருக்களாகி விடுவர்.

123. ப்ரதிதினம் வயிராற புஜிக்க ஏதாவது கொடுத்துக்கொண்டிருந்தால் வந்திகள் போல் உண்ணும்வரை துதிபாடுவர். ஒருநாள் கொடாவிடில் கோபித்து உன்னைத் தூற்றும், பந்துவர்க்கம்.

124. நிரம்பாத வயிற்றிற்காக லக்ஷக்கணக்காக பொருள்தேட வேண்டுமென மனம் தூண்ட நம்மாலானவரை அலைகிறோம். கொடுத்துவைத்தவரை பணத்தைப் பெறுகிறோம். ஆயினும் ஒரு சோழியேனும் நம்முடன் வருமோ?

125. செலவிற்கு மிகுதியாக பொருள் சேர்ந்தால் மனைவி மக்கள் தான் பயன் பெறுவர். அரசனோ சோரனோ தாயாதியோ கைகொள்வர். ஆதலால் அளவிற்கு அதிகம் சேர்ப்பது வீண் வேலையாம்.

126. அரச பதவியே கிட்டினும் ஈட்டிய பொருளைக் கொண்டு யானை குதிரை சிப்பாய் வயிற்றை நிறப்பவேண்டியிருக்கிறது. உனக்கென்ன பயன்?

127. சத்ரு எதிர்ப்பானோ? ரணத்தில் தோல்வி நேருமோ? மந்திரிசேனை நம்மைக் கைவிடுமோ? விஷமிடுவரோ எவரேனும்? ரஹஸ்யமாக எவர் கொல்வரோ? என்று சிந்தைக் கடலில் அமர்த்தும் ராஜ்யத்தால்தான் ஸுகமுண்டோ?

## 3. மனோநிந்தா.

128. காரணமின்றி ஓர் ஸமயம் மனம் ஸந்தோஷமடைகிறது. கஷ்டப்படுகிறது. பித்தம்பிடித்ததுபோல பத்து திக்கும் ஓடி சுத்துகிறது. கோபிக்கிறது. சிஷ்டனை நிந்திக்கிறது. துஷ்டனைக் துதிக்கிறது. நிலையில்லா சித்தம்.

129. கோபத்துடன் ஒருவரை வெறுக்கிறது. தன்னை ச்லாகித்துக் கொள்கிறது. ஆசையெனும் அரக்கியால் ஆட்டப்பட்ட பேய்போலிருப்பது நம் சித்தம்.

130. மழைகாலத்தில் கிணர் குட்டைகளில் ஜலம் நிரைந்திருந்தாலும் கலங்கி உப்பாயிருக்கும். வெய்யில் காலத்தில் ஜலம் சுருங்கச்சுருங்க ருசியாயிருக்கும். அதேபோல் மனமோடி விஷயங்களை தனக்குள் நிரப்பியபோது தமோ குணத்தால் கலங்கி நிற்கும். வைராக்யத்தால் விஷயங்களை ஒழித்தால் சுத்த ஸத்வமாய் விளங்கும்.

131. யாதாமொரு பொருளை நாடி இது இந்திரியவழியாய் வெளியே ஓடுகிறது. அப்பொருள் கிட்டாவிடின் கையிலிருந்த பொருளை இழந்ததுபோல் கஷ்டப்படுகிறது.

132. நாடுநகரம் வீடுவாசல் மனைவிமக்கள் மலைநதி ஏதாவதொன்றைப் பிடித்துக்கொண்டு அலைகிறது. ஓர் விஷயங் கிட்டாவிடில் கட்டிப்போடப்பட்டவனைப்போல் தனக்குள்ளே பலதுன்பங்களை யனுபவிக்கிறது.

133. எந்த விஷயத்தைப் பிடித்தால் பேரின்பத்தைப் பெறலாமோ அதை எட்டிக்கூடப் பார்க்காது. கஷ்டப்பட்டு மனதை ஆத்ம ஸ்வரூபத்தில் வைத்தாலோ, ஜலத்திற்குள் அழுக்கிய சொரக்காய்போல் வெகு வேகமாக வெளியில் வந்து விடுகிறது.

134. இப்பிறவியிலோ முப்பிறப்பிலோ நாம் செய்த வினைக்கேற்க நல்லதோ கெட்டதோ நேரிடும். இது என்னுத தெல்லாம் எண்ணி அலைந்து திரிவதால் யாது பயன்?

135. கட்டுக்கடங்காத காளையாய்த் திரியும் இம்மனதை இழுத்து அடக்கி துர்மார்க்கத்திலிருந்து பிடிக்க வைராக்ய மென்றதோர் கழுத்துக் கயிற்றை பிரம்ம னளித்திருக்கிறார். விரும்புவோர் அதைக் கைப்பற்றுக.

136. தூங்கும்போது ஓரானந்தத்தை யனுபவிக்கிறோம். அதுவிஷயங்களா லுண்டாகு மானந்தமலல. விஷயங்களோடு மனம் இந்திரிய வழியாகச்சென்று சேர்ந்தால் அதே விழித்திருக்கும் நிலை. விழித்த காலத்தில் அனுபவிப்பதை விட உயர்ந்த அந்நிலையை மனமடையக்கூடாதோ?

137. வாயற்படியை அடைத்து பெரிய சுவருள்ள வீட்டிற்குள் ஒரு புலியை யடைத்தால் அஃதென்ன செய்யும்? தாவி எழும்பிப் பலமுறை குதித்து முடிவில் பயனில்லை என்று அயர்ந்து படுத்துவிடும். அதேபோல் வாசற்படிபோன்ற பஞ்சேந்திரியங்களை அடைத்து ஹிருதய கமல மெனும் வீட்டிலே மனமெனும் புலியை அடைத்து விடு. ஆடிஓடி அலைந்து திரிந்து வழியில்லாமல் தனக்குள் அடங்கி விடும்.

138. மூச்சுக்கும் மனதிற்கும் நெருங்கிய ஸம்பந்த மிருப்பதால் பிராணாயாமம் செய்தால் மனமடங்கும். ஸத் ஸங்கத்தாலும் வாஸனையை விலக்குவதாலும் ஸ்ரீகிருஷ்ணனது

திருவடியில் பக்திசெய்வதாலும் மெதுவாக மனதை தன் வீட்டிற்குள் அடைக்கலாம்.

## 4. வைராக்யம்.

139. அண்டைவீட்டுக்காரனுக்கு மனைவி வந்தாளல்லது இறந்தாள். எதிர்வீட்டில் புத்ரன் இறந்தான் அல்லது வாழ்ந்தான். அயல்வீட்டிற்கு தனம்வந்தது அல்லது கொள்ளை போனது. இதில் நமக்கு ஏதாவது இன்ப துன்பமுண்டோ? அதேபோல் கொஞ்சநாள் கூடிப் பிரியும் நம் மக்களிடத்திலும் பற்றில்லா திருந்தால் துன்பமில்லை.

140. இருப்பதும் இறப்பதும், ஏழ்மையும் பணக்காரனுயிருத்தலும், தைவச் செயலென்றெண்ணி நம் வீட்டில் நாம் அதிதிபோல் இன்பமும் துன்பமு மில்லாம லிருக்கவேண்டும்.

141. என்னுடையது என்ற பற்றைவிட்டு விஷயங்களில் பராமுகமா யிருந்தால் வீட்டிலிருந்தாலும் காட்டிலிருந்தாலும் கர்மபாசம் அவனருகே அண்டாது.

142. அரண்யத்தில் இளம்புல் நிறைந்த மணல் திட்டில் சீதலமான மரத்தின்கீழ் ஸுகமாக படுக்கும் புருஷனுக்கு பழம் நிரைந்த பாதபங்களும் வாஸனை நிரைந்த சீதவாதமும் இனிமையாய்ப் பாடும் பக்ஷிகளும் துணைவராவர்.

143. தீவ்ர வைராக்ய மெனும் பாக்யத்தைப் பெற்று தெளிந்த ஆசையற்ற மனங்கொண்டு தானுகக் கிடைத்த கனியை யுண்ணும் புண்யபுருஷனது ஜன்மா சிறந்ததாகும்.

144. கையிலிருந்த பொருள் காணமல்போனல் துன்பம். நாமே நல்வழியில் செலவு செய்தால் இன்பம். பரலோக நன்மையு முண்டு. அதேபோல் விஷயங்களை நாம் கோரி அது கிட்டாவிட்டால் துன்பத்தைத் தரும். நாமே

கிடைத்ததைக்கூட துச்சம் வேண்டாமென த்யஜித்தால் பேரின்பம் பெறலாம்.

145. அழகான தன் வீட்டை மறந்து துன்பம் நிறைந்த ஸம்ஸாரக் காட்டில் அலைந்து தாபத்ரயமெனும் காட்டுத் தீ எரிக்க ஆசாபாசங்களால் கட்டப்பட்ட மனமெனும் மான் விஷயமெனும் புலிகளால் வீணிலே வதைக்கப்படுகிறது.

## 5. ஆத்ம ஸித்தி.

146. வைராக்யம் வந்தாலும் க்ஞானமில்லாமல் ஸுகம் கிட்டாது. ஆதலால் ஸத்குருவை நாடி அவரடி பணிந்து உபதேசம் பெறு.

147. மழை ஸமுத்ரத்திலிருந்துதான் உண்டாகிறது. மேகமாக்கி மழை பொழிய தூண்டுகிறது காற்று. ஆனாலும் தாஹமுள்ள சாதக பக்ஷி மேகத்தையே எதிர்பார்க்கிறதல்லவா? கடல்போன்றதாத்மா. காற்று போன்றது சாஸ்த்ரம். மேகம் போன்றவர் குரு.

148. ருசியான பக்ஷ்யமங்கே கிடைக்கும் என்று சாஸ்திரங் கூறுகிறது. எப்படி கிடைக்குமென வழிகாட்டுபவன் குரு. அதை எடுத்து புஜிப்பவன் அதிருஷ்டமுள்ள ஜீவன்.

149. ருசியை நல்ல வாஸனையை அழகான உருவை மற்ற ஸுகங்களை அனுபவிப்பது எது? தேஹமல்ல இந்திரியமு மல்ல. செத்த உடலுக்கு நெருப்பிலிட்டதால் துன்பமுண்டோ? ப்ராணனது வேலையோ எனிலதுவுமில்லை. தூங்கும்போது ப்ராணன் வேலைசெய்கிறதே. வருந் திருடனை அது அறிகிறதோ?

150. இருள் சூழ்ந்த ஒருள்ளே ஓர் தீபத்தை வை. அதன்மேல் ஐந்து சந்துள்ள பானையைக் கீழ் முகமாக கவு.

அப்பானையி னருகே வீணை கஸ்தூரீ ரத்னம் விசிரி இவை களை வை. இதனருகே செல்பவருக்கு இவ்வஸ்துக்கள் தெரிகின்றனவே அது எதனுல் என்று யோசி. சந்து காரணமா? பானையா? மண்ணு? எண்ணையா? சொல்.

151. இவையெல்லாம் காரணமாகாது. உள்ளே உள்ள ஒளியே காரணம். அதேபோல் சைதன்யமான தீபம்போன்ற ஆன்மாவே எல்லாவற்றிற்கும் காரணம். ஐந்து த்வாரமுள்ள பானையே பஞ்சேந்திரியமுள்ள சரீரம். அருகிலுள்ள வஸ்துக்களே விஷயங்கள்.

## 6. மாயா ஸித்தி.

152. சின்மாத்ரமான பரமாத்மா தன்னைத் தானுகப் பார்த்தார். அதிலிருந்து அஹம் என்பதுண்டானது. இதே ஜீவாத்ம பேதத்திற்குக் காரணம். அஹம், ஆணும் பெண்ணுமாக இரண்டாயிற்று. சுத்தம் ஒன்று. இவை இரண்டு ஆக மூன்று வஸ்துவானது அதுவே.

153. இந்த அஹம் "நான் அனேகமாக வேண்டு"மென பார்த்ததாம். இதிலிருந்தே ஸகல ஜகத்தும் தோன்றிற்றென யாக்ஞவல்க்யர் தன் மனைவிக்கு கூறினர்.

154. பரமாத்மா தூங்கும்போ துண்டாவது போன்ற ஓர் நிலையில் பலநாளாக இருந்தார். அதிலிருந்து மாயை உண்டாயிற்று.

155. முக்குணமுள்ளது மாயை பரமாத்மாவை ஆச்ரயித்தது அனுதி. அதை இருக்கென்றும் சொல்லமுடியாது. ஏன்? க்ஞானி அதை அழிப்பதால், இல்லையென்றும் சொல்லலாகாது. நம் கண்ணுக்கு அநேக வஸ்துக்களைத் தோற்றி வைத்ததால்.

151. உருவில்லா மாயை உருவுள்ள உலகை எப்படிப் படைத்ததெனின்? நூலுக்கு துணிஉருவமிருக்கிறதோ இல்லாவிடினும் அது உருவுள்ள துணியைத் தோற்றுவிக்க வில்லையா?

157. பொய்யானமாயை மெய்யான உலகைப்படைப்ப தெப்படி எனில்? சனவில் போகம் செய்வதாகக் கண்டவன் துணி ஸ்கலனத்தால் நிணைகிறது. கனவில்கண்ட பொய்யான போகத்திலிருந்து மெய்யான ஸ்கலனம் உண்டாகவில்லையா?

158. இருள் சூழ்ந்த இரவுபோல் மாயையின் ஸ்வரூபம் நமக்குத் தெரிவதில்லை. ஆனால் அறிவுள்ளோர் எதிரில் மின்னல்போல் தோன்றி மறைந்துவிடுகிறது.

159. பிரும்மத்தைப் பற்றியது மாயை. ஜீவனைப்பற்றியது அவித்யை. சித் அசித் இரண்டின் சேர்க்கை மன மென்பது. மோக்ஷம் வரும்வரை அது அழிவதில்லை.

160. சொம்பு குடம் குட்டை குளம் கிணர் ஏரி ஆறு ஸமுத்ரம் இவற்றிலுள்ளது ஒரே ஜலமானாலும் அந்த ந்த பெயரிட்டு அதனை அழைப்பதுபோல் அவித்யையால் சூழ்ந்த சைதன்யத்தை ஜீவனென்கிறோம்.

161. சுத்த பிரும்மத்தை மாயை எப்படி மறைக்கும் எனில்? ஸ்வப்ரகாசமான சூர்யனை இருள் எப்படி மறைக்கிறது? அப்படிதான்.

162. சூர்ய கிரணத்தா லுண்டாகும் மேகம் சூர்ய னையே மறைத்துவிடுகிறது. மேகம் சூழ்ந்த பகல் பகலாக வே தோன்றுவதில்லை. அக்ஞானத்தால் அப்படியே சுத்த னயிருந்தாலும் ஆத்மா சூழப்படுகிறான்.

## லிங்க தேஹாதி.

163. நம்து உடல் ஸ்தூல சரீரம். அதனுள்ளே ஸூக்ஷ்மம் அல்லது லிங்க சரீரமுள்ளது. அதனுள்ளே கா ரண சரீர மிருக்கிறது. அதற்கு முள்ளே நாலாவது மஹா காரண மொன்றிருக்கிறது.

164. ஐந்து ஸூக்ஷ்மமான மஹா பூதங்கள் பஞ்ச ப்ராணன் பஞ்சேந்திரியங்கள் அந்தக்காணம் இக்கூட்டமே லிங்க சரீரமெனப்படும். இவைகளுக்குக் காரணமா யிருப் பது காரண சரீரம்.

165. எல்லாவற்றையும் தூண்டி புத்தியை யண்டி நிற் பது நாலாவதாம். புத்தியில் ப்ரதிபலிக்கும் சுத்த சைதன் யமே ஜீவனும். அலை அசையும்போது சூர்யபிம்பம் அசை வதுபோல் தோன்றுகிறது. அதேபோல் மனதின் அசை வால் சைதன்யமும் சஞ்சலமாகத் தோன்றுகிறது.

166. சூர்யன் ப்ரகாசப்படுத்துவது போல் ஜலத்தில் காணும் சூர்ய ப்ரதிபிம்பம் எதையேனும் ப்ரகாசப் படுத்துமா ? அதேபோல்தான் ஆத்ம ப்ரதிபிம்பமான ஜீவனும்.

167. ஆனாலும் வெங்கல மல்லது வெள்ளித் தட்டில் படும் சூர்ய ப்ரதிபிம்பம் அருகிலுள்ளதை விளக்கும். அதேபோல் புத்தியில் ப்ரதிபலிக்கும் ஆத்ம ப்ரதிபிம்பம் இந்திரியங்கள் வழியாக விஷயங்களை விளக்குகிறது.

## அத்வைதம்.

168. நான் என்பதை நன்றாய் எது என அலசிப் பார் த்தால் ஒன்றான ப்ரும்மமாக முடியும். அதைவிட்டு அது வேறு நான் வேறென நினைப்பவன் பசுவாவான்.

169. க்ஞானியை எனதாத்மா என்றார் கீதாசார்யன். எப்படி ? ஆத்மா க்ஞானச்சுடர். ஜீவனே தன் நிஜஸ்வரூபத்தை உணராதவரை ஓர் கட்டைபோல. குருபதேசத்தால் இக்கட்டையை அச்சுடரோடு சேர்த்தால் நெருப்புதானே நிற்கும். கோணலோ அல்லவோ அக்கட்டை உருவம் காணப்படாதல்லவா?

170. ஒரே சூர்யன் ஆகாசத்தி லிருக்கிறான். ப்ரதி க்ராமத்திலும் ப்ரதி வீட்டிலும் ப்ரதி ஜலமுள்ள பாத்திரத்திலும் ப்ரத்யேகமாக அச்சூர்யன் காணப்படுகிறா னல்லவா? அதேபோல் ஒரே ஆத்மா பல உடலிலுமுள்ள பல புத்திகளில் வேறாகத் தோன்றுகிறான்.

171. ஓர் பாத்ர முடைந்து ஆங்குள்ள பிரதிபிம்ப சூர்ய னிறந்தால் ஆகாச சூர்யனுக்கு ஹானியுண்டோ? ஜல பாத்ரத்திலுள்ள ஆதித்யன் அசைந்தால் ஆகாச மித்ரனுக்கு அசைவுண்டோ?

172. ஒரு சூர்யனுடைய ஒளியால், உலகெல்லாம் தத்தம் வேலையைச் செய்கிறதைக் காண்கின்றோம். அதேபோல் சூர்யனுக்குச் சூர்யனான ஆத்மாவால் எல்லாம் தம் வேலையைச் செய்கிறது.

173. எல்லாரிடத்திலும் ஒரே ஆத்மாவானால் ஒவ்வொரு மனிதனும் வெவ்வேறு குணத்துடன் காணப்படுவதேன்? ஒரே ஜலம் பாய்ந்துவளரும் வாழை சம்பகம் ஜாதி மல்லி முள்ளங்கி வெங்காயம் உள்ளிப்பூண்டு இவை மாறுபடவில்லையா ?

174. ஒரே ஸூத்ரக்காரன் ஆண் பெண் உருவமமைந்த அநேக பொம்மைகளைத் தான் மறைந்திருந்து ஆட்டுவதுபோல் ஆத்மா உள்ளே யிருந்து அநேகரை அநேக விதமாக ஆட்டிவைக்கிறார்.

175. ஒரே கரும்பு ரஸம் வெல்லம் சர்க்கரை கற்கண்டாக மாறவில்லையா? ஒரே ஸ்வர்ணம் காப்பாகவும், கொலுசாகவும் மோதிரமாகவும் பாத்ரமாகவும் மாறவில்லையா? இதேபோல் தனித்தனி ஸ்வபாவமுள்ள ஜீவனை ஆத்மா உள்ளிருந்து நடத்துகிறது.

176. ஆனால் ஆத்மா நம் அருகிலுளதோ? அதற்கென்ன ஸந்தேகம்? வழிக்காகக் கட்டிய அன்னம் தோளிலிருக்கிறது. நடப்பவனதை மறந்து வாடி பசியால் வதங்கினான். நினைவு வந்தது. அன்னத்தை எடுத்தான். புஜித்தான் பசி தீர்ந்தது.

177. மனிதன், யானை, எருமை, நாய், பன்றி எங்கும் ஆத்ம ஸ்வரூபம் ஒன்றுயிருக்கிறதெனக் கண்டவன் அத்வைதாமிருதத்தைப் பருகுவான்.

## கர்த்தா போக்தா.

178. ஆத்மா ஒரு வேலையையும் செய்வதில்லை. ஒருவரைச் செய்யென்று தூண்டுவதுமில்லை. ஆனால், சூர்யன் உதயமானவுடன் "ஓ! நாழியாய்விட்டது" என்று அவனவனும் தத்தம் வேலைக்கு ஓடுகிறானல்லவா? அதேபோல் ஆத்ம ஸான்னித்யத்தால் ஓடுகிறானே தவிர அது எதிலும் ஸம்பந்தப்படுவதில்லை.

179. பழுக்க இரும்பைக் காய்ச்சி சம்மட்டியால் அடிக்கிறான். அதிலுள்ள நெருப்புக்கு ஏதாவது தூக்கம் வலியுண்டோ?

180. கட்டைக்குள் நெருப்பிருக்கிறதல்லவா? அக்கட்டையைக் கோடாரிகொண்டு பிளக்கிறான். அக்நிக்கு ஏதேனும் கஷ்டமுண்டோ? அதேபோல் உடலுக்குண்டாகும் இன்ப துன்ப மாத்மாவுக்கில்லை.

181. வீட்டில் தீபம் ப்ரகாசமாக எரிந்துக்கொண்டிருக்கிறது. திருடன் நுழைந்தான். சொத்தைக் கொண்டு போனுன். எடுத்துக்கொள் என்றும் சொல்வதில்லை வேண்டாம் என்றும் அத்தீபம் தடுப்பதில்லை. அதே போல்தான் ஆத்மா.

182. வீட்டில் ஏற்றிய விளக்கு அபூர்வமாக ஓர் குழந்தை பிறந்தால் அதைக் கண்டு களிப்பதில்லை. நல்லபுவா அநியாயமா யிறந்தான். அதைக்கண்டு துக்கிப்பதில்லை. இதேதான் ஆத்மநிலை.

## ஸ்வப்ரகாசம்

183. சந்த்ரன் சூர்யன் நெருப்பு முதலிய ஒளிகள் தன்னையும் விளக்கி அருகிலுள்ள பொருள்களையும் விளக்குகின்றன. ஆனுல் ஆத்மாவைப் பிரகாசப்படுத்த இவைகளால் முடியவில்லை.

184. இப்ரகாசப் பொருள்களையும் கண்வழியாக ஆத்மா வெளிச் சென்றுல்தான் பார்க்க முடியும். கேவல வெளிச்சமே பொருளை விளக்குவதெனில் குருடனுக்கும் ப்ரத்யக்ஷமாகத் தோன்றவேண்டுமே? தோன்றுகிறதா ? இல்லை.

185. ஆத்ம ஒளியால் வஸ்து விளங்குவதென்றுல் குருடனுக்கும் ஆத்மா இருப்பதால் எல்லா வஸ்துக்களும் விளங்கவேண்டுமே என்றுல் ? கண்வழியாகத்தான் ஆத்மா வஸ்துவைப் பார்க்கிறதென்றேம். அன்றியும் குருடன் கையால் தொட்டுப்பார்த்து இஃதென்னவென்று கண்டு பிடிக்கிறு னல்லவோ ?

186. எதனுல் எல்லாவற்றையு மறிகிருேயோ அதை எதனுலறிய முடியும்? ஆத்மா ஸ்வப்ரகாசமானதால் தன்னுல்தான் தன்னை அறிய முடியும். வேறு எதாலும் முடியாது.

## நாதானுஸந்தானம்

187. ஏகாந்தமாய் உட்கார்ந்து ஓர் க்ஷணநேரம் ஸ்வரூபானு ஸந்தானம் செய்தால் வலது காதில் ஓர் அனாஹத சப்தம் கேட்கும்.

188. ஸித்தி பெறவும் மனதை ஸ்திரமாக நிறுத்தவும் மனச் சுத்திக்கும் நாதானு ஸந்தானம் உயர்ந்த ஸாதனமாகும்.

189. பேரீ மிருதங்கம் வீணை சங்கம் முதலிய வாத்ய சப்தங்கள் நம்மால் அடித்துக் கிளப்பப்படுகின்றன. அதிலேயே நமது மனம் ஸந்தோஷமடையவில்லையா ? மிக மதுரமாய் அகண்டமாய் நிற்கும் அனாஹத சப்தத்தின் ஆனந்தத்தைச் சொல்லவும் வேண்டுமோ?

190. விஷய ஆசையை யகற்றி மனம் அசையா நிலையை அடைந்தால் அழகான நீண்ட வேணுத்வனிபோல் சப்தம் கேட்கும்.

191. அந்த நாதத்திற்குள் அழியாத ஓர் ஜ்யோதிஸ் இருக்கிறது. அதிற்சென்று மனம் லயித்துவிட்டால் மறு பிறப்பென்பது கிடையாது.

192. மனதை லயப்படுத்த பலஸாதனங்களிருந்தாலும், நாதானுஸந்தானம் என்பது அப்போதே பரமானந்தத்தை அளிப்பது. அதைவிட சிரேஷ்டமான உபாயம் வேறில்லை.

## மனோலயம்

193. பற்பல பிறவிகளில் எண்ணிறந்த துன்பத்தை அனுபவிக்கும் இம்மனம் பரமானந்தத்தைப் பெற்று எப்போது சுகத்தைத் தழுவுமென யோசி.

194. ஒன்றான் பேரானந்தத்தைவிட வேறு வஸ்து உலகி லிருக்கிறதோ? நான் என்பது எது? எங்கிருந்து வந்தது? என நன்கு யோசனை செய்தால் மற்ற விஷயங்களை விட்டு மனம் இதில் ஈடுபடுவதால் கொஞ்சம் கொஞ்சமாக லயமாகும்.

195. நீண்டகாலம் ஆத்மாவை த்யானம் செய்வதால் மனமே ஆத்ம மயமாகிவிடும். நதி ஸமுத்ர ஸமீபம் போகும் வரை நதிதான். ஸமுத்திரத்தில் கலந்துவிட்டால் நதியெனும் பெயர் மாறி, ஸ்வபாவ ருசிமாறி உப்புக் கடலாகிறது.

196. ஆத்மாவினிடம் மனதை நுழைய விடுவதுதான் கஷ்டம். நுழைந்தால் அந்த ருசியைக் கண்டுகொண்டு மனதே தன்மயமாகிவிடும். மறுபடி விஷய ஸுகங்களைத் தேடாது. பாலில் மறைந்து கிடந்த நெய்யை உருவாக்கித் தனியாக எடுத்துவிட்டால் பாலுடன் மறுபடி சேர்த்தால் நெய் பாலாமோ?

197. பார்ப்பவன், பார்க்கப்படும் பொருள், பார்த்தல் என இம்மூன்றிலும் ஒளிவடிவமாயுள்ளது ஆத்மா. அதில் மனம் ஒடுங்கினால் அதற்கு ஸ்வரூப லயம் தோன்றும்.

198. கண்ணாடியின் எதிரில் நம்முக மிருந்தால் ப்ரதிபிம்பம் தோன்றும். கண்ணாடி உடைந்தால் முகத்திற்கு ஹானியில்லை. கண்ணாடி போன்றது மனது. ஆத்மா முகம்; மனம் லயித்தால் ஜீவன் என்ற பேதமற்று ஆத்மஸ்வரூபமாகவே நிற்கும்.

## ப்ரபோதம்.

199. வெல்லமும் அதிலுள்ள ருசியும் தனித்தனியா கக் காணப்படுவதில்லை. கஸ்தூரியும் வாஸனையும் பிறிக்கத் தக்கதல்ல. அதேபோல் ஆத்மாவில் மனதை செலுத்து வோருக்கு உலகம் ஆத்மாவாகவே தோன்றும்.

200. தூக்க ஆரம்பத்தில் விழிப்பு நிலையின் முடிவில் ஸ்திரமில்லாமல் ஓர் சுகானுபவமுண்டு. அந்த அனுபவம் ஸ்திரமாகவிருந்தால் அதே அத்வைதானந்தமாகும்.

201. அதிகம்பீரமாய் கரையில்லாமல் விளங்குவது க்ஞானக் கடல். கர்மமெனும் வாயுதூண்ட ஜீவனெனும் அலை தோன்றுகிறதங்கே.

202. க்ஞான ஸூர்யன் தனது கிரணத்தால் ப்ரகா சிக்கும்போது ஜீவனெனும் கானல்ஜலம் தோன்றுகிறது அக்ஞர்களுக்கு.

203. பேரானந்தக் கடலில் ஓர் முறை அமிழ்ந்து முழு கியவன் கங்காமடுவில் விழுந்த கலசம்போல் உள்ளும் புறமும் ஆனந்தமயமாகிவிடுவான்.

## இரண்டுவித பக்தி

204. மனதில் ஸத்வகுண முதித்தபோது மின்னல் போல் ஞான ஒளி தோன்றி மறையும். அவ்வொளி நிலைத்து நின்றால் மனம் சுத்தமாகும்.

205. வஸ்திரத்திலுள்ள அழுக்கை யகற்ற உப்புநீர் உதவுவதுபோல் மனோமலம் அகல ஸ்ரீகிருஷ்ண பக்தியே தக்க ஸாதனமாம்.

206. கண்ணாடியில் அழுக்கிருந்தால் முகம் தெரிவ தில்லை. மனதில் மலமிருந்தால் எந்த குரு உபதேசித்தா

லும் க்ஞானம் உதிக்காது. முன்னே மலத்தை யகற்ற வழி தேடு.

207. பிருமத்தை உருவுடனிருப்பதாக ஸகுணமாக் சிலர் உபாஸிப்பர். உருவில்லாததெனெ நிர்க்குணமாக உபா ஸிப்பர் சிலர். இருவரும் மோக்ஷமடைவர்.

208. ஸ்தூலம் சூக்ஷ்மமெனெ பக்தி இருவகைப்படும். ஸ்தூலமாவது பக்தியின் ஆரம்ப தசையாம். சூக்ஷ்மமாவது பழுத்த நிலையாம்.

209. தன் தன் ஆச்ரம தர்மத்தை அனுஷ்டிப்பது கிருஷ்ணனுக்குப் பிரியமான உத்தம பூஜையாம். பிம்பத்தை அர்ச்சிப்பது, பக்தர்களுடன் சேருவது, கிருஷ்ண சரித்ர த்தைக் கேட்பது, ஸத்யமுறைப்பது, இதுவும் பகவத் பூஜையா கும்.

210. பரஸ்த்ரீ பிறர்சொத்து பராபவாதம் இதில் பரா முகமாயிருத்தல், ஊர்வம்பில் ஆசையில்லாமை, தீர்த்தயாத் திரை, பரமனது சரிதத்தைக் கேளாத நிமிஷம் வியர்த்தமென எண்ணுதல். இவை ஸ்தூல பக்தியாம்.

211. இந்த ஸ்தூல பக்தியால் ஸூக்ஷ்ம பக்தி உண் டாகும். புராணங்களில் கூறியபடி பரமாத்மாவினிடத்தில் மனம் பிரவேசிப்பது அல்லது பரிபாகமுள்ள பக்தன் உள் ளத்தில் பரமாத்மா பிரவேசிப்பது ஸூக்ஷ்ம பக்தியாகும். சரீரத்தால் செய்யும் பூஜை மறந்து மானஸிக பூஜை செய் வான் சூக்ஷ்ம பக்தியுள்ளவன்.

212. கூட்டமில்லாத ஏகாந்தத்தை விரும்புவான் சூக்ஷ்ம பக்தியுடையவன். எந்த ப்ராணியையும் கடவுளாக எண்ணுவான். எவருக்கும் துரோகம் செய்யமாட்டான் எங்குமன்பு ததும்பும்.

213. கிடைத்ததைக் கண்டு ஸந்தோஷமாயிருப்பான். மனைவி மக்களிடம் என்னுடையதென மமதையை வைக்க மாட்டான். அஹங்காரம் அவனருகே அண்டாது. கோபமே உதிக்காது. மெதுவாகப் பேசுவான். தன்னை இகழ்ந்தாலும் புகழ்ந்தாலும் கவனியான்.

214. தனக்குத் தோன்றுமாபத்தைக்கண்டு அஞ்சான். நித்ரை ஆஹாரம் இவைகளில் இப்படித்தான் செய்யவேண்டும் என பற்றில்லாமலிருப்பான். வீண்பேச்சு பேசான். கிருஷ்ண ஸ்மரணத்தால் மனச்சாந்தியுடனிருப்பான்.

215. யாராவது கிருஷ்ணனைப் பற்றி பாடினாலும் வேணுகானம் செய்தாலும் புளகாங்கிதனாகி ஆனந்தபாஷ்பம் சொறிவான். மதயானைபோல் தன்னை மறப்பான். கிருஷ்ணனிடம் உலகை, உலகத்தே கிருஷ்ணனையுங் காண்பான்.

## த்யானவிதி.

216. ஓரே விஷயத்தை இடைவிடாமல் (வேறொன்று குறுக்கிடாமல்) தைலதாரையைப்போல் நினைப்பது த்யானம். ஆரம்பத்தில் சஞ்சலமான மனதை அகண்டமாய் நிர்க்குணமாய் பரந்து நிற்கும் பரம்பொருளில் வைப்பது கஷ்டம்.

217. த்யானப்யாஸம் செய்ய விரும்பினால் யமுனாநதிக் கரையில் அடர்ந்த காட்டில் விசாலமான கல்ப மரத்தடியே காலமேகம்போன்ற கருத்தமேனியுள்ள கண்ணனைக் கண்ணை மூடி சித்தக் கண்ணால்காண்.

218. அங்கும் அது நிற்காது. ஆதலின் மற்றதை நினைப்பதைவிட இவருருவத்தே அமைந்தஅழகில் ஒவ்வோர்க்ஷணம் மனதை நிறுத்தலாம். பீதாம்பரதாரியாய் சந்தனம் பூசி காதுவரை நீண்ட கண்ணுடையோன், அவன் காதில் குண்டலம் தொங்கும் என நினை.

**219.** புன்னகை நிறைந்த முகத்தைக்காண். கௌஸ்துப மணியுடன் விளங்குமவன் மார்பைப்பார். ஆபரணங்களுக்கு இவன் ஆபரணமாய் அழகை உண்டு பண்ணுவ்தாக எண்ணு. அவன் தனது காந்தியால் நமது மனோமலத்தைப் போக்குவதாக நினை.

**220.** இயற்கையாக அம் மனம் சலவஸ்துவானதால் உட்கார்ந்த நிலையில் பரமனைக்கண்டு பரமானந்தம் பெறாது. அது ஓட்டத்தை ஒடுக்கச் சற்று அதுபோனவழியில் போ. அக்கண்ணன் கோப குமாரர்களுடன் குதித்தோடுவதாக அவர்கள் அளிக்கும் தின்பண்டத்தையும் புஜிப்பதாக நினை.

**221.** ப்ரதிதினம் ஏகாந்தமான விடத்தில் அமர்ந்து இங்ஙனம் அப்யசித்தால் சற்று வசியமாகும் மனம். அவனணிந்த தேவமாலை மணங்கமழுவதாக, பல பசுக்களிடையே அவன் ஸஞ்சரிப்பதாக ஸுரர்களை ரக்ஷிக்கவந்தவனென அவனைச் சரணமடை. ஸாத்விக ஆஹாரத்துடன் இப்படி அப்யஸித்தால் க்ஞானக் கண்ணால் கண்ணனைக் காணலாம். திவ்யவாஸனையை நுகரலாம்.

**223.** கோடி மன்மதனைப்போன்ற அழகுள்ளவனும் வேண்டியதை அளிப்பவனும் கருணைக் கடலுமான பரமனை விட்டு வேறென்ன கண்ணுக்கு காணும் விஷயம்?

**224.** பாபத்தை யகற்றி புண்யத்தைத் தருவதும் ரஸமானதும் மனதிற் கினிமையானதுமான ஸ்ரீ கிருஷ்ணனது சரித்திரத்தை விட்டு ஊர்வம்பில் காது ஏன் ஆசைகொள்ள வேண்டும்? சாச்வதமாய் எல்லா இந்திரியங்களுக்கு மின்பமளிக்கும் வாசுதேவனைவிட்டு க்ஷணிகமான அன்யவிஷயத்தில் ஆவல்கொண்டால் அது நம் தௌர்ப்பாக்யமே.

## ஸகுண நிர்க்குணேக்யம்

225. உபனிஷத்து ஸர்வ பூதங்களுக்கும் அந்தர்யாமியாய் ஸச்சிதானந்தனுய் ப்ரகிருதிக்கு மேலானவனுய் எந்தப் பொருளேச் சொல்கிறதோ அதே தான் யதுகுல திலகனுக விளங்குவது.

226. பரம்பொருள் ஸ்தூலக் கண்ணுக்குத் தோன்ருதே எனின் விச்வரூபமெடுத்த கண்ணனே இக்கண்ணுல் அர்ஜுனன் கண்டானே? இல்லேயே. திவ்ய சக்ஷுஸ்ஸை யல்லவோ அருளினுர் அவர்.

227. ஏக தேசத்திலிருக்கும் கிருஷ்ணன் நிர்க்குணமாய் எல்லாமா யிருக்கும் பிரும்ம மாவதெப்படி? விச்வரூபத்தில் உலகெல்லாமாய் நிற்கும் பரவாஸுதேவனிடத்தே பூமண்டலத்தை ஓர் சிறுகோழிமுட்டையைப்போல் கண்டான் பக்தன்.

228. ஓரிடத்தே ஓருருவம் கொண்டவனுயினும் சூர்யபிம்பம்போல் எல்லோருக்கும் தன்னெளியால் ஆனந்தமளிப்பான். தான் ஒருவனேயாயினும் ஒவ்வொரு கோபிகைக்கோர் கிருஷ்ணனுகத் தோன்றவில்லேயா?

229. விதேஹ தேசத்தில் ஜநகனுக்கும் ச்ருத தேவருக்கும் தனித்தனி கிருஷ்ணனுகக் காக்ஷி யளித்து தான் பரமாத்மா என்பதைக் காண்பித்தா ரன்ருே?

230. தூதுசென்றபோது தன்னேக் கட்டவந்த துர்யோதனனுக்கு அவன் சேனேயிலுள்ள யானே குதிரை யோதர் முதலிய எல்லாவற்றையும் கிருஷ்ணனுகக் காண்பித்து தந் நிலேயை விளக்கினுர்.

231. நிர்க்குண ப்ரம்மம் விருப்பு வெறுப்பில்லாப் பொருளன்ருே? கிருஷ்ணனே பாண்டவரிடமன்புகொண்டு

துரியோதனாதிகளை மாய்க்கவில்லையா? எனில், அவனவன் வினையின்படி அவனவன் வாழ்ந்தானல்லது வீழ்ந்தான். ஆயுதந் தாங்கமாட்டேனென அவர் ப்ரதிக்ஞை செய்தது, தான் உதாஸீனன் என்பதை விளக்கவில்லையா?

232. ஸ்ரீவத்ஸரென்ற ரிஷி மூவரில் தாரதம்யத்தைக் காண வைகுண்டஞ் சென்று திருமாலின் மார்பிலே எட்டி காலால் உதைத்தார். அக்காலுக்குபசாரம் செய்து நொந்ததோ என்கேட்டார் பகவான். இச்செயல் விருப்பு வெருப்பற்றவன் எனக் காட்டவில்லையா?

233. பகவான் நல்லவழியிலுள்ள பழுத்தமரம்போன்றவர். அங்கு சென்றோர் அவரவருக்கேற்ற பலனைப் பெறுகின்றனர். ஜலங்கொட்டுபவனையும் தன்னை வெட்டுபவனையும் அது தடுப்பதில்லை. நிழலில் சுகமாக படுப்பவனையும் மேலேறி விழுபவனையும் அது மறுப்பதில்லை.

234. ஆத்மாவினிடமிருந்து ஜீவர்கள் தோன்றினர். ஆதலால் தான் எல்லோருக்கும் எல்லாவற்றையும்விட ஆத்மா பிரியமா யிருக்கிறது. ஆத்மகுணம் கிருஷ்ணனிடம் பொருந்துமா? கிருஷ்ணன் கன்றுகளை மேய்க்கும்போது கோப குமாரர்களுடன் உணவு உண்ணும் ஸமயம் கொஞ்ச தூரத்தில் மேய்ந்த கன்றுகளை பிரும்மா தூக்கிக்கொண்டு போய்விட்டார். கன்றுகளைத் தேடிக் காணாது திரும்ப, கோப குமாரர்களையும் காணவில்லை. அக்கன்றுகளாகவும் கோபர்களாகவும் கண்ணன் தோன்றினான். பசுக்கள் கன்றினிடமும், கோபிகள் குமாரரிடமும் அப்போதுகொண்ட அன்பு அளவற்றது. இதிலிருந்து கிருஷ்ணனிடமிருந்து ஜீவர்கள் தோன்றியதாகவில்லையா?

235. ஆத்மா சுகதுக்கங்களை அநுபவிப்பவனல்லவே? கிருஷ்ணன் கோபிகளை வஞ்சனை செய்து ஏமாற்றி அநுபவித்தானன்றோ?

இவன் ஆனந்த வடிவமாதலின் இவனை விட்டுப் பிரிய மனமில்லாதவர்களாக கோபிகள் தானே வந்து குவிந்தனர். அவர்கள் கிருஷ்ணனிடம் கொண்ட அன்பு கேவல சிருங்கா ரத்திற் கன்று. தன் புருஷனையும் குழந்தைகளையும் கன்றை யுங் கயிற்றையும் பாலையும் மோரையும் கிருஷ்ணனைக் கண்டனர். அது பக்தி முதிர்ந்த க்ஞானமன்றோ?

236. ஒரு கோபி கிருஷ்ணனை யிருந்து பூதனை வேஷந் தரித்த மற்றொருவள் பாலைப் பருகினாள் என்றால் அவ்வளவு தூரம் அவர்களது தியானம் முற்றி தன்மயமானார்கள் என்பது அறியக் கிடைப்பது.

237. உண்மையை விசாரிக்கும்போது வெல்லமே ருசியாவதுபோல் நச்வரமான நம்முடலே ஆத்மாவை அறி யும் ஸ்தானமாதலின் பரமாத்ம வடிவமாகிவிடும் என்றால் லீலைக்காக உருவெடுத்த ஸ்ரீ கிருஷ்ணன் பரமாத்மா என்ப தற்கு ஆக்ஷேப முண்டோ?

238. மண்ணைத் தின்றாயா? என யசோதை கோபிக்க, இல்லை வாயைப் பார் என அன்னைக்கு விச்வரூபமளித்து த்தன் வயிற்றிற்குள்ளே ஸகல பிரும்மாண்டத்தையும் காட்டி யவன் பரமாத்மா வன்றோ? நிர்க்குண ப்ரம்மந்தான் ஸகுணமாக வந்தது, ஆதலின் இரண்டும் ஒன்றே.

## அநுக்ரஹம்.

239. எக்காரியம் செய்தாலும் எண்ணம் நல்லதாயின் நற்கதி கிடைக்கு மென்பது பொதுவான ஸித்தாந்தம். எந்த எண்ணமிருந்தாலும் தன்னிடம் உடலைப் பொருளை அர்ப்ப பணம் செய்வார்க்கும் நற்கதி அளிக்கத்தக்க அநுக்ரஹம் புரிபவன் ஸ்ரீகிருஷ்ணன்.

240. விஷத்துடன் பாலைக் கொடுத்த பூதனை, கொல்ல வந்த சகடாசுரன், காற்றாக வந்து தூக்கிச் சென்ற த்ருணாவர்த்தன் முதலியவர்களைக் கொன்று அவர்களுக்கு நற்கதி யளித்தார் ஸ்ரீகிருஷ்ணன்.

241. தனகர்வத்தால் ஜலக்ரீடை செய்யும்போது வந்த மஹரிஷியைக் கண்டு எழுந்து உபசரிக்காத தோஷத்தால் இரண்டு அர்ஜுந மரங்களாகத் தோன்றிநின்ற யக்ஷ குமாரர்களைத் தாய்தன்னை உரலுடன் கட்டியபோது அம்மரங்களுக்கிடையே சென்று மரத்தை முறித்து நற்கதியளித்தார். நமது பக்திக்கு வசமாகி நம்மிடந் தேடிவந்தும் அருள் புரியும் குணமுடையவர் பகவான்.

242. கேசி, காகன், பகன், அகன் முதலியவர்களைக் கொன்று அருள்புரிந்தார். கோபர்களைச் சூழ்ந்த காட்டுத் தீயை விழுங்கினார். இந்திரன் ஏழுநாள் விடா மழை பொழிய கோவர்த்தன கிரியை ஒரு கையால் தூக்கி கோக்களையும் கோபர்களையும் காத்தருளினார். அநுக்ரஹத்தினாலன்றோ இதைச் செய்தார்.

243. கம்ஸனது வண்ணானை ஸ்ரீ கிருஷ்ணன் தனக்கொரு வஸ்த்ரம் கேட்க அவன் இவரை நிந்தித்தான். அபராதியான அவனைக் கொன்று வைகுண்டமளித்தார்.

244. கம்ஸனுக்கு சந்தனம்கொண்டு செல்லும் திரிவக்ரா என்றவளிடம் சந்தனம் பெற்று வக்ரத்தை நீக்கி அழகுள்ள சரீரத்தை அநுக்கிரகித்தார். அணுவளித்தாலும் அருள்புரிவதியல்பு இவர்க்கு.

245. குவலயாபீடமென்ற யானையைக் கொன்று முஷ்டிக சாணூரனென்ற மல்லர்களுக்கும் கம்ஸனுக்கும் நற்கதி கொடுத்தார்.

246. தர்மராஜ ராஜஸூய யாகத்தில் எண்ணிறந்த முனிவர் அரசர் கூடிய ஸபையில் ஓயாது தன்னை நிந்தித்த சிசுபாலனுக்கு ஸாயுஜ்யபத மளித்தார். மத்ஸ்யம் முதலிய தசாவதாரங்களில் எவரெவர் கொல்லப்பட்டார்களோ எல்லோருக்கும் நற்கதியே யளித்தார்.

247. மோஹத்தினால் ஜனித்த என்னை, மாயையினிடம் அர்ப்பணம் செய்து துன்பத்தை அனுபவிக்கும்போது ஹே! கிருஷ்ண என்னைக் கண்ணெடுத்துப் பாராவிடில் யான் என்ன செய்வனென மனமுருகி வேண்டு. அருள்புரிவார்.

248. உதாஸீனனாய் அஸங்கனாய் நீயிருந்துவிட்டால் நான் பிழைப்பதெப்படி? நான் செய்யும் பக்தியையோ க்ஞானத்தையோ எதிர்பாராமல் என்னைக் கரையேற்று, இல்லையேல் மல ஜல ரக்த மாம்ஸம் நிறைந்த உடலில் நீ தான் பந்தப்படுவாய் என கிருஷ்ணனை வேண்டு.

249 ஓ மனமே? உன் சஞ்சல குணத்தை க்ஷணம் விடு. உலகிலுள்ள ரஸபதார்த்தங்களை யெல்லாம் ஓர்புறத்தே வை. மற்றோரிடத்தே கிருஷ்ணனை வை, இதில் எது ஹிதமோ எது விச்ராந்தியை யளிக்குமோ அதை ஏற்றுக்கொள்.

250. உலகில் நாம் அனுபவிக்கும் விஷயங்களைவிட மேலானது வந்தால் இது அல்பமாகிவிடுகிறது. அதைவிட மற்றொன்று வந்தால் அதுவும் அல்பமாகும். ஆதலால் ஆசை முடிவடைவதில்லை, மனதில் கிருஷ்ணன் உதயமாகிவிட்டால் மற்றொன்றை நாடாது. ஆசையும் பூர்த்தியாகும் அவன் நிறைந்த பொருளன்றோ?

251. காம்ய கர்மாவினால் உபாஸனையால் ஸ்வர்க்கம் முதலியதை விரும்புபவர் விரும்பட்டும். யது நாதனின் பாதாரவிந்தத்தைப் பஜிக்கும் நமக்கு அந்த உலகால் ஆகவேண்டிய தொன்றுமில்லை.

252. இரும்பை அயஸ்காந்தம் இழுப்பதுபோல் கண்ணன் உருவம் எல்லோரையும் இழுக்கும். தனதன்பர்களில் ஏழை தனிகன் சிறியவன் பெரியவன் மூடன் வித்வான் என அவர் பேதம் பாராட்டுவதில்லை. மேகம், ஜாதி சம்பகமென்றும் கள்ளி என்றும் பேதமின்றி வர்ஷிக்கிறது.

253. ஜலம் ஒன்றைத் தவிர மற்றொன்றையும் அபேக்ஷிக்காமல் மத்ஸ்யம் அதிலேயே ஜீவிப்பதுபோல் பக்தன் அவர் சரீரத்திலே அமர்ந்து ரமிப்பான் வேறெதையும் விரும்பான்.

254. ஆகாசம் சூன்யமாகத் தானிருக்கிறது. இருந்தாலும் சாதகம் அதை ப்ரார்த்தித்த வண்ணமாயிருந்து மழைஜலத்தைக் காலத்தில் புஜித்து சந்தோஷிக்கிறது. வாக் மனசுக்கு எட்டாதவனே கிருஷ்ணன். வேண்டவேண்ட அமிருதத்தை யளிப்பான். அவனை விட்டுவிடாதே.

## 15. மோஹமுத்கர மல்லது பஜகோவிந்தம் (31)

(இலக்கணப் படிப்புக்காக தாதுபாடம் படித்தவனைப் பார்த்துச் சொன்னது.)

255. எல்லோருக்கும் இயற்கையான மரணம் ஸமீபித்த காலத்தில் மற்றெந்த கல்வியோ தொழிலோ பட்டமோ பயன்படாது. பகவானைப் பஜித்தால் அந்தியகாலத்தில் அது நினைவிற்கு வரும். அதன் மூலமாக பேரானந்தம் பெறலாம்.

256. பணத்தில் பேராசையை விடு. நற்புத்தியைக் கேள். வைராக்யத்தைக் கை கொள். நீ முற்பிறவியில் செய்த வினைக்கேற்ற படிதான் பணம் கிடைக்கும். கிடைத்ததைக் கொண்டு ஸந்தோஷமா யிரு.

257. பெண்மக்களின் ஸ்தனபாரத்தையோ மற்றதையோ கண்டு மோஹமடையாதே. அது நினைவிற்கு வரும்பொழுதெல்லாம் இது மாம்ஸமும் வஸையுந்தானே என்று சிந்தி.

258. தாமரை இலையின் மேலுள்ள ஜலத்திவலைபோல் நமது ஆயுட்காலம் அதிஸ்வல்பமானது. நிலையில்லாதது. ஜீவித்திருக்குங்காலத்திலோ ஆதிவ்யாதி அஹங்காரம் சோக மோகம் நிறைந்தது.

259. பொருள்தேடும் வரைதான் நம் பரிவாரம் நம்மிடம் அன்பு கொள்ளும். வருமானமும் நின்று வயதும் முதிர்ந்து சரீரமும் தளர்ந்தால் இருக்கிறாயா? சௌக்யமா? என்றுகூட ஒருவரும் கேட்கமாட்டார்.

260. நம்முடலில் காற்றுலாவும் வரை வீட்டிலுள்ளோர் விசாரிப்பர். மூச்சு நின்றதும் இருளில் கூடிக் குலாவிய மனைவியும் இவ்வுடலைக்கண்டு பிணமென பயந்து தூரே செல்வாள்.

261. இளமையில் விளையாட்டுச் சிந்தை. காளைப் பருவத்தில் பெண்ணாசை. முதிர்ந்த வயதில் குடும்பச் சிந்தை. எப்பொழுதான் கடவுளைச் சிந்திக்கும் காலம்?

262. மனைவி என்பவள் யார்? பிள்ளையார்? நீ தான் யார்? எங்கிருந்து வந்தாய்? ஆஹா! அதிவிசித்ரமானது ஸம்ஸாரம். நன்கு யோசித்துப் பார்! யாருக்கு யார் என்ன ஸம்பந்தம்?

263. ஸாதுக்களிடம் பற்றுக்கொண்டால் மற்றதில் பற்றில்லாமை தோன்றும். அதனால் மோஹமகலும். பிறகு நிச்சலமான மனதைப் பெறலாம். அதனால் ஜீவன் முக்தி ஸித்திக்கும்.

264. வயது முதிர்ந்தால் காமவிகாரம் அகலும். ஜலம் வற்றினால் குளம் குளமாகாது. தனம் குறைந்தால் பரிவா

ரம் பறந்துபோம். அதேபோல் தத்துவத்தையறிந்தால் ஸம் ஸாரம் நசித்துவிடும்.

265. கர்வம் பலவகை. தனகர்வம், மனிதக் கட்டி ருக்கிறதென்ற கர்வம். யௌவன வயதிற்காக கர்வம். இதைப் பாராட்டாதே. இவைகளோ அல்லது நீயோ அழிய ஓர் நிமிஷம்போதும். அந்த நிமிஷமோ! காலன் காத் திருக்கிறான். இதனைத்தும் மாயை என்றுணர்ந்து தேடவே ண்டிய பதத்தைத் தேடு. பேரானந்தம் பெறு.

266. பகலு மிரவும், காலையும் மாலையும் சிசிர ருதுவும் வஸந்த ருதுவும், திரும்பத் திரும்ப வந்து போய்க்கொண்டி ருக்கின்றன. காலன் களியாடுகிறான். ஆயுள் போனது தெரியாமல் போய்க்கொண்டேயிருக்கிறது. இப்படி இதைக் கண்ணால் கண்டும் ஆசையை விடமாட்டோமென்கிறோமே?

267. யார் உன் மனைவி. எதற்காக பண ஆசை, உன்னை அடக்குபவரில்லையா? பிறவிக் கடலைத் தாண்ட வேண்டுமாயின் ஸஜ்ஜந ஸங்கமெனும் ஒரே ஓடமுண்டு.

268. வயிற்றிற்காக என்னென்ன வேஷம் போடுகி றான். ஜடை வளர்ப்பானொருவன். முண்டனம் செய்பவ னொருவன். காஷாயத்தைத் தரிப்பானொருவன். ஆத்ம ஸ்வ ரூபத்தை யான் எனக் கண்டாலும் உண்மை காணாது மோஹிப்பான்.

269. அங்கம் தளர்ந்தது, தலை நரைத்தது. பல்லெல் லாம் உதிர்ந்தது. கிழவன் தடியை ஊன்றிச் செல்கிறான், அவனை ஆசைமாத்திரம் விடுவதில்லை.

270. முன்னே கனல், பின்னே சூரியன். இரவிலோ குளிரால் மெலிந்து முழங்காலில் முகத்தை வைத்துக் கண்ணை மூடுகிறான். கையிலே பிக்ஷையேந்தி புஜிப்பான். மரத்தின் கீழே படுத்துறங்குவான். ஆயினும் ஆசைமாத்திரம் விடுவ தில்லை.

271. கங்கைசென்று ஸ்நானம் செய்தாலும் விரதாநுஷ்டானத்தாலும் தானத்தாலும் ஆயிரம் ஜன்மத்தில் இதெல்லாவற்றையும் அநுஷ்டித்தாலும் மோக்ஷத்தை ஞானமின்றி முக்தாமுடியாது.

272. ஆலயமோ மரத்தடியோ வாஸ பூமி; பூமியே படுக்கை. தோல் உடை. எவருடனும் பற்றில்லாமை. இந்த வைராக்ய முண்டாயின் எவருக்குத்தான் பேரானந்தம் பெருகாது?

273. யோகத்தில் பற்றுள்ளவனோ, போகத்தில் ஆசையுள்ளவனோ? ஸங்கத்தில் இச்சையுள்ளவனோ? இல்லாதவனோ? எவன் மனது பிரும்மத்தினிடம் லயமாகி ஸந்தோஷிக்கிறதோ, அவனே உண்மையாக ஸந்தோஷிப்பவன்.

274. பகவத்கீதையில் கொஞ்சமாவது கற்றிருக்கிறாயா? கங்கை ஜலத்தில் துளியாவது குடித்தாயா? ஓர் முறையாவது முராரியைப் பூஜித்தாயா? ஆனால் யமனோடு உனக்கு சண்டையில்லை.

275. பிறப்பது, இறப்பது, மறுபடி தாய் கர்ப்பத்தில் படுப்பது, பிறப்பது, இறப்பது, இப்படி எல்லையில்லாமல் தாண்டமுடியாமலிருக்கும் பிறவிக் கடலிலிருந்து காக்க கருணைக் கடலான கண்ணனே வேண்டும்.

276. தெருவில் கிடக்கும் கிழிந்த துணிகளை உடுத்தி புண்ய பாபச் செயலற்று யோகத்தில் மனதைச் செலுத்தி குழந்தைபோல், பித்தன்போல் யோகி ஸந்தோஷிப்பான்.

277. நீ யார்? நான் யார்? எங்கிருந்து வந்தோம், தாய் யார்? தந்தை யார்? என யோசித்துப் பார். ஸ்வப்னம் போன்ற இந்த உலகைவிடு. சாச்வதமானதை விடாதே.

278. உன்னிடத்திலும் என்னிடத்திலும் எங்கும் தங்கிய விஷ்ணுவே இருக்கிறார். பொறுமையால் ஒருவரையொருவர் ஏன் கோபிக்கவேண்டும்? நான் நீ என்ற

பேதம் அஜ்ஞான்மாகும். அந்தவிடு. எங்கு மாத்மாவைப் பார்.

279. நீ வியாபகனாய் பரமாத்மாவாக வேண்டுமா? ஆனால் உன் சத்ரு மித்ரன் புத்ரன் பந்து எங்கும் ஒரே நிலையாய் ஆத்மா இருக்கிறார் என் நினை. ஒருவருடன் நட்போ பேரரோ வேண்டாம்.

280. காமம் கோபம் லோபம் மோகம், இவ்வ நரக வாசற்படி. இவ்வழி சென்றால் ஜன்மஜன்மமாகத் துன்பம் பெறுவாய். ஆதலின் இதைவிட்டு நான் யார் என நினை.

281. ஏதாவது பேசவேண்டுமானால் பகவத் விஷயமாகப் பேசு, நினைப்பதாயின் பகவானுருவத்தையே நினை. ஸாது ஸங்கத்தை நாடு. ஏழைகளுக்குத் தனத்தைக்கொடு.

282. பெண் போகம் முதலிய விஷயங்களை அனுபவிக்கும்போது ரஸமாகத்தானிருக்கும். பின்னர் வியாதி முதலிய துன்பம் தோன்றும். பிறந்தவன் சாகத்தான்வேண்டும். சித்ரகுப்தனுக்கு வழிசொல்லத்தான் வேண்டும். ஆயினும் உலகம் பாபத்தை விடுவதில்லை.

283. தனம் அனர்த்தத்தை விளைவிக்கும். தனமுள்ளவன், திருடன் அரசன், ஏன்? பெற்றபிள்ளை இவர்களிடம்பயப்பட வேண்டியிருக்கிறது. எப்போது பணத்தை அபஹரிப்பரோ, என்றச்சம். ஆதலி னர்த்தத்தி லாசையைவைக்காதே.

284. பிராணாயாமம் செய். இந்திரிய வியாபாரங்களைச் சுருக்கு. உத்தம மந்திரங்களை ஜபம் செய். பகவத் ஸ்வரூபத்தைத் தியானம் செய். ஆத்ம விஷயமாக அதிக லக்ஷ்யம் செலுத்து.

285. குரு சரணத்தில் ஆழ்ந்த பக்தியை வை, ஸம்ஸாரத்திலிருந்து விடுபடுவாய். பஞ்சேந்திரியங்களுடன் மனதை அடக்கு. உன் ஹிருதய புண்டரீகத்திலுள்ள தேவனைக் காண்பாய்.

## 16. அபரோக்ஷானுபூதி (144)

286. மோக்ஷத்திற்கு வழி க்ஞானம். அதற்கு ஸஹாயம் ஸாதன சதுஷ்டயம். (நித்யமிது அநித்யமிதெனும் பகுத்தறிவு. இம்மை மறுமைச் சுகத்தில் வெறுப்பு. சமதமாதி மோக்ஷம் வேண்டுமென்ற தீவ்ர ஆசை) இவை எப்படி கிடைக்கும்? தன் தன் வர்ண ஆச்ரம தர்மத்தை அநுஷ்டித்தால் கடவுள் சந்தோஷ மடைந்து இவை கிட்டும்படி செய்வார். தவத்தாலும் ஹரி பக்தியாலும் கிடைக்கலாம்.

287. பிரும்ம பதவிவரையிலுள்ள ஒவ்வொரு சுகத்திலும் காக்கையின் எச்சம்போல் துச்சமெனத் தோன்றும் வைராக்யமே நிர்மலமானது. க்ஷணம் தோன்றி மறையும் வைராக்யம் வைராக்ய மாகாது.

288. ஆத்மஸ்வரூபம் ஒன்றுதான் நித்யம். மற்றநித்யமென த்ருடமான நம்பிக்கைதான் நித்யாநித்யவஸ்து விவேகம்.

289. நமது சித்தத்தில் ஏறியுள்ள வாசனைகளைக் களைவது சமம். மனம் வெளியில் ஸஞ்சரிக்காமல் தடுப்பதுதமம். விஷயங்களிலிருந்து திரும்புதல் உபரதி, துன்பங்களைப் பொறுப்பது திதிக்ஷை. வேத வாக்கிலும் ஆசார்யோபதேசத்திலும் வைக்கும் பக்தி, ச்ரத்தை எனப்படும். பரமாத்வானிடமே ஏகாக்ரமாய் மனதைச் செலுத்துவது ஸமாதானம்.

290. பாழான ஸம்ஸார பந்தத்திலிருந்து எப்போது விடுபடுவேன் என ஆழ்ந்த புத்தி மோக்ஷேச்சை எனப்படும். (இந்நான்கும் ஸாதன சதுஷ்டயம்)

291. ப்ரகாச மில்லாவிடில் எதிரிலிருந்தாலும் வஸ்து விளங்குவதில்லை. அதேபோல் ஸாதனத்துடன் கூடிய விசாரமில்லாவிடில் ஆத்ம ஸ்வரூபம் விளங்குவதில்லை.

292. நான் யார்? உலகம் எப்படி உண்டானது? இதற்குக் கர்த்தா யார்? மூல காரணம் யாது? பஞ்சபூதத்தாலாகிய உடலா நான்? இந்திரியக்கூட்டமா நான்? இவைகளை விட வேறு? என்பதே விசாரிக்க வேண்டிய விஷயம்.

293. அக்ஞானத்தால் உலகம் தோன்றிற்று. க்ஞானம் வந்தால் மயமாய்விடும். பலவகையான நமது ஸங்கல்பமேதான் கர்த்தா, என்று இதை யுக்தியால் வேதாந்த வாக்ய மூலமாக விசாரிக்கவேண்டும்.

294. உலகம் ஜீவன் இரண்டிற்கும் மூலகாரணம் ஆத்மா. அது ஸூக்ஷ்மம். அழியாப் பொருள். பானை செட்டிகளுக்கு மண் மூலகாரணம். பானை உடைந்தால் மண் அழிவதில்லை. உலகமழிந்தால் ஆத்மா அழியாது.

295. அக்ஞானமென்பது யாது? ஆத்மா பற்றற்ற நித்ய சுத்த சைதன்யன். ஏகன். உடலோ அழிவுள்ளது. ஐந்து பூதங்களாலாகியது, இவ்விரண்டையும் ஒன்றாகச் சேர்த்து உடலையே நான் என நினைக்கிறோம். இதே அக்ஞானம்.

296. ஆத்மா அடக்குவது. உடல் அடக்கப்படுவது. ஆத்மா க்ஞான வடிவம். புண்யமயமானது. உடலோ மாம்ஸமயம். அசுசி. ஆத்மா ஸ்வப்ரகாசன். தேஹம் தாமஸம். இரண்டையும் ஒன்றாக நினைத்தால் இதைவிட அக்ஞானம் வேறு ஏது?

297. என்னுடைய வீடு என்பதுபோல் என் உடல் என்று கூறுகிறோம். ஆதலால் உடலல்ல நாம். ஸச்சிதானந்த லக்ஷணமான பிரும்மமே நான், என்பது க்ஞானம்.

298. கர்மகாண்டத்தில் ஜீவன் புண்ய பாபகர்மாவிற்கேற்றபடி ஸ்வர்க்க நரகம் சென்று ஸுகதுக்கங்களை அநுபவிப்பதாகக் காண்கிறோம். ஆதலால் ஸச்சிதானந்தமான ஆத்மா நான் என்பது எப்படி பொருந்தும்?

பழுதைப் பார்த்து கண்தோஷத்தாலல்லது ப்ரகாசக் குறைவால் ஒருவன் பாம்பென பயப்படுகிறான். அதேபோல் அக்ஞானத்தால் ஜீவன், ஸம்ஸாரம், உலகமனைத்தும் தோன்றினவை. அந்த ஸ்திதியில் அது உண்மையே.

299. எல்லா வஸ்துக்களுக்கும் ஆதிகாரணம் பிரும்மமே. அதைத் தவிற மற்றதெல்லாம் கல்பிதம். அநித்யம். ஒன்றே வஸ்து. பலவாறாக நினைப்பவன், அடிக்கடி பிறந்திறந்து துன்பமடைவான்; எனச்ருதி சொல்கிறது.

300. ஸ்வர்ணத்தால் காப்பு மோதிரம் வளையல் மற்றும் பல ஆபரணம் செய்தாலும் ஸ்வர்ணம் ஸ்வர்ணமேயன்றோ. அதேபோல் வியவஹார தசையில் காணப்படும் பொருளெல்லாம் ஸ்வர்ணம் போன்ற பிரும்மத்தினிடமிருந்தே தோன்றினும் முடிவிலும் அத்துடன் ஐக்யமாகும்.

301. இரண்டாவது பொருள் ஒன்று உண்டு என்றால் பயமுண்டு; ஒன்றெனப் பார்ப்பவனுக்கு மோஹமுமில்லை சோகமுமில்லை.

302. அந்த பிரும்மம் எப்படியிருக்கும் எனில் பிருஹதாரண்யமெனும் ச்ருதி, இதோ ஆத்மா, பிரும்மம் எல்லா வஸ்துவாயும் நிற்கிறது பார் என ப்ரத்யக்ஷமாகக் காட்டுகிறது.

303. கண்ணெதிரில் அநுபவிக்கும் உலகை எப்படி பொய் என்பது எனில்? ஸ்வப்பனத்தில் அனுபவிக்கும் வஸ்து அதுவரைதானே உண்மை. விழித்தால் எப்படி பொய்யாமோ? அதேபோல் க்ஞானக் கண்ணைத் திறந்தால் இது அழிந்துவிடும்.

304. விழித்திருக்கும்போது ஸ்வப்னமில்லை. ஸ்வப்னத்தில் விழிப்பில்லை. உறங்கும்போது விழிப்புமில்லை ஸ்வப்னமுமில்லை. ஸ்வப்னத்திலும் விழிப்பிலும் உறக்க

மில்லை. ஆதலின் இம்மூன்றுமே வாஸ்தவமின்லை. ஆனால் மூன்றுக்கும் ஸாக்ஷியாய் நிற்பவனாத்மா.

305. மண்ணில் பானை என்னும் ப்ராந்தி, முத்துச்சிப்பியில் வெள்ளியென்றமோஹம், உண்டாவது போல் பரமாத்மாவினிடம் ஜீவன் எனப்ராந்தி தோன்றுகிறது.

306. சூன்யமான ஆகாசத்தைக் கறுப்பான இடமென நினைப்பது, கட்டை நிற்பதைப் பார்த்து மனிதன் என ப்ரமிப்பது, கானலைக்கண்டு ஜலமென்றெண்ணுவது, சந்திரனை இரண்டாகக் காண்பது எப்படியோ அப்படியே ஒன்றான ஆத்மாவினிடம் ஜகத்தைக் காண்பது.

307. ஜலத்தை அலை, தாம்ரத்தைக் குடம், மண்ணைப் பானை, நூலை வஸ்த்ரம் என அழைப்பதுபோல் பரமாத்மாவைத்தான் உலகென நினைக்கிறோம்.

308. க்ஞானியின் கண்ணுக்கு உலக வஸ்துக்களனைத்தும் சித்ஸ்வரூபமாகவே தோன்றும். அக்ஞானிக்கோ ஸாமான்ய வஸ்துக்களே தோன்றும். தன்னுடலையே ஆத்மாவாக எண்ணுவான்.

309. ஜலத்தில் மரத்தின் நிழலைப் பார்த்தால் தலைகீழாகத் தெரியும். வேகமாக வண்டியில் போகிறவனுக்கு தான் நிற்பதுபோலவும் அருகிலுள்ள வஸ்துக்களே வேகமாய்ப் போவதாகவும் தெரியும். அதேபோல் மாயையால் மதிமயங்கி நானே ஆத்மாவென நினைவு.

310. கொள்ளிக்கட்டையை வேகமாகச் சுற்றினால் அது சக்கராகாரமாகத் தோன்றும். பெரிய வஸ்து தூரத்திலிருந்து பார்த்தால் அணுவாகக் காணப்படும். சின்ன பொருளைப் பூதக்கண்ணாடியில் பார்த்தால் பெரிதாகத் தோன்றும். இதேபோல் அக்ஞானிக்கு உள்ளது தோன்றாது. இல்லாதது தோன்றும்.

311. மேகமோடும்போது சந்திரன் ஓடுகிறுன் என்று நினைப்போம். ஜலம் அசையும்போது ஆங்குள்ள சந்திரனை சையக் காண்கிறோம். உண்மை அப்படியில்லை. அதே போல் தேஹ தர்மத்தை ஆத்மகார்யமாக நினைக்கிறோம். இதே அத்யாஸமெனப்படுவது.

312. ஆத்ம ஸ்வரூபத்தைத் தேடி ஆனந்தமடையப் வேண்டும். ப்ராரப்தத்தால் வரும் சுகதுக்கங்களைப் பொறுக்க வேண்டும்.

313. ஓர் கர்மா பலனைக் கொடுப்பதற்காக இவ்வுடலைக் கொடுத்தது. இதில் க்ஞானம் சம்பாதித்துக்கொள்வோமாகில் ஆகாமி ஸஞ்சிதமென இரண்டு பாபமும் எரிந்து போம். ப்ராரப்தம் மாத்திரம் அநுபவித்தே தீர்க்கத்தக்கது. ஓர் பாணத்தை விடாமலிருந்தால் பிறகு விட்டாலும் விடலாம். பெட்டியிலே போடவும் போடலாம். பாணத்தை விட்டு விட்டால் அதை எப்படி பாதிவழியில் நிறுத்தமுடியாதோ அதேபோல் ப்ராரப்தம் என்பர்.

314. ஆனால் பரமாத்மாவைக் கண்டால் எல்லா கர்மாவும் ஒழியும் என்றிருப்பதாலும் ஞானியின் கண்ணுக்கு வேறொன்று மில்லையாதலாலும் ப்ராரப்தம் கூட ஒழிந்து விடும்.

315. யமம், நியமம், தியாகம், மௌனம், தேசகாலம், ஆஸனம், ப்ராணுயாம ப்ரத்யாஹாரம், த்யானம், தாரணை, ஸமாதி என்ற ஸாதனங்களால் ப்ரதிதினம் ஆத்மாவைத் தியானம் செய்.

316. எல்லாம் பிரும்மமே என்ற தியானத்தால் கண் காது மூக்கு நாக்கு த்வக் என்ற பஞ்சேந்திரியங்கள் தங்கள் தோழருடன் வெளிச்செல்லாமல் கொஞ்சம் கொஞ்சமாக ப்ரதிதினம் அப்யஸித்தல் யமம் எனப்படும்.

317. எல்லாம் பிரும்மம் என்ற எண்ணமே தொடர்ச்

யாக வரும்படி, குறுக்கிடும் மற்ற எண்ணங்களை அடக்குவது நியமமாகும்.

318. நிதாத்மாவைப் பிடித்துக்கொண்டு ஸகலப்ரபஞ்சத்தையும் துச்சமென விடுதலே தியாகமாகும். ப்ரபஞ்சமென்பதில் தன் மனை, மனைவி, மக்கள், பொருள், உடல் எல்லாம் சார்ந்தது. ஆதலின் தியாகமென்பது சிறந்த மார்க்கம்.

319. வாக்கிற்கும் மனதிற்கும் எட்டாதது என்று எப்பொருளை ச்ருதி கூறுகிறதோ அம்மெய்ப்பொருளை மனதிலே நிறுத்துவது மௌனமாகும். பேசாமலிருக்கும் மௌனம் வேதாந்தாரம்ப தசையிலுள்ள குழந்தைகளுக்கு.

320. ஜனக் கூட்டமில்லாத இடம் தேசமென்றும் காலை மாலை முதலிய வேளையைக் காலமென்றும் சொல்வர். ஆனால் எப்பொருளினிடம் ஆதியிலும் தற்போதும் அந்தத்திலும் மனிதன் முதலிய வஸ்துக்களில்லையோ அதே தேசம். பிரும்மாதி தேவர்களையும் உலகையும் நிமேஷ மாத்திரத்தில் ஸ்ருஷ்டிப்பதால் காலமென பரமாத்மாவிற்கே பெயர். எவ்விடத்தில் எக்காலமாயிருந்தாலும் ஆத்மானு ஸந்தானம் செய்.

321. ஆஸனமென்பது பத்மாஸனம் வீராஸனம் குக்குடாஸனம் முதலியதல்ல. எப்பொருளினிடம் சேர்ந்தவர் ஸித்தர்களாவார்களோ அதே ஸித்தாஸனம்.

322. மூக்கின் நுனியில் கண்ணை வைத்து (நன்றாய்த் திறந்தால் வரும்போகும் மனிதனைப் பார்த்து ஸமாதி ஏற்படாது. நன்றாக மூடினால் தூக்கம் வந்துவிடும்) தியானம் செய்வது அப்யாஸிக்கு. க்ஞான மயமான திருஷ்டியைக் கொண்டு பிரும்ம மயமான ஜகத்தைப் பார்ப்பதே ஸம திருஷ்டியாகும்.

323. மனம் முதலிய ஸகலவிடங்களிலும் பிரம்மமே என நினைத்து காமக்ரோதம் முதலிய மற்ற விருத்திகளைத்

தடுப்பது ப்ராணாயாமம். ச்வாஸ பந்தம் செய்வது ஸாமான்யமாம்.

324. ஒரு மூக்கால் உள்ளிருந்து மூச்சைவிடுவது ரேசகம். மற்றோர் த்வாரத்தால் உள்ளே யிழுப்பது பூரகம். இடையே நிறுத்துவது கும்பகம். இதல்ல பிரும்மம், இதல்ல, வென்பது ரேசகம். நானே பிரும்மம் என நினைப்பது பூரகம். இந்த விருத்தியை ஸ்திரமாக வைப்பது கும்பகமாம்.

325. விஷயங்களிலுமாத்மாதான் என நினைத்துச் சித்தினிடம் மனதை லயப்படுத்துவது ப்ரத்யாஹாரமாம். இதை ப்ரதிதினம் அப்யஸிக்கவேண்டும்.

326. எங்கு எங்கு மனம் போகிறதோ அதெல்லாம் பிரும்மம் என்று நினைத்து மனதை ஆத்மாவினிடமே தரிப்பது தாரணமாம்.

327. நான் பிரும்மமாகவே இருக்கிறேன் என்ற மனோவிருத்தியால் வேறொன்றையும் எண்ணாமலிருத்தலே தியானமாம்.

328. மற்றதை மறந்து நானே பிரும்மம் என்ற எண்ணம் ஸ்திரமாய் வந்து அதுவும் மறந்து விருத்தியில்லாமலிருத்தல் ஸமாதியாகும்.

329. ஸமாதிக்கு ஆரம்பிக்கும்போது மனதில் பரம்பொருள் பிடிபடாது. சோம்பேறித்தனம், போகத்திலாசை, தமோகுணம், மனது அலைச்சல், ரஸத்தில் ஆசை, சூன்யமாயிருத்தல் இப்படிப் பல விக்னம் தோன்றும். அதை க்ஞானி ஜயிக்கவேண்டும்.

330. பிரும்மம் நான் என எண்ணி அப்யஸிக்காதவன் பசு. அந்த விருத்தியை அப்யஸிப்பவன் மூவுலகிலும் போற்றத்தக்கவன்.

331. வாசா பலபல வேதாந்தம் பேசுவது வீண். ஒரு நிமிஷமேனும் தியானம் செய்வதே சிறந்தது. உலகப்பற்று

நிறைந்து வைராக்யம் பேசுவோர் அக்ஞானிகளே. மறுபடி பிறப்பிறப்பெனும் துன்பத்தை அநுபவிப்பவர் அவர்.

332. உலகிற்கு காரணம் பிரும்மம். கார்யமான உலகம் நசிக்கும், காரணமான பிரும்மம் நசிக்காது, என யோசித்து சித்தம் தெளிந்தால் பிரும்ம வடிவமான விருத்தி ஏற்படும். இந்த விருத்தியில், பிரும்மா ஸநகாதிகள் சுகர் முதலியோர் இருக்கின்றனர்.

333. ஆஹாரத்திற்காக குளவியால் தன் கூட்டில் கொண்டுவைக்கப்படும் புழு, குளவி வருமே! சப்தம் கேட்கிறதே! என்று அதேதியானம் செய்வதால் புழுவே குளவியாக மாறிவிடுகிறது. அதேபோல் அப்யாஸகன் பிரும்மானு ஸந்தானம் செய்வதால் இடையில் மாயையால் தோன்றிய ஜீவ பாவத்தைவிட்டு பிரும்மமாகிறுன்.

334. கீழ்சொன்ன ஸாதனங்களே ராஜயோகமாம். ஆழ்ந்த குருபக்தியோ தெய்வபக்தியோ உள்ளவர்களுக்கு இவை பரமசுலபமாகக் கைகூடும்.

## 17. ஆத்மபோதம் (68)

335. பலமுறை கேட்டும் ஆத்மஸ்வரூபம் ஏன் எல்லோருக்கும் விளங்குவதில்லை? தபஸினுல் பாபம் குறைந்து வைராக்யம் நிறைந்து தீவ்ரமாக மோக்ஷேச்சை வந்தால்தான் ஸ்வரூபம் விளங்கும்.

336. மோக்ஷத்திற்கு ஸாக்ஷாத் ஸாதநம் க்ஞானம் ஒன்றே. அரிசி அடுப்பு விறகு பாகஞ்செய்பவன் இருந்தும் அக்னியினுல்தான் பாகம் ஆகிறது.

337. அவித்யையினுல்தான் நமக்குத் துன்பம், ஞானம் தவிற மற்றதெல்லாம் அவித்யைக்கு அநுகூலம். இருளை நீக்க கோடரியால் மற்றதால் முடியுமோ ? இருள் சத்ருவான

வெளிச்சம் வந்தால், தாமஸ ஓடும். அதுபோல வித்யை தோன்றின் அவித்யை அகன்றுவிடும்.

338. உண்மையில் ஸ்வப்ரகாசனாயினும் மாயையால் மறைக்கப்பட்டிருக்கிறானாத்மா. மேகமகன்றால் ஸூர்யனைப் போல், மாயை அழிந்தால் ஆத்மா ப்ரகாசமாக விளங்குவான்.

339. நான் பிரும்மம் உடலல்ல. மாயையால் உண்டானது உலகு என்ற க்ஞானம், ஆத்ம ஸாக்ஷாத்காரமானவுடன் தேத்தாங்கொட்டை கலங்கிய ஜலத்தில் சேற்றை விலக்கி சுத்த ஜலமாக்கி சேற்றுடன் தானுமழிவதுபோல் தானும் அழிந்துவிடும்.

340. நீரில் உண்டாகும் குமிழ் அதிலேயே நசிப்பதுபோல் பிரும்மத்தினிடமே தோன்றி அல்பகாலமிருந்து ஸகலஜகத்தும் அங்கேயே ஒடுங்குகிறது.

341. மேகத்திலிருந்து ஒரே மாதிரியாகத்தான் ஜலம் விழுகிறது. ஓரிடத்தே ருசி ஓரிடத்தே உப்பு ஓரிடத்தே கறுப்பு ஓரிடத்தே வெளுப்பாகக் காண்கிறோம். ஒரே சைதன்யம் உபாதி பேதத்தால் பிராமணன் க்ஷத்ரியன் என வர்ணாச்ரம பேதத்தை அடைகிறது.

342. மண் ஜலம் தேஜஸ் வாயு ஆகாசம் இவை பஞ்ச பூதம். இதில் ஒவ்வொன்றையும் பாதியாக்கி, ஓர் பாதியைப் பிரித்து மற்ற பூதங்களுக்கு பங்கிடுவது பஞ்சீகரணம். அதல்லாதது அபஞ்சீக்ருதமெனப்படும். நமது கர்மாவினால் ஸம்பாதித்து பஞ்சீக்ருத பூதத்தினால் செய்யப்பட்ட இவ்வுடல் போகங்களை அனுபவிக்குமிடமாகும்.

343. ஹ்ருதயத்திலுள்ள காற்று ப்ராணன், குதத்தில் அபானன், நாபியில் ஸமானன், கழுத்தில் உதானன், உடலெல்லாம் பரவியது வியானன் என பஞ்ச ப்ராணன், மனஸ் புத்தி, ஐந்து க்ஞானேந்திரியம் ஐந்து கர்மேந்திரியம் ஆக-

இவை அபஞ்சீகிருத பூதத்தாலுண்டானவை. போகத்திற்கு ஸாதனமாயிருப்பவை இவைகளே.

344. அநாதியாய் இப்படி என்று சொல்லமுடியாததாயுமிருக்கும் அவித்யை, காரணோபாதி எனப்படும். இம்மூன்றையும் விட்டு வேறாகயிருப்பவனாத்மா.

345. அன்னமய பிராணமய மனோமய விக்ஞானமய ஆனந்த மயம் என் அந்தந்த உபாதியால் ஆத்மா தத்தன்மயமாகக் காணப்படுகிறான். சுத்த ஸ்படிகத்தினருகே நீல புஷ்பத்தைக்கொண்டு வந்தால் அது நீலமாகும். சிவப்பை வைத்தால் சிவப்பாகும்.

346. அரிசியின்மேல் தவுடு உமி இருப்பதுபோல் ஆத்மாவின் மேல் பஞ்சகோசம் சூழ்ந்திருக்கிறது.

347. மனதுடன் கூடிய கண் பார்க்கிறது. காது கேட்கிறது. மற்ற இந்திரியம் தன் வேலையைச் செய்கிறது. இதை உலகம், நான் பார்க்கிறேன் கேட்கிறேன் என்று கூறுகிறது. மேகம் ஓடினால் சந்திரன் ஓடுகிறான் என நினைப்பது ஸகஜம்.

348. ஆசை கோபம் ஸுகம் துக்கம் இவை புத்தியின் வேலை, ஆத்மாவின் வேலை இல்லை. ஆத்மாவின் வேலையாயின் ஸதா இவை இருந்துகொண்டேயிருக்கவேண்டுமே. தூக்கத்தில் புத்தியில்லை. இவ்வாசைகளுமில்லை.

349. ஸூரியனுக்கு ஒளி, ஜலத்திற்கு சீதளமாயிருத்தல், அக்னிக்கு உஷ்ணம் எப்படி இயற்கையோ அதேபோல் ஆத்மாவிற்கு ஸத்சித் ஆனந்தமென்பது ஸ்வபாவமாம்.

350. ஒரு பொருளைக் காணும்போது இதை அறிகிறேன், என ஓர் அறிவுண்டாகிறது. இதில் அறிவை விளக்குவது ஆத்மாவின் அம்சம். அந்த வஸ்துவின் விருத்தி, மனதின் வியாபாரம் இவ்விரண்டையும் அவிவேகத்தால் ஒன்றாகப் பேசுகிறோம்.

351. ஆத்ம ஸ்வரூபத்தைத் அறியும் வரையில்தான் உலகில் அதை இதை அறியவேண்டுமென்றாசை. ஆத்மா அறிவு மயமாயிருப்பதால் வேறோர் அறிவு இதை விளக்கவேண்டுவதில்லை. தீபம் தன்னை விளக்க வேறோர் தீபத்தை வேண்டுகிறதா?

352. தேஹத்தைவிட வேறாக ஆத்மாயிருப்பதால், பிறப்பு கிழத்தனம் இளைத்தல் பெருத்தல் இவை ஆத்மாவிற்கில்லை. ஆத்மாவிற்கு இந்திரியாதிகளில்லையாதலால் சப்தாதிவிஷயங்களோடும் ஸம்பந்தமில்லை.

353. இடைவிடாமல் நான் பிரும்மம் என்று நினைத்தலே ரஸாயனம். இதை ஸேவிப்போர் ஜன்மமரணப் பிணியால் கஷ்டப்படார்.

354. ஆத்மா எனும் அரணியில் த்யானமெனும் கடைதலால் க்ஞானமெனும் ஜ்வாலை கிளம்பி அக்ஞானம் கர்ம எனும் கட்டைகளைத் தஹிக்கும்.

355. க்ஞானமெனும் அருணோதயமானவுடன் அக்ஞான இருளகலும். ஆத்மாவெனும் ஸூர்யன் உதிப்பான்.

356. ஆத்மாவை நாம் புதிதாக அடைவதென்பதில்லை. ஏற்கனவே இருந்ததை மறந்து புதிதைப்போல் அடைகிறோம். தன் கழுத்திலிருந்த ஆபரணத்தை எங்கேயோ வைத்ததாக அலைந்துத் திரிந்து போய்விட்டதென துக்கிக்கிறான் ஒருவன். கழுத்தைத்தொட்டான். அது அகப்பட்டது. புதிதாக வந்ததுபோலல்லவா ஸந்தோஷிக்கிறான்.

357. மோக்ஷமடைய முடியாமல் ஓர் ஸமுத்ரம் குறுக்கேயிருக்கிறது. பல ராக்ஷஸர்கள் பயமுறுத்துகின்றனர். இதைத்தாண்டி அவர்களைக் கொன்றால் மோக்ஷமே. ஸமுத்ரம் எது? மோஹம், ராக்ஷஸர் யார்? காம க்ரோதாதிகள்.

358. க்ஞானமுள்ளவன் ஸம்ஸாரத்திலிருந்தும் ஆகாசம்போல் அதில் ஸம்பந்தப் படாமலிருப்பான். ஸல்

லாமறிந்தும் மூடனைப்போலிருப்பான். வாயுவைப்போல் பற்றில்லாமல் எங்கும் ஸஞ்சரிப்பான்.

359. அந்த பிரும்ம ஸ்வரூபத்தைக்கண்டால் வேறு ரூபம், சுகம், க்ஞானம், பார்க்கத்தக்கது, ஆகத்தக்கது என்பது கிடையாது.

360. பிரும்மானந்தத்தின் லேசத்தைக் கொண்டே மனுஷ்யானந்தம் முதல் சதுர்முக பிரும்மானந்தம் வரையில் தாரதம்மியமாக அனுபவிக்கப்படுகிறது. பாலில் நெய்போல் எங்கும் பிரிக்கமுடியாமலிருக்கிறது அவ்வானந்தம். சுத்த பூர்ணானந்தம் பெறின் அதன் சுகத்தைச் சொல்லமுடியுமா?

361. ஸ்வப்ரகாசமான அப்பரம்பொருள் ஏன் நமது கண்ணில் படவில்லை? சூர்யன் குருடனுக்குத் தெரிகிறதா? க்ஞானிக்கு ஆத்மா ப்ரகாசனாகத்தான் தோற்றுகிறான்.

362. ச்ரவணமனனம் முதலியவைகளால் க்ஞான மெனும் தீயை வளர்த்து காமக்ரோத அஹங்காராதி மலங் கலந்த ஜீவஸ்வர்ணத்தை உருக்கினால் ஸ்வப்ரகாசமாய் வெளி வரும்.

## 18. ப்ராதஸ்மரணம் (3)

363. என்னுள்ளத்திலே நின்று விழிப்பு கனவு தூக்க மெனும் மூன்றுக்கும் ஸாக்ஷியாயிருக்கும் பரமஹம்ஸர்களா லறியத்தக்க பரம்பொருளைத் துரீய வஸ்துவை அதே நான் உடலல்ல என காலையில் எழுந்தவுடன் நினை.

364. எது வாக்கிற்கும் மனதிற்கும் எட்டாததோ, எதனிடமிருந்து வேதவாக்கு முதலியன தோன்றிற்றோ, ச்ருதிகள் எதன் உருவத்தை நேராகச் சொல்ல சக்தியற்று இதல்ல இதல்ல என கூறிற்றோ அந்த அச்யுதனைக் காலையில் பஜி.

365. ஸூர்யனைப்போல் பிரகாசமாய், உலகில் தோன்றிய வஸ்துக்களுக்கெல்லாம் காரணமாய், யோசித்துப் பார்த்தால் ஒன்றாய் விளங்கும் பரம்பொருளைக் காலையில் வணங்கு.

## 19. நிர்க்குணமானஸ பூஜை (25)

366. ஆத்மாவையே மணிமய லிங்கமாகக் கொள். மாயை என்ற பட்டணத்திலே உனது ஹிருதய கமலமெனும் பீடத்திலதை அமர்த்தி வை. ச்ரத்தை என்ற நதியிலிருந்து நிர்மலசித்தமெனும் ஜலத்தைக்கொண்டுவந்து ஸமாதி எனும் புஷ்பத்தால் அர்ச்சனை செய். மறுபிறப்பை நீக்கலாம்.

367. நான் எனும் ஒரே பொருள்தான் சாச்வதமாக நிற்பது என்ற எண்ணமே ஆவாஹனமாகும். தன்னிடத்திலே ப்ரதிஷ்டையுள்ளவனவன் என்பது ஆஸனமாம்.

368. புண்யபாபப் பற்றில்லாதவன் நான் என்பதே ஸகல பாபத்தையுமகற்றும் பாத்யமாம். அனாதியாய் உள்ளது அக்ஞானமென்றெண்ணி அதைவிடு. அதே அர்க்யமாகும்.

369. பிரும்மானந்தமென்பது ஓர் கடல். அதன் ஓர் திவலையின் கோடிபாகமே இந்திராதி ஆனந்தம் என நினை, இது ஆசமனம். பிரும்மானந்தமெனும் ஜலத்தில்தான் ஸகல ஜனங்களும் மூழ்கியிருக்கின்றனர் என்றெண்ணத்தால் அபிஷேகம் செய்.

370. ஆவரணமெனும் மறைதலற்று ப்ரகாசமாயிருப்பவன் நானென்று வஸ்திரம் ஸமர்ப்பி. முக்குணத்தினலுண்டான ஸகலஜகத்தெனும்மாலையில் ஸூத்ரமாயிருப்பது நான் என யக்ஞோபவீதம் சாத்து.

371. பலவகையான வாஸனை நிறைந்த ப்ரபஞ்சம்

என்னுல் தரிக்கப்படுகிறதென சந்தனமிடு. ரஜஸ்ஸத்வதமஸ் என்ற முக்குணங்களாலுண்டாகும் விருத்தியைத் தியாகம் செய். இதே திலாக்ஷதையாகும். ஜீவன் முக்தி எனும் பலம் ஸித்திக்கும்.

372. ஈசன் குரு நான் என மூன்றுபேதமில்லாத ஓர் பில்வத்தால் அர்ச்சி. எல்லா வாஸனைகளையும் விடுவதே தூபம். ஜ்யோதிஸ்வரூபனுத்மா என தீபமளி. பிரும்மாண்டம் அன்னம், யமன் கரிகாய் என நிவேதனம் செய்.

373. அக்ஞானமெனும் எச்சில்கையை க்ஞான ஜலத்தாலலம்பு. அன்புடன் அனுபவிக்கும் விஷயங்களை த்யாகம் செய். அதே தாம்பூலமாம். அக்ஞான இருளையகற்றும் சூர்யன் ஆத்மா என்று தீபாராதனைச் செய்.

374. பூர்ணனந்தன் ஆத்மா என புஷ்பாஞ்ஜலிசெய். அனேக பிரும்மாண்ட கோடிகள் என்னிடம் சுற்றுகின்றன. நான்சைவற்றவன் என பிரதக்ஷிணம் செய். உலகெலாம் பிரும்மத்தையே நமஸ்கரிக்கிறது. பிரும்மம் வணங்கத் தக்க பொருள் வேறில்லை, என்பதே நமஸ்காரம்.

375. கர்மா இல்லாதவன் ஆத்மா என ஸத்கிரியையாம். நாமரூபமற்றவனென்பது நாமகீர்த்தனம். அது கேட்கத்தக்க வஸ்துவில்லை என்பது ச்ரவணம். நினைக்கத் தக்கதில்லை என்பது மனனம். த்யானம் செய்ய முடியாதென்பது நிதித்யாஸனம்.

376. பிராந்தி விக்ஷேபங்களைவிட்டு ஆத்ம நிஷ்டனுயிருத்தல் ஸமாதி. இது வேதாந்த கல்பத்தில் சொல்லிய பூஜை. ஏகாக்ர சித்தனுய் ஓர் நாளோ மரணம் வரையிலோ இப்படி மானஸிக பூஜைசெய்பவன் காலில் ஒட்டிய தூளியை உதறுவதுபோல் ஸகல வாஸனைகளையும் விடுவான். மோக்ஷானந்தத்தைப் பெறுவான்.

## 20. தத்வோபதேசம் (87).

377. நீ அந்த பிரும்ம வடிவம் என்பது குரு உபதேசம். சிஷ்யன் உடலைத் தானாக நினைத்தவன். ஆதலின் உடலையும் ஆத்மாவையும் பிரித்துக் காட்டி ஜீவாத்ம ஐக்யத்தை ஸ்திரப்படுத்த முயலுவார் குரு.

378. நீ அழியும் தேஹமல்ல, இந்திரியமல்ல. தேஹத்தின் ஏகதேசத்திற்கோ இந்திரியங்களுக்கோ நாசமேற்படின், என் உடல் நாசமாகிறது. என்னிந்திரியம் ஒழிந்தது. எனப் பேசுகிறு யல்லவா? அவைகளே ஆத்மாவாயின் ஆத்மாவிற்கு அழிவேற்படும். சொல்பவ னிரானன்றோ?

379. எல்லா இந்திரியங்களையும் சேர்த்து ஆத்மா எனக் கூறலாமா? இவைகளால் தானே ஆத்மா என்று ஒருவன் உள்ளிருப்பதாகத் தெரிகிறது. எனில்? அனேக அரசர்களுடைய ஆளுகையில் ஓர் ஊரிருக்க முடியுமா? ஒருவன் கப்பம் கட்டவேண்டுமென்பான், இன்னுமொருவன் வேண்டாமென்பான். இவர் சண்டையில் ஊர் அழியுமன்றோ? ஒரு ஆத்மா சரீரம் படுக்கவேண்டுமென்றால் இன்னொன்று ஊர் சுத்தவேண்டுமென்று கூறும். யார் சொற்படி நடப்பது?

380. மனதை அல்லது பிராணனை ஆத்மா எனலாமோ? இல்லை. என்மனம் வேறோர் விஷயத்திற் சென்றது. ஆதலால் நீர் சொன்னது கேட்கவில்லை. பசி தாஹத்தால் என் பிராணன் வாடி, போய்விடும்போலிருந்தது என்று சொல்கிறோம், ஆதலால் இவைகளைவிட வேறாக இவைகளுக்கு யஜமான ஸ்தானத்தில் ஒன்றிருக்கவில்லையா? அதே நீ.

381. தூங்கும்போது தானும் தூங்கி, விழித்திருக்கும்போது சித்தின் நிழலால் தேஹத்தில் எங்கும் நிறைந்து நிற்கும் புத்தியையும் ஆத்மா எனத் தகாது. ஏன்? தூங்கும் போது லயித்து, விழித்தபோது எண்ணிறந்த வஸ்துக்களு

டன் கலந்து தத்தன் மயமாகி சஞ்சலமாய் க்ஷணிகமாயுள்ள புத்தியை எப்படி நித்ய ஸத்ய நிர்மல வஸ்துவாகக் கூறமுடியும்? அப்புத்தியையும் தூண்டுகிறவன் ஒருவனில்லையா? அவனே ஆத்மா?

382. ஆத்மாவை எதனால் காணமுடியும்? தூங்கும் போது தேஹேந்திரியங்கள் வியாபாரமற்றுக் கிடக்கின்றன. ஸாக்ஷியாக ஒருவன் இருந்து எழுந்தவுடன் இதுவரை சுகமாகத் தூங்கினேன் என அனுபவத்தைக் கூறுகிறானன்றோ? அவனைக்கொண்டுதான் ஆத்மாவைக் காணமுடியும்?

383. ஸகல ப்ரமாணங்களையும் அறிவிப்பது போத ரூபமான ஆத்மா. அந்த ஆத்மா வேறு பிரமாணங்களால் அறியத்தக்கதாகுமா? அறியத்தக்கது ஆனால் எல்லாவற்றையும் எரிக்கும் அக்னியைக் கொளுத்த கட்டைகளைப் போடுவதுபோலாகும்.

384. ஆத்மா உலகப்போக்கைப் பார்த்துக்கொண்டிருக்கிறது. உலகால் ஆத்மாவைப் பார்க்கமுடியவில்லை. உலகை ப்ரகாசப்படுத்துவது ஆத்மா. ஆத்மாவைப் ப்ரகாசப்படுத்த உலகத்தால் முடியவில்லை.

385. புத்தி என்ற உபாதியால் ஜீவன் தவிக்கிறான். மாயை என்ற உபாதியால் ஈசன் சூழப்பட்டிருக்கிறான். இரண்டு உபாதியையும் ஒழித்தால் ஆத்மா ஸ்வப்ரகாசமாய்த் தோன்றும்.

386. பல வருஷங்களுக்குமுன் குருவும் சிஷ்யனும் காசியில் ஒரு வித்வானைக் கண்டனர். குருவும் சிஷ்யனும் தீர்த்த யாத்திரைமுடிந்து ராமேச்வரம் வந்தனர். அங்கு அப்பண்டிதரும் சிலநாட்கழித்து வந்தார். இவர் யாரென சிஷ்யனுக்குத் தெரியவில்லை. காசியில் பார்த்தோமே அவர் தான் இவர் என்று சொன்னார் குரு. சிஷ்யனுக்கு நினைவு வந்தது. ஆனால் ஸந்தேஹமும் வந்தது.

387. அந்த காலத்தில் [illegible]த ஊரில் பார்க்கப்பட்டவ[illegible]

ரும், இந்த காலத்தில் இங்கு இருப்பவரும் எப்படி ஒன்று வர்? தேச காலத்தினால் பேதப்படவில்லையா? என்று ஸந்தேஹித்தான். உடனே குரு இரண்டு தேச காலங்களையும் விட்டுப்பார். பண்டித சரீரம் ஒன்றேயல்லவா என்றார். இதே போல்தான் நீயே ஆத்மா என்பதின் பொருளும்.

388 சொற்களுக்கு வாக்யார்த்தம் லக்ஷ்யார்த்தம் என இரண்டு வகையாகப் பொருளுண்டு. வாக்யமாவது சொல்லின் நேரான பொருள். லக்ஷ்யமாவது அச்சொல்லிலிருந்து பொருத்தமாகக் கூறப்படும் பொருளாம். ராமன் சிங்கக் குட்டி யென்றால், கேட்டபடி பொருள் கூறின் வாச்யமாகும். ஸிம்மம்போல் வீர்யமுள்ளவன், என்பது லக்ஷ்யார்த்தம். வாச்யார்த்தம் பொருந்தா விடத்து லக்ஷ்யார்த்தம் கூறுதல் பொருந்தும்.

389. அல்லக்ஷணை ஜஹத், அஜஹத், ஜஹதஜஹத் என மூவ்வகைப்படும். உன் வீடு எங்கே என ஒருவனைக் கேட்டால், அவன், என்வீடு கங்கையில் என்றான். ஓடுகிற ஜலத்திலா அவன் வீடிருக்கும்? கங்கை என்னும் ஜலத்தை விட்டு கங்கைக் கரையில் அவன் வீடு எனப் பொருள்கொள்கிறோம். இதே ஜஹல்லக்ஷணையாம்.

390. வாயலில் தயிர்போகிறது கூப்பிடு என்று சொல்கிறோம். அசேதனமான தயிர்போகாது. கூப்பிட்டாலும் வராது. தயிரையுடைய இடையன் போகிறான். கூப்பிடச் சொன்ன தயிரையும் விடாமல் தயிர்க்காரனைக் கூப்பிடுகிறோம். இது அஜஹல்லக்ஷணையாம்.

391. முன்னே கூறியபடி காசியில் கண்ட அவர்தான் இவர் என்பது ஜஹதஜஹல்லக்ஷணையாம். காசியையும் அக்காலத்தையும் இவ்வூரையும் இக்காலத்தையும் விட்டு அங்கிருந்ததும், இங்கிருப்பதுமான அவர் உருவத்தை மாத்ரம் விடாம விருப்பதால் இதை அங்ஙனம் கூறுவர்.

392. நீதான் அவன் என்ற குருபதேசத்திற்கு ஜஹத ஜஹல்லக்ஷணையாக பொருள்கொள்ளவேண்டும். நீ என்ற போது, சரீரம் மனஸ் கர்த்ருத்வம் முதலிய ஜீவதர்மங் களையும் அவன் என்றபோது ஸர்வக்ஞன் முதலிய பரமாத் மாவின் குணங்களையும் விட்டு சுத்த சைதன்யத்தை எடுத் துக்கொண்டால் ஜீவாத்ம ஐக்யம் பொருந்தும். பச்சைமண் பச்சை மண்ணுடன் தான் சேரும். சுட்டதுடன் சேராது.

393. இப்படி அழகாக சாஸ்திர விசாரம் செய்ய லாம். ஆனால் குரு கிருபையும் ஸ்வதர்மாசரணத்தால் சித்த சுத்தியும் ஏற்படாதவரை இவையெல்லாம் புத்தக வே தாந்தம். வாக் வேதாந்தமே யாகும். அனுபவத்திற்கு அனு வவேனும் வராது.

394. பாஷாக்ஞானம் பெற்று வேதாந்த நூல்களைப் படித்தால் மோக்ஷம் வாராதா ? எனில், வேதப் பிரமாணத் தால்தான் நாம் வேதாந்த விஷயத்தை அறிகிறோம். அந்த வேதம் ஆசார்யனைப் பெற்றவன்தான் ஆத்ம ஸ்வரூபத்தை உணர்வான் எனக்கூறுகிறது.

395. அனாதியான இந்த ஸம்ஸாரத்தில் இதுதான் நல்வழி எனக் காட்டுபவன் ஆசார்யன், அவனையே ப்ரத் யக்ஷ தைவமாகக் கொண்டோர் மோக்ஷத்தைப் பெறுவர்.

396. பன்னிப்பன்னிப் பல வேதாந்தம் பேசினாலும் இரண்டே விஷயந்தா னங்குளது. சித் சுத்தம் சுகரூபம் அத்வைதம் நித்யம். ஜடம் த்வைதம், அசுத்தம் துக்கரூ பம் அழிவுள்ளது.

397. சுத்தரூபமான ஆத்மாவினிடமிருந்து அசுத்த மான ஜகத் எப்படித் தோன்றிற்று? மாயையால். மாயை உலகம் எத்தகையது? அதை இல்லாததெனக் கூடுமோ? ப்ரத்யக்ஷ ஜகத்தைத்தோற்றி வைத்ததால் அங்ஙனம்சொல்ல

லாகாது. ஸத்தெனலாமோ ? க்ஞானம் வந்தால் அழிகிறது. எப்படி ஸத்தென்பது? ஸதஸத் எனலாமோ? பரஸ்பர விரோதமன்றோ? பின் என்னதான் சொல்வது? அநிர்வாச்யம். நிர்வசனம் செய்ய முடியாததெனலாம்.

398. ஆதியில் ஒன்றாயிருந்த ஆத்மா, ஸ்ருஷ்டியின் ஆரம்பத்தில் ப்ராணிகளது கர்மா பரிபக்வமாகவே, படைக்க வேண்டுமென விரும்பிற்று. உலகைப் படைத்து அதனுள் தானே பிரவேசித்தது. கருணை மஞ்சள் இஞ்சி முதலியவைகளைத் தனியாக வைத்திருந்தாலும் காலம் வந்தவுடன், முளை தானே உண்டாகிறதல்லவா ? உலகம் மாயை ஜீவன், இவைகள் அநாதி. ஆனால் அழியத்தக்கதென சித்தாந்தம். ஆதலின் ஆதி ஸ்ருஷ்டியில் எப்படி உண்டானதெனும் கேள்விக்கு இடமில்லை.

399. சுத்தமான ஆத்மா ஜீவனாகித் துன்பங்களை அநுபவிக்கக் காரணம் என்ன? காந்தார தேசத்தில் தனிகன் ஒருவன் எல்லா ஆபரணங்களையும் பூட்டிக்கொண்டு தன் வீட்டில் உறங்கினான். இவனே சுத்த பரமாத்மாவோடு ப்ரளய காலத்தில் லயித்துத் தன் வீட்டில் ஆனந்தமெனும் ஆபரணம் பூண்டு அக்ஞானமெனும் தூக்கத்தில் அமர்ந்த ஜீவன்.

400. தனத்தி ஞசையால் திருடர்கள் இவன் கண்ணை கை கால்களைக் கட்டி காட்டில் வெகுதூரத்தில் கொண்டு போய்விட்டனர். தனம் ஆத்மானந்தம். திருடர்கள் காம க்ரோதம் முதலியனவும் தேஹாபி மானமுமாம். போகத்தில் ஆசை புத்ரவாஞ்சை முதலியன பந்தமாம். அனேக துன்பம் நிறைந்த ஸம்ஸாரமே காடாம்.

401. காட்டில் புலி கரடிகள் செய்யும் சப்தத்தைக் கேட்டுப் பயந்து பசி தாஹத்தால் வாடி பல்வகைக் கஷ்டங்களை அநுபவித்து கதறுகிறான் அவன். ஆத்யாத்மிகம் முதலிய மூவ்வகைத் துன்பம் பசி தாஹம், பிறப்பிறப்பு நரக

யாதனை முதலியவைகளை அரண்யத்தில் அவன் படுந் துன்பமாம்.

402. அவ்வழியாகச் சென்ற தயையுள்ள வழிப்போக்கர் அவனருகே வந்து கட்டை அவிழ்த்து வழி தெரிந்தவர்களானதால் இப்படிப்போ என்று வழிகாட்டிச் சென்றனர். இவன் ஐயோ என் செய்வேன் எனக் கதறியழுதது ஜீவன் தனது வர்ணாச்ரமத்திக்கேற்ற நித்ய கர்மங்களைச் செய்து மனதை நிர்மல மாக்குவதாம். மனது சுத்தமானால் ஆசாரியன் சிஷ்யனைத் தேடி வருவான், வழிப்போக்கரே குருவாம். கட்டை அவிழ்த்துக் கண்ணைத் திறந்ததே ஸன்யாஸமும் க்ஞானோபதேசம் செய்தலுமாம். வழியைக் காட்டுவதே சிஷ்ய பரிபாகத்திற்கேற்ற வேதாந்த ஸாதனங்களைக் காட்டுவதாம்.

403. அக் காந்தாரதேசத்தவனும் ஸமர்த்தனாதலால் ஒவ்வொரு ஊராகச் சென்று வழியை விசாரித்துக்கொண்டு காந்தாரதேசஞ் சென்றான். சிஷ்யன், குரு சொன்ன ஸாதனத்தைப் பிடித்து நிதித்யாஸனம் செய்து இடையில் தோன்றும் விக்னங்களை யகற்றி ஸம்சய விபரீதங்களை அனுபவியின் உபதேசத்தால் அல்லது தன் புத்தியுக்தியால் நீக்கி பிரும்மமெனும் தன் ஸ்தானத்தை யடைதலாம்.

404. தன் வீடுசென்று பந்துக்களுடன் கூடி அவன் ஸுகமாக வாழ்ந்தான். ஜீவன் மாயையை ஜயித்து மோக்ஷம் பெற்று இரண்டற ஒன்றாகக் கலந்து பேரானந்தம் பெறுவதாம்.

405. ச்ரத்தையுடன் ஆச்ரம தர்மத்தை ஒழுங்காக அனுஷ்டிப்பவனது பாபம் அகலுகிறது. ஈசன் அவனிடம் கருணைபுரிகிறான். அப்போதுதான் உபதேசத்திற் கேற்றவனாகிறான். குருவுங் கிட்டுகிறார்.

406. குருவே மோக்ஷம் பெற அருகிலுள்ள ஸாதன

மாதலின் அவரது தர்சனம், ஸேவை, அவர் வாக்கில் நம்பிக்கை இவை அவச்யமானவை.

407. நன்றியுள்ள விவேகி தன்னுயுளுள்ளளவும் குருவை அதிலும் வேதாந்த குருவை முக்கரணத்தாலும் வந்தனம் செய்யத் தவறக்கூடாது. குருவே பிரும்மமாகும்.

408. உனது எண்ணத்தில் அத்வைதமே தோன்ற வேண்டும். உலக காரியத்தில் அத்வைதம் என்பதை அனுஷ்டித்தால் ஆபத்தாக முடியும். மூன்று உலகும் மற்றெல்லாமும் ஒன்றென எண்ணு. ஆனால் இவைகளைவிட ஆசாரியன் மேலானவன் என (நீ உன்னை மறக்கும்வரை) நினை.

## 21. ஸதாசாரானு ஸந்தானம் (55)

409. காலை எழுந்து இரவு படுக்கும்வரை செய்யவேண்டிய கிரியைகளுக்கு ஆன்ஹிகம் எனப் பெயர். இதை விடாது ஸாதுக்கள் ஆசரித்து வந்ததால் இதற்கு ஸதாசாரமெனப் பெயர். இவை கர்மகாண்டத்தைப் பற்றியவை. இதேபோல் க்ஞானகாண்டத்தில் அப்யாஸிகளுக்கோர் ஸதாசாரமிது.

410. பொழுது விடிய ஐந்து நாழிகைக்கு முன்னெழுந்து கை கால்களைச் சுத்திசெய்து ஆசமனம் செய்து கடவுளுக்குக் காலை வணக்கம் செலுத்துவது, கர்மகாண்ட விதி. இங்கு அதேபோல் சுத்திசெய்து எவன் எனது புத்திவிருத்தியைத்தூண்டுகிறானோ எவன் அறிவு மயமாயிருக்கிறானோ அவனே நான் எனத்தியானம் செய்யவேண்டும்.

411. வெளியிற்சென்று மல ஜலங்களைக் கழித்து மண்ணாலும் ஜலத்தாலும் கை கால்களைச்சுத்தி செய்யவேண்டும்:—தேஹம் மிக மிக அசுத்தமானவஸ்து. தேஹியோ மிகவும் நிர்மலமானவன். நான் என்பவன் தேஹத்தில் பற்றில்லாதவன் எனநினை. இதே வேதாந்த சௌசமாகும்.

412. பிறகு ப்ராதஸ்நானம் செய்யவேண்டும். மீன் எப்படி ஜலத்தையே உண்டு ஜலத்திலேயே விளையாடுகிறதோ அதேபோல் மனம் ஆத்மக்கடலில் மூழ்கி விளையாடினால் க்ஞானஜலத்தில் காலை ஸ்நானம் செய்ததாகும்.

413. கடலில் குடத்தைப்போட்டது போல் உன் மனதைப் பூர்ணமானவஸ்துவினிடத்தில் வை. இம் மனம் வசப்படுவதற்கு பிராணாயாமம் செய். இதே அகமர்ஷண ஸூக்தம் சொல்லுவதாம்.

414. லயம் விக்ஷேபம் இதன் இடையே சந்தி எனப்படும். மனதை இங்கு பற்றுதலில்லாமல் வைத்தால் அதே ஸந்தியானுஷ்டானம் செய்வதாகும்.

415. ஒவ்வொரு மனிதனும் வாயைத்திறந்து ஜபிக்காமல் மூச்சை விடும்போதும் இழுக்கும்போதும் ஹம்ஸ: ஸோஹம் என்று ஜபிக்கிறான். இதை அறிவதே காயத்ரீ ஜபமாகும்.

416. இந்திரியங்களுக்கு விஷயங்களைக் கொடுக்காமல் ஆத்ம விஷயத்தைக் கொடுத்துக் களிக்கச் செய்வதே ஸ்நானாங்க தர்ப்பணமாகும்.

417. ஸ்வப்ரகாசமான ஆத்மாக்னியில் சித்தமென்பதை ஆஹுதி செய்வோர்தான் அக்னிஹோத்ர ஔபாஸனம் செய்தவராவர்.

418. தேஹமே தேவாலயம், ஜீவனே தேவன். மனதினால் இப்படி எண்ணி தியானம் செய்வதே பஞ்சாயதன பூஜை செய்வதாகும்.

419. ஒன்றும் பேசாமலிருத்தலே பிரும்ம யக்ஞமாகும். சென்றது, வரப்போவது இவைகளை நினைக்காமல் ஆசைத்வேஷங்களை விட்டு தானாகக் கிடைத்தவைகளைப் புஜித்து விருப்பு வெறுப்பில்லாமல் ஸுகதுக்கங்களை அனுபவிப்பதே அதிதி பூஜை வைச்வ தேவமுமாம்.

420. இங்ஙனம் கர்மானுஷ்டானம் செய்து வருபவனுக்கு வைராக்ய முதிர்த்து ஸன்யாஸம் பெறுவது இயல்பு. நான் என்பது உடலல்ல. ஆத்மாதான் என்ற நிச்சயபுத்தி வருவதுதான் ஸன்யாஸம். காஷாய தண்டமாத்திரமல்ல.

421. தானமென்பது தன் ஜீவனத்திற்காக நெல் விறகு காய் கறி முதலிய ஜீவன்களைக்கூட ஹிம்ஸிக்காமலிருத்தல், ஸர்வபூதங்களுக்கும் அபயமளித்தல், அதாவது ஸன்யாஸமே. பஞ்சமஹா யக்ஞத்தால் அந்த ஹிம்சைக்கு, ப்ராயச்சித்தம் செய்துவரும் கிருஹஸ்தர் வீட்டில் பிக்ஷை வாங்குவதால் ஸன்யாஸிகளுக்கு அந்த தோஷம் வராது.

422. ஆத்மானந்தத்தில் தான் பற்று. மற்றெதிலும் எவ்வகையான் ஆசையுமில்லாமையே முதிர்ந்த வைராக்யமாகும்.

423. ஸன்யாஸமே மோக்ஷத்தை யளிக்காது. ஸன்யாஸம் செய்துகொண்டு ப்ரதிதினம் வேதாந்த ச்ரவணம் செய்யவேண்டும். கேட்டதை யுக்தியால் பரிசீலனை செய்து பார்க்கவேண்டும். பிறகுதான் ஆத்ம தர்சனமாகும்.

424. சப்தத்தில் ஓர் அபூர்வமான சக்தியிருக்கிறது. தூங்கும்போது உறக்க அவன் பெயரைச் சொன்னால் அந்த சப்தம் தூங்குபவனை எழுப்பிவிடுகிறது. அதேபோல் வேதாந்த சப்தம், உறங்கும் ஜீவனுக்கு ப்ரத்யக்ஷ ஞானத்தை அளித்துவிடும்.

425. காணப்படுவதாலும் மண்ணின் மாறுதலாயிருப்பதாலும் அழிவதாலும் எப்படி பானையை ஆத்மா என்று சொல்லமாட்டோமோ அதேபோல் நம்முடல் இந்திரியங்கள் காணப்படுகின்றன. பஞ்ச பூதங்களால் செய்யப்பட்டன. இன்றோ நாளைக்கோ அழியக்கூடியன. ஆதலால் இவைகளை ஆத்மா எனத்தகுமா?

426. வியஷ்டி என்பது தனித்த பொருள். ஸமஷ்டி என்பது சேர்ந்த பொருள். வியஷ்டி மரம் வீடு முதலியன:

ஸமஷ்டி காடு ஊர் முதலியன. வேதாந்தி உண்மையை அறியும்போது, ஸ்தூலத்தையும் வைராஜனையும், ஸூக்ஷ்மத்தையும் ஹிரண்யகர்ப்பனையும், அக்ஞானத்தையும் மாயையையும், ஜீவனையும் ப்ரம்மத்தையும் வ்யஷ்டி ஸமஷ்டியையும் ஒன்றாகவே காண்பான்.

427. கர்மகாண்டத்தில் கூறியபடி கர்மாக்களை அனுஷ்டித்து வந்தால் மாத்ரம் மோக்ஷம் வந்துவிடாது. தார்க்கிகனோ பதார்த்தங்களை நன்கு விசாரி போதுமென்கிறான். அவர்களுக்குள்ளேயே ஓர் நிச்சயமான முடிவு கிடையாது. ஆதலின் அதைக் கைப்பற்றினாலும் மோக்ஷம் வாராது.

428. ஸாங்க்யரோ ப்ரகிருதி அல்லது ப்ரதானம்தான் ஜகத்காரணம். ஆதலின் அதன் தத்துவத்தை விசாரி என்கிறான். யோகியோ அவனோர் வழிகாட்டுகிறான். சப்த சாஸ்திரத்தி லீடுபட்டோர் சப்தமே ஆத்மஸ்வரூபமென ஸ்போடவாதம் செய்கின்றனர். மற்றவரோ ஆத்ம விஷயமான பேச்சுகூட இல்லாத பாஷாண்டிகள்.

429. ஆனால் வேதாந்த சாஸ்திரம் ஒன்றுதான் ஸத்யமான வஸ்துவைப் பிடித்து நல்ல வழியை யுக்தி அனுபவத்தால் காட்டுகிறது. அதைக் கைப்பற்று.

430. நான் என்னுடையது என்றால் பந்தம் வந்துவிடும். நான் என்னுடையது என்ற எண்ணத்தை அறவே விட்டால் விடுபடுவாய். பந்தமும் துக்கமும் முக்குணங்களால் தோன்றுகின்றன. குணங்கள் ப்ரகிருதியிலிருந்து தோன்றின.

431. சைதன்யமென்பது க்ஞானம். அது நாம் நல்லதை அல்லது கெட்டதைச் செய்யும்போதும் எல்லா அவஸ்தைகளிலும் ஸ்வப்ரகாசமாக விளங்குகிறது. அதை எல்லோருமறிவதில்லை.

432. நாமொரு விஷயத்தை "இதை இப்படிச் செய்ய வேண்டு" மென ஸங்கல்பம் செய்யும்போது ஸாக்ஷியாக ஓர்

வஸ்து உள்ளிருந்து பார்த்துக்கொண்டிருக்கிறது. அந்த வஸ்துவே நான் என நினைப்பவனுக்கு பந்தமிராது.

433. சித் என்பதுதான் விஷயங்களைத் தூக்கி மேல் போட்டுக்கொண்டு சித்தம்என அழைக்கப்படுகிறது. அறியப் படும் வஸ்துவை த்யஜித்துவிட்டால் கேவலக்ஞானமாகவே நிற்கும் அது.

434. மனதினுல்தான் எல்லாம் கல்பிக்கப்பட்டது. அந்த மனமும் க்ஞானத்தால் நடமாடுகிறது. இல்லாததை இருப்பதாக நினைத்ததால் நமக்கு இந்த துன்பம். ஸத்யத்தை அறிந்தால் சுத்த க்ஞானமாகவே மாறிவிடும் அம்மனம்.

435. ஈசன் மாயையை ஜயித்த மாயாவி. சித் எனும் ஆகாயத்தில் மாயை எனும் மேகம் நடமாடுகிறது. மனம் எனும் மின்னலங்கே தோன்றி மறையும். அஹந்தை என்பது இடி. மனோ வியாபாரமே மழைப்பெருக்கு. மஹா மோஹமெனும் இருளில் மாயாவியான ஈசன் விளையாடுகிறான்.

436. இம்மேகத்தை சிதைத்துத்தள்ள ப்ரபோதமெனும் ஒரே வாயுதான் கதி. க்ஞானம் விக்ஞானமென போதம் இருவகைப்படும்.

437. பார்த்தல் பார்க்கப்படும் பொருள் இவற்றைப் பற்றிய அறிவு க்ஞானமாகும். பார்க்கப்படும் பொருளே இல்லாமை விக்ஞானம். க்ஷேத்ரம் உடல். க்ஷேத்ரக்ஞன் ஆத்மா. இதைப்பற்றிய அறிவு க்ஞானம். க்ஷேத்ரக்ஞ பரமாத்மாக்களை ஒன்ருகப் பார்த்தல் விக்ஞானம்.

438. சாஸ்திரத்தினுல் வரும் அறிவு க்ஞானம். அனுபவத்தால் வருவது விக்ஞானம். நீ என்பதைப்பற்றியது க்ஞானம். அது என்பதைப்பற்றியது விக்ஞானம். இரண்டின் ஐக்யத்தைப்பற்றியது க்ஞான விக்ஞானம்.

439. அனுபவிப்பவன் ஸத்வகுணம். அனுபவம்

ரஜோகுணம். அனுபவிக்கப்படும் பொருள் தமோகுணம். இம்மூன்றையும் ப்ரகாசப்படுத்துபவன் ஆத்மா.

440. நானே ப்ரும்மம் என்பதை ஓயாது சொல்வதே வேதமோதல். இந்திரியங்களை மனதுடன் ஆத்மாவினிடம் அர்ப்பணம் செய்வதே, ஸ்திரீ முகத்தைப் பாராமை முதலிய ப்ரும்மசர்ய நியமமாம். எல்லாம் ப்ரும்மம் என உணர்வதேவேதாந்த விக்ஞானமாம். இத்தகையவனே ப்ரும்மசாரீ.

441. குணங்களிடையே இருந்து சரீரத்தையே வீடாக எண்ணி குணங்களே கர்மாவைச் செய்கின்றன, நான் கர்த்தாவல்ல என நினைப்பவனே கிருஹஸ்தன்.

442. க்ஞானம் எனும் தபஸ்ஸித்தித்துவிட்டால் மற்ற உக்ரமான தபஸ்ஸுகளால் யாது பயன்? ஸந்தோஷம் கோபம் இதை விட்டவனே வானப்ரஸ்தன்.

443. சரீரம் என்ற வீடும், புத்தி என்ற மனைவியும், விருத்திகள் என்ற புத்ரர்களும், சமதமம் முதலிய நண்பர்களும் இந்திரியமெனும் பணியாட்களுமிருக்க வேறு வீடெதற்கு? கட்டிய வீட்டைவிட்டு இந்த சரீர வீட்டிலிருப்பவன் கிருஹஸ்தன்.

444. வேதாந்திகளுக்கேற்ற இந்த ஸதாசாரத்தைக் கைக்கொண்டு தினந்தோறும் அனுஸந்தானம் செய்பவன் ஸம்ஸாரக்கடலைத் தாண்டுவான்.

## 22. ப்ரச்னோத்தர ரத்னமாலிகா (67)

445. எதை ஏற்கவேண்டும்? குரு வார்த்தையை. எதை விடவேண்டும்? அகார்யத்தை. யார் குரு? தத்வார்த்தத்தை உணர்ந்து சிஷ்யனது நன்மையை நாடுபவர். சீக்ரமாக செய்யத்தக்கது யாது? ஸம்ஸாரத் தொடர்பை அறுத்தல். மோக்ஷமெனும் மரத்திற்கு விதை எது? சித்த பரிபாகத்திற்குப் பிறகு உதிக்கும் தத்துவக்ஞானமே.

446. எது ஹிதமானது? தர்மம். யார் சுசியுள்ளவன்? சுத்த மனமுடையவன். பண்டிதர் யார்? பகுத்தறிவுள்ளோர். எது விஷம்? குருவை அவமதித்தல். ஸம்ஸாரத்தில் ஸாரம் எது? எது மனிதனுக்கு இஷ்டப்படத் தக்கதற்குள் உயர்ந்தது? பலமுறை நன்கு யோசித்தும் தனக்கும் பிறருக்கும் பயன்படத்தக்க ஜன்மாவைவிட வேறில்லை.

447. கள்ளைப்போல் மோஹத்தை அளிப்பது எது? ஸ்நேஹம். திருடன் யார்? மனைவி மக்கள் ருசி உருவம் பாட்டு முதலியவை. ஸம்ஸாரக் கொடி எது? ஆசை. யார் சத்ரு? சோம்பல். எதனிடம் எல்லாருக்கும் பயம்? மரணத்தினிடம். குருடனைவிட உயர்ந்த குருடன் யார்? ஆசையுள்ளவன். எவன் சூரன்? பெண் மக்களது கடைக்கண்ணெனும் பாணத்திற்கு இலக்காகாதவன்.

448. காதுக்கினிய அமிருதம் எது? ஸதுபதேசம். கௌரவத்திற்கு காரணம் எது? யாசிக்காமலிருத்தல். எது காடுபோல் ப்ரவேசிக்க முடியாதது? பெண்களது சரிதம். எவன் ஸமர்த்தன்? இதில் அகப்பட்டுக் கொள்ளாதவன். எது துக்கம்? இருப்பதைக்கொண்டு சந்தோஷப்படாமை. எது அல்பத்தனம்? அதமனிடத்தில் யாசிப்பது?

449. எது பிழைப்பு? குற்றமில்லாமை. எது அறியாமை? அர்த்தமில்லாமல்கூட, படிக்கத்தெரியாமை. எவன் விழித்திருப்பவன்? விவேகி. எது தூக்கம்? அறிவில்லாமை. தாமரை இலை மேலுள்ள நீர்போல் சஞ்சலமானதெது? யௌவனம், பணம், ஆயுஸ். சந்த்ரகிரணம்போல் ப்ரகாசமாய் ஸந்தோஷப்படுத்துபவர் யாவர்? ஸஜ்ஜனங்களே.

450. நரகம் எது? பிறருக்கடிமையாயிருத்தல். எது ஸௌக்யம்? எதிலும் பற்றில்லாமலிருத்தல். எது ஸத்யம்? ஜனங்களுக்கு ஹிதமான சொல். ப்ராணிகளுக்கு ப்ரியமான

லெத்து? ப்ராணன். எது அநர்த்தத்தை விளைவிக்கும்? கோபம், கர்வம். எது ஸுகத்தை யளிப்பது? ஸஜ்ஜநங்களுடன் சேர்தல். எல்லா துக்கத்தையும் ஒழிப்பவன் யார்? தியாகி.

451. எது மரணம்? மூர்க்கனுயிருத்தல். விலை மதிக்க முடியாதது எது? ஸமயத்தில் கொடுக்கப்பட்ட வஸ்து. சாகும் வரையில் சல்யமாயிருப்பது எது? ரஹஸ்யமாகச் செய்த பாபம். எதில் முயற்சிக்கவேண்டும்? வித்யை நல்ல மருந்து தானம் இவைகளில். எதை மதியாதிருக்கவேண்டும்? துஷ்டர், பிறர் மனைவி, பிறர் பொருள் இவைகளை.

452. இரவும் பகலும் எதை நினைக்கவேண்டும்? ஸம்ஸாரம் பயனற்றதென்பதை, பெண்ணை நினைத்து ஏமாராதே. எதை மிகப்ரியமாகக் கொள்ளவேண்டும்? தீனரிடத்தில் கருணையையும் ஸஜ்ஜனங்களிடத்தில் நட்பையும். பிராணனைக் கொடுத்தால் கூட எவரை மீட்க முடியாது? மூர்க்கன், ஸம்சயாத்மா, ஸதா கவலையுள்ளவன், நன்றிமறந்தவன், இவர்களை.

453. யார் ஸாது? நல்ல சீலமுள்ளவன். யார் அதமன்? கெட்ட ஒழுக்கமுள்ளவன். யார் இந்த உலகைத் தன் வசமாக்குபவன்? ஸத்யும் பொறுமை இக்குணமுடையவன். எவனைத் தேவரும் வணங்குவர்? தயை நிரம்பியவனை. எதனிடம் நடுங்கவேண்டும்? ஸம்ஸாரமெனும் மஹாரண்யத்தினிடம்.

454. எவனுக்கு ஜனங்கள் வசமாவார்கள்? ஸத்யமாயும் பிரியமாகவும் பேசி வணக்கத்துடனிருப்பவனுக்கு. எதிலிருக்கவேண்டும்? இம்மை மறுமைப் பயனையளிக்கும் நியாய வழியில். குருடன் யார்? அகார்யத்தில் ஆசையுள்ளவன். செவிடன் யார்? ஹிதத்தைக் கேளாதவன். ஊமை யார்? காலத்தில் பிரியத்தைப் பேசாதவன்.

455. எது தானம்? எவரிடமும் எதையுங் கேளாமலிருத்தல். யார் மித்ரன்? பாபம் செய்யாமல் நம்மைத் தடுப்பவன். எது அலங்காரம்? சீலம். வாக்கிற்கு அலங்காரம் எது? ஸத்யம். மின்னல்போல் க்ஷணம் தோன்றி மறைவதெது? துர்ஜநரது சேர்க்கையும் யுவதிகளும். எவர் குலபர்வதம்போல் அசைவற்றவர்? ஸஜ்ஜனங்கள்.

456. சிந்தாமணியைப்போல் நினைத்ததைக் கொடுப்பது? பரம துர்லபமானதெது? குற்றமற்ற பெரியார், கீழ்கண்ட நாலையுமே சொல்கிறார்கள். பிரியமான வார்த்தையுடன் கூடிய தானம், கர்வமில்லாத ஞானம், பொறுமையுடன் கூடிய பராக்ரமம், தானத்துடன் கூடிய தனம்.

457. எதைக்குறித்து துக்கப்படவேண்டும்? பணமிருக்கக் கார்ப்பண்யத்தைக் குறித்து. எது கொண்டாடத்தக்கது? உதாரமாயிருத்தல். யார் வித்வான்களால் பூஜிக்கத் தக்கவன்? எப்போதும் இயற்கையாகவே வணக்கமாயிருப்பவன். தன் குலத்திற்கு நற்கீர்த்தியை யளிப்பவன் யார்? குணம் ஐச்வர்யம் முதலியவை யிருந்தும் வணக்கமாயிருப்பவன். உலகம் எவனுக்கு வசமாகும்? பிரியமாய் ஹிதமாய் பேசித் தர்மம் தவறாமலிருப்பவனுக்கு.

458. வித்வான்கள் மனதைக்கவருவது எது? நல்ல கவிதையும் ஞானமும். எவனை ஆபத்து அண்டாது? பெரியோர் சொற்படி நடந்து அடக்கமாயிருப்பவனை. லக்ஷ்மி எவனிடம் ஆசை கொள்கிறாள்? சோம்பலின்றி நீதிமார்க்கத்தைத் தழுவுகிறவனிடம். எவனை உடனே விடுகிறாள்? சோம்பலுடையவன், பிராமணன் குரு தேவர் இவர்களை நிந்திக்கிறவன், ஆகிய இவர்களை.

459. எங்கே வஸிக்கவேண்டும்? ஸ்ஜ்ஜநங்களருகில் அல்லது காசியில். எங்கு வஸிக்கக்கூடாது? கோள் சொல்பவன், லோபமுள்ள அரசன் இவர்களிருக்குமிடத்தில். எது

ஞல் கஷ்டமில்லாமலிருக்கலாம்? அடங்கி நடக்கும் மனைவி யும் நிறைந்த செல்வமு மிருந்தால். யாரை நினைத்து துக்கப் படவேண்டும்? தனமிருந்தும் தானஞ் செய்யாதவனை.

460. எது அல்பத்தனத்திற்குக் காரணம்? ஸாமான்ய மனிதனிடம் யாசிப்பது. ஸ்ரீ ராமனை விடச் சூரன்யார்? மன்மதன் பாணத்தால் அடிக்கப்பட்டும் சலிக்காமலிருப்ப வன். எதை இரவும் பகலும் நினைக்க வேண்டும்? பகவானது திருவடியை, ஸம்ஸாரத்தையில்லை. கண்ணிருந்தும் குருடர்யார்? நாஸ்திகர்.

461. காலிருந்தும் நொண்டி யார்? வயதாயும் தீர்த்த யாத்ரைக்குச் செல்லாதவன். எது முக்ய தீர்த்தம்? சித்தத்திலுள்ள மலத்தையகற்றுவது. எதை நினைக்கவேண்டும்? பகவந்நாமாவை. மற்ற துச்சமானதையில்லை. எதை அறிவுடையோன் சொல்லலாகாது? பிறர் தோஷத்தையும் பொய்யையும்.

462. எதை மனிதர் ஸம்பாதிக்கவேண்டும்? வித்யை, தனம், பலம், யசஸ், புண்யம், இவைகளை. எல்லாக் குணங்களையும் நாசம் செய்வது எது? லோபம். சத்ரு யார்? காமம். எந்த ஸபைக்குச் செல்லலாகாது? எங்கு வயதான அறிவாளிகளில்லையோ அங்கு. லௌகிக விஷயத்தில் எங்கு ஜாக்ரதையாக இருக்க வேண்டும்? ராஜ ஸேவையில்.

463. பிராணனை விட எது ஸந்தோஷத்தைக் கொடுக்கக் கூடியது? குலதர்மமும் ஸாதுஸங்கமமும். எதைக்காத்தல் வேண்டும்? கீர்த்தி, பாதிவ்ருத்யம், ஸ்வபுத்தியாகிய இவைகளை. இங்கு எது கல்ப விருக்ஷம்? ஸச்சிஷ்யனிடமளித்த வித்தை. எது அக்ஷயமான வடவிருக்ஷம்? விதிப்படி ஸத்பாத்ரத்தில் கொடுத்த தானம்.

464. எல்லோருக்கும் எது சஸ்த்ரம்? யுக்தி. எது தாய்? தேநு. எது பலம்? தைர்யம். எது எமன்? ஊக்கமில்

லாமை. எங்கு விஷமிருக்கிறது? துஷ்டரிடத்தில். எது சாவு வீட்டு? கடன். எது அபயம்? வைராக்யம். பயமெது? பணம்.

465. எது மனிதருக்குக்கிட்டாது? ஹரிபக்தி எது பாபம்? ஹிம்ஸை. பகவானுக்குப் பிரியமானவன் யார்? எவனைக்கண்டு எவரும் பயப்படவில்லையோ, எவன் பயமில்லாதவனோ அவன். எதனால் ஸித்தி? தபஸால். புத்தி யாரிடத்தில் இருக்கிறது? பிராஹ்மணனிடத்தில். எதனால் புத்தி உண்டாகும்? வ்ருத்தர்களை ஸேவிப்பதால்? யார் வ்ருத்தர்? தர்மதத்வமறிந்தவர்.

466. புகழ்பெற்றவனுக்கு மரணத்தைவிட அதிகமானது எது? அபயசஸ். உலகில் ஸுகமுள்ளவன் யார்? தனமுடையவன். தனம் எது? எதனால் இஷ்டம் நிறைவேறுகிறதோ அது. எல்லா ஸுகத்திற்கும் விதை எது? புண்யம். எதனால் துக்கமுண்டாகிறது? பாபத்தால். எவனுக்குத் தனம் கிட்டும்? பக்தியுடன் பரமசிவனைப் பூஜிப்பவனுக்கு.

467. எவன் வ்ருத்திக்கு வருவான்? வணக்கமுள்ளவன். எவன் வ்ருத்திக்கு வரமாட்டான்? கர்வமுள்ளவன். எவரை நம்பக்கூடாது? அடிக்கடி பொய் சொல்பவனை. பொய் சொன்னால்கூட எது பாபமில்லாதது? தர்மத்தைக் காப்பதற்காகச் சொன்ன பொய். எது தர்மம்? ஸ்வகுலத்தில் ஜனித்த சிஷ்டருக்கு இஷ்டமானது.

468. ஸாதுக்களுக்கு பலம் எது? தெய்வம். யார் ஸாது? எப்போதும் ஸந்தோஷமுள்ளவர். தெய்வம் எது? நாம் செய்யும் நற்கருமம். யார் ஸுக்ருதி? ஸாதுக்களால் ச்லாகிக்கப் படுபவன். க்ருஹஸ்தனுக்கு யார் ஸ்நேஹிதன்? மனைவி. யார் க்ருஹஸ்தன்? யக்ஞம் செய்பவன். எது யாகம்? எது ச்ருதியினால் விதிக்கப்பட்டு மனிதருக்கு சிரேயஸ்ஸைத் தருவதோ அது.

469. எவர் செய்யும் கர்மா, நற்பலனையளிக்கும்?

ஆசாரமுள்ள சிஷ்டனது கர்மா. யார் சிஷ்டன்? வேதத்தைப் ப்ரமாணமாகக் கொள்பவன். எவன் அழிவான்? கர்மாவைச் செய்யாதவன். எவன் தன்யன்? ஸன்யாஸி. எவன் பூஜிக்கத் தக்கவன்? ஸாதுவான பண்டிதன். எவனை ஸேவிக்கலாம்? கொடையாளியை. யார் கொடையாளி? யாசகருக்கு ஸந்தோஷத்தை யளிப்பவன்.

470. மனிதனுக்கு பாக்யம் எது? ஆரோக்யம். யார் பயன் பெறுபவன்? உழுதுண்டு வாழ்பவன். யாருக்குப் பாபமில்லை. ஜபம் செய்பவனுக்கு. யார் பூர்ணமானவன்? குழந்தை உடையவன். எது கஷ்டமான கார்யம்? மனத்தை அடக்குவது. எவன் ப்ருஹ்மசாரி? வீர்ய ஸ்கலனமில்லாதவன்.

471. யார் மேலான தெய்வம்? சித் சக்தி. உலகைக் காப்பவன் யார்? ஸூர்யன். பிழைப்புக்குக் காரணம் எது? மழை. சூரன் யார்? பயந்தவரைக் காப்பவன். காப்பவன் யார்? குரு. யார் ஜகத்குரு? பரமசிவன். ஞானம் எங்கிருந்து கிடைக்கும்? சிவனிடமிருந்து.

472. எவர் ப்ரஸாதத்தால் முக்தி பெறலாம்? முகுந்த ப்ரஸாதத்தால். யார் முகுந்தர்? அவித்யைத் தாண்டுவிப்பவர். அவித்யை எது? ஆத்மாவைத் தெரியவொட்டாமல் செய்வது. யாருக்குச் சோகமில்லை? கோபமில்லாதவனுக்கு. எது ஸுகம்? ஸந்தோஷம். யார் ராஜா? ஸந்தோஷப்படுத்துபவன். யார் நாய்? அல்பனை ஸேவிப்பவன்.

473. யார் மாயாவீ? பரமாத்மா. எது இந்த்ரஜாலம் போன்றது? உலகம். எது ஸ்வப்நத்திற்கு ஸமம்? நாம் விழித்திருக்கும்போது காணும் வ்யவஹாரம். ஸத்யம் எது? பிருஹ்மம். எது மித்யை? வித்யையால் அழிவது, அல்பமானது, முயல் கொம்பு போன்றது எதுவோ? அது. எது [illegible]

474. எது உண்மையானது? அத்வைதம். அஞ்ஞானம் எப்போது உதித்தது? அனாதி. நமது சரீரத்தை வளர்ப்பதெது? ப்ராரப்தம். அன்னத்தை யளிப்பது எது? ஆயுஸ். எதைப் பிராஹ்மணன் உபாஸிக்கவேண்டும் காயத்ரீ அக்னி ஸூர்யன் இந்த வடிவமான பரமசிவனை. இந்நான்கிலும் என்ன விசேஷம்? பரமாத்ம ஸான்னித்யமதிகம்.

475. ப்ரத்யக்ஷ தேவதை யார்? தாயார். பூஜிக்கத் தக்க குரு யார்? தந்தை. யார் எல்லா தேவதாஸ்வரூபமாயு மிருப்பது? வேதமுணர்ந்து கர்மானுஷ்டானம் செய்யும் பிராஹ்மணன். குலம் அழியக் காரணமென்ன? ஸாதுவுக்குச் செய்யும் ஸந்தாபம். எவர் சொல் வீணாகாது? ஸத்யமுரைப்போர், மௌனி, அடக்கமுள்ளவர்.

476. எது பிறப்பு? விஷயத்தில் வைக்கும் பற்று. மற்றோர் பிறப்பெது? தானே புத்ரனாகத் தோன்றல். எதை எதனாலும் போக்கமுடியாது? மரணத்தை. எங்கு காலை வைக்கவேண்டும்? கண் பார்த்தவிடத்தில். அன்னதானத்திற்குப் பாத்ரம் யார்? பசியுள்ளவன். யாரைப் பூஜிக்க வேண்டும்? பகவதவதாரத்தை. யார் பகவான்? சங்கர நாராயணனாக விளங்கும் பரமசிவன்.

477. பகவத் தர்சநத்திற்குப் பலனென்ன? கைலாஸம் செல்லுதல். அவர் உருவத்தை அடைதல். அவரைத் தர்சித்தல். எது மோக்ஷம்? அவித்யை அழிதல். எங்கிருந்து எல்லா வேதங்களுமுண்டாயின? ப்ரணவத்திலிருந்து. இந்த ரத்னமாலிகையைக் கழுத்திலணிந்தோர் ஸத்ஸபையில் ப்ரகாசிப்பர்.

## 23. ப்ரௌடானுபூதி (17)

478. பிருஹ்ம ஸ்வரூபத்தைக் கண்டவர் அதை வாக்கால் சொல்லார். சொல்பவர் தர்சித்தவரல்லர். ஆயினும்

ஆத்மானந்தத்தை அநுபவித்த பெரியார் சிலர் தன்னை உபாஸிக்கும் சிஷ்யனுக்குத் தன் அநுபவத்தைக் கூறுவார்.

479. ஸ்வப்ரகாசமாய் எல்லாவற்றிற்கும் காரணமாய் ஆனந்த ப்ரவாஹமாய்த் தோன்றும் இந்த ஸ்வரூபத்தில் எது ஆத்மா என ஏன் ஸந்தேஹமுதிக்கின்றது? இது ஆச்சரியமாயிருக்கிறது.

480. உலகை மறந்து நிஷ்டையில் உட்காரும்போது தெளிந்த ஜலம் நிரம்பிய அலையில்லாக் குளம்போல் இருப்பேன் பூர்ணனாய்ச் சிவனாய் நிற்பேன். எதையோ அறிய வேண்டுமென ஆவல் கொண்டேனே? என்னை விடவேறென்ன அறியத் தக்கதென, தோன்றும்.

481. எவற்றை யான் ஸத்யவஸ்து என முன் நினைத்தேனோ அவையெல்லாம் இப்போது இந்த்ரஜாலமாய்த்தோன்றுகிறது. நிலத்தை வாங்கவேண்டும்; வீட்டைக்கட்டவேண்டும்; எல்லோரும் என்னைப் புகழ வேண்டும்; அதற்கென்ன செய்ய வேண்டும், என ப்றபல கார்யங்களும் யோசனைகளும் தோன்றின. இப்போது எக்காரியத்தையும் எந்த யோசனையையுங் காணவில்லை.

482. வேதங்கூறியுள்ள கொள்ளவேண்டியதும் தள்ளவேண்டியதுமான கர்மா இங்கு காணப்படவில்லை. மழையைப் பொழிந்த மேகம் போல் சுத்தமாய் நிஷ்களங்கமாயிருக்கிறேன்.

483. ஸம்ஸாரதாபமிருந்ததும், அதை நீக்க ஸத்குருவை அண்டி யான் விச்ாரம்செய்ததும், அடையத் தகாத மோக்ஷத்தை அடைந்ததும் கல்பனையாகவே தோன்றுகிறது. ஆனால் ஒன்று இரண்டாளன்ற பேதமற்ற ஸுகத்தை அநுபவிக்கும்போது மௌனமாகவே இருக்கத் தோன்றுகிறது.

484. ஸ்வயம் சுடராய் யான் விளங்க, ச்ரவணம் மன னம் நிதித்யாஸனம் எதற்காக என்றெண்ணுகிறேன். ஆத்

மாவைத் தவிர வேறு பொருளில்லாததால் ஆத்மானுத்மவி சாரம் மாயா சிந்தனம் இதைச் செய்பவர் அறிவாளியா? பற்றற்று அசைவற்று பாறை போல் நிற்பவன் ஆத்மாநுப வியாவான்.

485. சுத்தனுயிருந்த என்னிடமிருந்து உலகெலாந் தோன்றிற்று. அதைத் தரித்தேன். என்னிடமே அவை லயமாயின. ஆயினும் ஸச்சிதானந்தனுய் ரஸமயமாயிருக்கி றேன். ஆதலின் என்னை நானே நமஸ்கரிக்கிறேன்.

486. ப்ரௌடனுன முக்தனது இந்த அநுபவத்தை ஸம்ஸாரக் கடலில் மூழ்கியவனுக்கோ துஷ்டனுக்கோ சொல் லாதே. நன்ருக மலர்ந்து வாஸனை நிரம்பிய தாழம்பூவைக் குரங்கினிடம் கொடுக்கலாமா?

## 24. லகுவாக்யவிருத்தி (18)

487. புத்தியில் சுத்த ஞானத்தின் நிழல் விழுகிறது. இதற்கு ஞானுபாஸமெனப் பெயர். புண்ய பாபத்தைச் செய்வதும் அதன் பயனை அநுபவிக்க ஸ்வர்கம் நரகம் செ ல்லுவதும் இது தான். இதற்குத் தோழன் கர்மா. ஆதலால் பெரும் முயற்சிசெய்து, சுத்தஞானம் ஞானுபாஸம் இவ்விரண்டையும் பகுத்தறிய வேண்டும்.

488. இந்தப் போதாபாஸமென்பது கனவிலும் நினை விலுமே தோற்றும். நல்ல தூக்கத்தில் புத்தி லயமாவதால் சுத்த ஞானம் ப்ரகாசமாக விளங்கும். விழித்திருக்கும் போதுகூட புத்தி, தானே வியாபாரம் செய்யச் சக்தியற்ற தென சுத்த ஞானமுள்ளோர் அறியலாம்.

489. புத்தி, சுத்தாத்மாவினிடம் அறிவைப்பெற்றுத் தானே சுத்த ஞானம் போலிருந்து இதர வஸ்துக்களைப்ரகா சப்படுத்துகிறது. கொதிக்கும் ஜலம் நம்மைக் கொளுத்து

கிறது. ஜலத்திற்கேது அந்த சக்தி? அக்நியினிடம் பெற்றுத் தானே அக்நிபோல் தஹிக்கவில்லையா?

490. இது நல்ல ரூபம். இது கெட்டரூபம். இது ருசியாயிருக்கிறது. இது இல்லை. என்ற புத்தியில் நல்லது கெட்டதென்ற விகல்பம் புத்தியின் வியாபாரம். இந்த வியாபாரத்தை விஷயத்துடன் விளக்குவது சித்தாகும். சித் என்பது நூலாகும். விகல்ப புத்தி என்பது நூலில் கோர்கப்பட்ட முத்து பவழங்களாம்.

491. முத்தாஹாரத்தில் இரண்டு முத்துகளுக்கிடையே நூலின் ஸ்வரூபத்தைக் காணலாம். அதே போல் இரண்டு விகல்ப புத்திகளுக்கிடையே சுத்த ஞானத்தைக் காண லாகும். இந்த சுத்த ஞானமே நிர்விகல்பமெனப்படும்.

492. பிருஹ்மாநுபவம் வேண்டுமானால். ஓர் பொருளைப்பற்றி இத்தகையது இது என்றெண்ணி, அல்ல, வேறு வகையானது என்றெண்ணுவதற்குள் இடையில் நிற்கும் சுத்த ஞானம்போல் எப்போதும் விகாரமற்ற அறிவை அப்யஸிக்க வேண்டும்.

493. நான் என்பது ஸவிகல்பகசித். பிருஹ்மம் என்பது நிர்விகல்பகம். தானேதோன்றும் ஸவிகல்பகம், அதை ப்ரயத்நத்துடன் அகற்றவேண்டும். எல்லாவற்றையும் அடக்கி ஸமாதியிலிருப்பது யோகிகளுக்குப் பிரியமான கார்யம்.

494. இங்ஙனம் செய்யமுடியாதவர் ச்ரத்தையிருந்தால், தான் பிருஹ்மம்என்பதைப் புத்தியால் ஓயாமல் யோசிக்கவேண்டும். நானே பிருஹ்மம் என சிந்தித்து ஓயாமல் வாயாலும் சொல்லி ஒருவருக்கொருவர் போதித்துக்கொண்டு அதே வேலையாயிருத்தல் பிருஹ்மாப்யாஸமெனப்படும்.

495. பொதுவாக எல்லோருக்கும் தேஹத்தில் நான் என்ற புத்தி எப்படி த்ருடமாக இருக்கிறதோ, அதே போல் நான் ப்ருஹ்மமே என்ற உறுதியான அறிவுண்டானால் எப்போது இறந்தாலும் அவன் முக்தனே யாவான்.

## 25. வாக்ய விருத்தி (53).

496. தாபத்ரயம் எனும் கோடை ஸூர்யனால் ஸந்தாபத்தை அடைந்த வழிப்போக்கன் நிழலுக்காக ஓர் மரத்தை நாடுவதுபோல் ஸதாசார்யனை நாடுவான் பரிபாகமுள்ள சிஷ்யன். அவரடி பணிந்து அநாயாஸமாக முக்தி பெறும் வழியைக் கேட்பான்.

497. நான்தான் ஆத்மா என்று ஜீவனுக்கும் ஆத்மாவுக்கும் தாதாத்ம்ய ஐக்யஞானமே மோக்ஷ ஸாதநமென அவர் கூறுவர். இதே ஸுலபமான வழியாம்.

498. பலமுறை உச்சரித்தும், கேட்டும்கூட மோக்ஷமுண்டாகவில்லையே எனில்? அதற்காகத்தான் யார் ஜீவன்? யார் பரமாத்மா? மஹா வாக்யமெது? தாதாத்ம்யஞானமெது? என்று விசாரிக்க வேண்டும்.

499. கேட்கும் நீதான் ஜீவனை எண்ணியிருந்து, நீதான் அவன் என்ற குருவின் மஹா வாக்ய உபதேசத்தால் அந்த பரமாத்மாவாகவே ஆகிறாய். இதுதான் தாதாத்ம்ய ஐக்ய ஞானமாகும்.

500. நீதானவன் என்ற வாக்யத்திற்கு அர்த்தம் தெரியவேண்டுமானால் நீ என்பதற்கும் அவன் என்பதற்கும் பொருள் தெரியவேண்டும். நீ என குரு சிஷ்யனைக் கூறும் போது, சிஷ்யனது உடலையோ இந்திரியங்களையோ மனதையோ அல்லது இதெல்லாவற்றையுமோ நீ எனக் கூறவில்லை. அங்குள்ள சைதந்யத்தைமாத்ரம் கூறினார். அவன் என்றபோதும் ஆங்குள்ள சைதந்யத்தையே கூறினார்.

501. சமதமாதி ஸாதநங்களுடன் ச்ரவணம் செய்த விஷயத்தை அடிக்கடி மனன நிதித்யாஸநம் செய்துவந்தால் ஸம்ஸார விலங்கு அகலும். பிறப்பிற்குக் காரணமான கர்மா அழியும். தேஹமுள்ளவரை ஜீவன்முக்தனாயிருந்து பின்னர் விதேஹ முக்தியையுமடைவான்.

## 26. ஷட்பதீ ஸ்தோத்ரம் (7).

502. ஹே விஷ்ணோ! எனது அடக்கமின்மையை நீக்கி என் மனதை அடக்கும். விஷய ஆசையை அகற்றும். பிராணிகளிடத்தில் அன்பிருக்கும்படிச் செய்யும். பிறவிக் கடலைத் தாண்டுவியும்.

503. உமக்கும் எனக்கும் பேதமில்லை. ஆயினும் வ்யவஹார தசையில் உம்மைச் சார்ந்தவன் யான். என்னைச் சேர்ந்தவர் தாங்களெனச் சொல்லலாகாது. ஏன்? அலை ஸமுத்ரத்தைத் தவிர வேறில்லை. ஆயினும் ஸமுத்ரத்தின் அலையே தவிர அலையின் ஸமுத்ரமில்லையே.

504. உம்மைக் கண்ணால் கண்டால் ஸம்ஸாரப் பிணி அகலும். நீரோ மத்ஸ்யம் முதல் பத்து அவதாரம் செய்து பூமியில் துக்கமடைந்தவரைக் காத்தீர். ஸம்ஸார தாபத்தால் தவிக்கும் என்னைக் கைவிடாதீர்.

505. நாராயண! கருணாமய! உமது பாதாரவிந்தத்தைச் சரணமடைகிறேன், எனும் வண்டு எனது முகமாகிய தாமரையில் எப்போதும் வஸிக்கட்டும்.

## 27. ஸ்வாத்ம நிரூபணம் (154).

506. ஆத்மா என ஒன்று தேஹாதிகளை விடவேருக இருக்கிறதா எனில் நான் இருக்கிறேனா என்று எவருக்காவது ஸந்தேஹமுண்டா? அப்படி ஆத்ம விஷயத்தில் ஸந்தேஹ மிருந்தால் ஸந்தேஹப்படுகிறவனே ஆத்மா என்போம்.

507. நானெப்படி பிருஹ்மமாவேன் என நமக்கு மோஹமுண்டாகிறது. அதனால் பேதபுத்தியும் ஸகல துக்கங்களு முண்டாகின்றன. நானென அன்னமயகோசத்தை நினைப்பவன், நன்கு அதை விசாரித்தால் ஐந்து கோசத்திற்கும் மேலானது நான் என விளங்கும்.

508. யுக்தியினுலும் புத்தியினுலும் நாம் காணும் ஸகல வஸ்துக்களும் அழிவதால் அவை ஆத்மாவாக இருக்க முடியாது. ஆதலால் இதல்ல ஆத்மா என்று நிச்சயிக்கும் போது எந்த ஞானம் இதை விசாரித்ததோ அதேதான் ஆத்மாவாக நிற்கிறது.

509. ஆசார்யனது அருளால் மஹாவாக்யோபதேசம் பெற்று, அதன் அர்த்தத்தை நன்கு விசாரிக்கவேண்டும். நீ என்பதற்கு தேஹம் இந்திரியம் முதலியவைகளின் கார்யத்தோடு ஸம்பந்தித்து இதற்கு அபிமாநியான அறிவே வாச்யார்த்தம். தேஹேந்திரியாதிகளுக்கு ஸாக்ஷியாய் சைதந்யமாயிருப்பது நீ என்பது அதன் லக்ஷ்யார்த்தம்.

510. உபநிஷத்தால் அறியத்தக்கது, ஜகத்திற்கு முதற் காரணமாயிருப்பது, ஸர்வஞ்ஞனுயிருப்பது இதே அவன் என்ற சொல்லுக்கு வாச்யார்த்தம். ஒருவித உபாதியுமில்லாதது, உலகிற்கு மேலானது, சுத்தம் ஒன்றானது. அநுபவத்தால் அறியத்தக்க சைதந்யமென்பது அவனென்பதின் லக்ஷ்யார்த்தமாம்.

511. இதைச் செய் என்பது விதி. இதைச் செய்யாதே என்பது நிஷேதம். இவ்விரண்டால்தான் மனிதனுக்கு ப்ரவிருத்தியுண்டாகிறது. நீதான் அவன் என்ற விதி நிஷேதமில்லாத வாக்யத்தால் எப்படி மோக்ஷம் ஸித்திக்கும்? ராஜா அங்கே போகிறுன். உனக்குப் பிள்ளை பிறந்தான் என்று கூறினுல் விதி நிஷேதமில்லாமலே ப்ருவிருத்தி உண்டாக வில்லையா ?

512. ஐக்யத்தைப் போதிக்கும் வேதாந்த வாக்யம் ப்ரகாசமாய் ப்ரஸித்தமாயிருக்கிறது. காம்ய கர்மாவையும் நிஷித்த கர்மாவையும் செய்யாமல் விட்டு நித்ய கர்மாவைச் செய்கிற ஒருவனுக்கு ஆசார்யன் எதற்கு? தானே ஞானம் உதயமாகாதோ எனில்? இதனுல் மாத்ரம் ஞானம் வராது.

ஆசார்யனருள் வேண்டுமென அநாதியாய் ஸ்வத:ப்ரமாண மாய் விளங்கும் வேதம் சொல்லுகிறது.

513. வேதம் ரிஷிகளால் கூறப்பட்ட தல்லவா? இல்லை. அது சாச்வதமானது. ஜகத் ஸிருஷ்டி ஆரம்பத் தில் பரமாத்மா அதைத் தன் வாயால் வெளிப்படுத்தினர். அவ்வேதம் அநந்தம். அதைத் தபஸால் ரிஷிகள் கண்டுபிடிக் கின்றனர். வஸ்துவைப் பார்ப்பதில் கண் எப்படி ப்ரமாண மோ அப்படியே காணுத விஷயங்களை யறிய வேதமே ப்ர மாணமாகும்.

514. வேதத்தில் ஓர் பாகம் த்வைதத்தைக் கூறுகி றது. மற்றொன்று அத்வைதத்தைச் சொல்கிறது. எது ஸத்யம்? எது பொய்? ஞானம் வரும் வரை த்வைத வேதம் ஸத்யமே. ஞானம் வந்தவனுக்கு அத்வைத பாக மே ஸத்யம். முக்திநிலையில் இரண்டு பிரிவுள்ள வேதமும் உலகுடன் பொய்யாகும்

515. ஜீவன் என்பவன் மாயையால் கல்பிதன் என ஏன் கூறவேண்டும்? ஸ்வபாவமாகவே ஜீவன் இருக்கிறன். இரு ம்பு ரஸத்தினல் ஸ்வர்ணமாவது போல் ப்ருஹ்மத்துடன் ஐக்யமாகலாம் எனில்? இல்லை. ஸ்வபாவமா யிருப்பது என் றும் அழியாது. ரஸம் அழிந்தால் இரும்பிலுள்ள ஸ்வர்ணும் சம் அழிந்து இரும்பு இரும்பாகவே ஆய்விடும். அதேபோல் என்றைக்கும் ஜீவனுக்கு மோக்ஷம்வராது. வந்தாலும் நிலைக் காது. ஆதலின் ஜீவன் ப்ருஹ்மத்தினிடம் கல்பிதனே.

516. மோஹத்தைக் களைந்து நான் யார் என்பதை நன்கு விசாரி. பூர்ணவஸ்துவான ப்ருஹ்மமாய் நிற்பாய்.

517. கர்மகாண்டத்திற்கு உபநிஷத்துகள் அங்கம் என் பது மீமாம்ஸகர் மதம். அதில்லை. இதற்கு அதிகாரி வேறு அதற்கு அதிகாரி வேறு. கர்மாவிற்கு ஸ்வர்க்காதிகள் பயன். ஞானத்திற்கு மோக்ஷம் பலன்.

518. கர்மாவில் ப்ருஹ்மஞான மிராது. ஞானத்தில் கர்மா இராது. பகலில் இருளிரா. இரவில் ஸூர்ய ப்ரகாசமிராது. கர்த்தா, கர்மா, கிரியை என்ற பேதமுள்ளவரை ப்ருஹ்ம ஸ்வரூபம் விளங்காது.

519. இவ்வுலகு காரணமில்லாமலே உண்டானதெனச் சிலர் மதம். அதில்லை. விதை ஒன்றிருந்தாலல்லவோ அதிலிருந்து முளை, செடி முதலியன உண்டாகின்றன. மலடியின் பிள்ளை இந்த வேலைசெய்தான் என்பது பொருந்துமா?

520. ஜகத்திற்குக் காரணமாயிருப்பது ப்ருஹ்மம். பரிபாக முள்ளவனுக்கு ஜகத்தெல்லாம் ப்ருஹ்மமாகவே தோன்றும். காப்பு, மோதிரம், என்று பார்ப்பவனுக்கு விகாரம் தோன்றுமே தவிர காரண வஸ்து தங்கமெனத் தோன்றாது. அவிவேகிக்கு ப்ருஹ்மம் தோன்றாது.

521. உலகில் இரண்டு வகையாகவே ஸகல வியவஹாரங்களும் நடக்கின்றன. நான் என்று ஒன்று. மற்றவைகளைப்பற்றி மற்றொன்று. நான் என்பது ஆத்ம விஷயம். மற்றவை அநாத்ம விஷயம். பசு என்றால் பசுவின் உருவைப்பற்றி பேசுவதல்ல. பசுவின் ஜாதியைக் குறிப்பிடும். அதேபோல் நான் என்பது உடலல்ல, ஆத்மா.

522. மரத்தால் ஓர் யானையைச் செய்து இதென்ன என்றால் யானை என்பர். அச்சமயம் யானைஉருவில் மரம் மறைந்தது. யானையா இது என்றால், இல்லை மரமென்பர். அப்போது மரத்தில் யானை மறைந்தது. அதேபோல் ஜகத் என்றபோது ஆத்மா அதனுள்ளே மறைந்தார். ஆத்மா என்றபோது அவருள்ளே மறைந்தது ஜகத்.

523. வித்யை, அவித்யை, ஆத்மா, உலகம் என்ற வியவஹாரம் ப்ருஹ்ம ஞானம் வந்து ப்ருஹ்ம வடிவமாக நிற்பதற்கு முன்னுள்ள வியவஹார தசையில்தான். அறிவு

பெற்ற பிறகு இருக்கிறது என்று வியவஹார முண்டானல் அது ப்ருஹ்மமே.

524. ஜீவன்முக்தனுக்கும் உடல் அழியும்வரை ஜகத் அவன் கண்ணில் எரிந்த துணியைப்போல் தோன்றும். ஆனல் ஞான பலத்தால் அதையும் ஆத்மாவாகவே எண்ணுவான். தனக்கு பந்தமோ, மோக்ஷமோ, செய்யவேண்டியதோ, வேண்டாததோ இருப்பதாக எண்ணமாட்டான்.

525. ஏகாந்தத்தில் உட்கார்ந்து எதிரிலுள்ள வஸ்துக்கள் எல்லாம் நானே, என்னைத் தவிர வேறொரு வஸ்துவுமில்லை. அலை, சுழல், நுரை, குமிழி முதலிய பற்பல உருவம் காணப்படினும் முடிவில் அவை எல்லாம் ஓரே ஜலமே என்று யோசனைசெய்.

526. உன் குருவே தந்தை, தாய், உடன்பிறந்தான் எல்லோரும் என்றெண். அவனது கருணகடாக்ஷம் உனது தாபத்தை அடக்கும். சஞ்சலமான மனமெனும் மண்டூகத்தை உண்டபின், உனது ஹ்ருதய குஹையில் சின்மயமான பாம்பொன்றைப் பார்ப்பாய்.

527. ஸுகக் கடலான என்னிடத்தில் மாயை எனும் காற்றால் ப்ருஹ்மாண்டமெனும் குமிழிகள் உண்டாகின்றன. குருவெனும் தோணியால் புண்யராசியெனும் காற்றால் பொறுக்கமுடியாத துக்கமெனும் அலைநிறைந்த ஸம்ஸார ஸமுத்ரத்தைத் தாண்டவேண்டும்.

528. மோஹமெனும் இருள் சூழ்ந்தபோது பற்பல வஸ்துக்களைக் கண்டேன், அறிவெனும் ஸூர்யன் உதயமானபோது, அதெல்லாம் மறைந்து ப்ருஹ்மமாகவே நிற்கிறதே என்று ஜீவன்முக்தன் ஆச்சரியமடைந்து உடலுள்ளவரை ப்ராரப்தத்தை அநுபவித்து முடிவில் மோக்ஷம் பெறுவான்.

## 28. தச ச்லோகி. (10)

529. நான் என்பது பஞ்சபூதங்களோ வர்ணாச்ரமங்களோ தாய் தந்தை முதலியவைகளோ அல்ல. ஏன்? இவைகள் வியவஹார காலத்திலேயே ஸ்திரமாயிருப்பதில்லை. தூங்கும்போது ஒருவன் அழியாமல் எப்போதுமிருக்கிறான். அவன்தான் நான் எனத்தக்கவன்.

530. ஸாங்க்யம், சைவம், பாஞ்சராத்ரம், ஜைநம், மீமாம்ஸகம் என்ற மதம் கூறும் தத்வமல்ல நான். எல்லாவற்றிற்கும் மேலாய்ச், சுத்தமாய், ஒன்றாய், ஆனந்தமயமாயிருப்பது நான்.

## 29. அத்வைதாநுபூதி (84)

531. ஆத்மா ஒன்றுண்டென நம்பலாம். எதிரிலுள்ள உலகை எப்படி இல்லை அல்லது பொய்யெனலாம், எனில்? சந்திரன் ஆகாயத்தில் ஒருவன்தானென எல்லோருக்கும் தெரியும். ஆயினும் கண்ணில் வியாதி வந்தால் இரண்டாக சந்திரன் தெரிகிறதே அது பொய்யா உண்மையா? நமக்குக் கண் வியாதி மாயை. ஆதலால் உலகந் தோன்றுகிறது.

532. ஆத்மாவினிடமிருந்து ஆகாசம் உண்டானது. அந்த ஆகாசமே அகண்டமாய் முடிவில்லாமல் வியாபியாயிருக்கிறது. காரணமான ஆத்மாவைப்பற்றிக் கேட்கவேண்டுமா? ஆகாசத்தைப் பானை வீடு முதலியவைகளால் பிரித்து பானையிலுள்ள ஆகாசம், வீட்டிலுள்ள ஆகாசம் என்று வியவஹரிப்பதுபோல், ஆத்மா ஒன்றானாலும் பலவாகக் கூறப்படுகிறது.

533. மேகத்தின் சேர்க்கையால் ஜலமே கல்மழையாக மாறுகிறது. மழைக்கல் அழிந்தால் ஜலம் நாசமாகுமா? அதேபோல் மாயையால் ப்ருஹ்மம் உலகாகிறது. உலகமழிந்தால் ப்ருஹ்மத்திற்கு அழிவுண்டோ? ஜலத்திலேயே

தோன்றும்குமிழி ஜலத்தைவிட வேறாகவே காணப்படுகிறது. ப்ருஹ்மத்தினிடந் தோன்றும் உலகம் அப்படியே ப்ருஹ்மமாகக் காணுமல் வேறாகத் தோன்றுகிறது.

534. பாம்பின் தோலிலுள்ள வெண்மை பாம்பைச் சாராது. அத்தோலைப் பாம்பு தன் தேஹமென்றெண்ணாது. அத்தோலழிந்தால் பாம்பழியுமோ? அதேபோல் நமது உடலின் தர்மமான பிறப்பு இறப்பு ஆத்மாவைச் சாராது. தேஹமழிந்தால் ஆத்மா அழியாது.

535. மோரில் அதிக உப்பைப்போட்டு ஒருவனிடம் கொடுத்தால், மோர் என்பதைவிட்டு ஒரே உப்பு என்கிறான். அதேபோல் ஸ்தூல சரீரத்தில் புகுந்த ஆத்மாவின் தர்மத்தை மறந்து, சரீர தர்மத்தையே ஆத்மதர்மமாகக்கொள்கிறான்.

536. அரிசிமாவை அதிகமாக எவனும் உட்கொள்ள விரும்பான். அதில் வெல்லம் அல்லது சர்க்கரையைக் கலந்தால்தான் எல்லோரும் விரும்புவர். ஆத்மா சர்க்கரை. உடல் மாவு. ஆத்மா இருப்பதால் எல்லோரும் உடலை விரும்புகின்றனர்.

537. ஜடமான இந்த உடலுக்கு அறியவோ, பேசவோ, வளரவோ ஒரு சக்தியுங் கிடையாது. ஆத்மாவினது சேர்க்கையால் இந்தக் காரியங்களைச் செய்கிறது. தீயில் வைத்த பாத்ரம் சுடுகிறது. ஜலம் கொதிக்கிறது. அரிசி அன்னமாகிறது.

538. கயிற்றுக் கட்டிலை வெயிலில் வைத்தால், ஒவ்வொரு த்வாரத்திலும் தனித்தனி ஸூர்யகாந்தி தெரிகிறது. ஸூர்ய ப்ரபை ஒன்றே தவிர பலவல்ல. ஆத்மா ஒன்றே. அநேக க்ஷேத்ரமெனும் உடல்களில் தனித்தனித்தோன்றுகிறது.

539. தேஹம் ஆத்மாவல்ல, காணப்படுவதால். இந்திரியமல்ல, அவை பஞ்சபூத விகாரமாதலால். ப்ராணனல்ல, அது அநேகமாயிருப்பதால். மனதல்ல, அது சலமாயிருப்பதால். புத்தியுமல்ல அது விகாரியா யிருப்பதால். தமஸ்ல்ல,

அந்து ஜடமாயிருப்பதால்- இவைகளை ப்ரகாசப்படுத்தி ஸா க்ஷியாய் இருப்பது நான் எனத்தக்கது ஆத்மா.

540. ஞானம் வராதவரை இந்தஉலகத்தின் உயர்ந்த ஸுகத்தையோ ஸ்வர்க்கத்தையோ இந்திராதி பதவியையோ பெரிதாக எண்ணி ஆசைப்படுவான் மனிதன். ஞானம் வந்தால் அதெல்லாம் ஸ்வப்ந ஸுகம்போல் தோன்றுமாத லால் அதைத் துச்சமென்றெண்ணுவான்.

541. உப்புக்கல் கட்டியாக வெளுப்பாக இருக்கிறது. அதை ஜலத்தில்போட்டால் கரைந்து ஜலமாக மாறி நாமரூப மற்றிருக்கிறது. அதேபோல் ஆத்மாவினிடம் புத்தியைச் செலுத்தினுல் புத்தி நாமரூபமற்று ஆத்மாவாகிறது.

542. தாம்பரத்தால் ஓர் விக்ரஹத்தைச்செய்து ஓர் தே வதையை ஆவாஹநம்செய்து அதை அர்ச்சிக்கிறேம். விக்ர ஹமே தெய்வமல்ல. விக்ரஹம் முறிந்தால் தேவதைக்கு ஆபத் துண்டாமா? இதேபோல் தேஹமும் தேஹியும்.

543. பாலில் ஜலத்தை விட்டால் ஜலம் தன்னுருவை இழந்து பாலாகவே காணப்படுகிறது. ஜலம் நிறைந்த பால் என்று நாம் சொல்லுவோமே தவிர அவ்விரண்டையும் நம் மால் பிரிக்க முடியாது. ஹம்ஸமோ ஓர் நிமிஷத்தில் பிரித்து விடுகிறது. தேஹேந்திரியாதிகள் ஆத்மாவுடன் சேர்ந்ததால் ஆத்மாவைப் போல் தோன்றுகின்றன. அப்பகுத்தறிவுள்ள வன் முக்தனே யாவான்.

## 30. ப்ருஹ்மாநுசிந்தனம். (29)

544. ஓ மனமே! நான் தான் பரப்ருஹ்மம். ஏனெ னில் சித்ரூபமா யிருப்பதால், பற்றற்று, எதனுலும் பாதிக் கப்படாமலிருப்பதால் என்று, எப்போதும் நினை. பந்த மக லும்; முக்தி கிட்டும்.

545. நானே ப்ருஹ்மம் என்று உபாஸிப்பவனைத் தேவர்கள் கொஞ்சம் பரீக்ஷிப்பார்கள். ஏமாறாமல் பலமான நிச்சய புத்தியோடு உபாஸித்தால் அவனருகே வரமாட்டார்கள். ஏன்? அத்தேவர்களுக்கே இவன் ஆத்மாவாய்விடுகிறான். தன்னாத்மா அழிய முயற்சிப்பாரா?

546. நான் எப்படி ஆத்மாவாக முடியும்? அது வேறு தான் என்று, வேறு தேவதையை உபாஸிக்கும் ஒருவனைத் தேவர்கள் ஆஹா! இது நல்ல மிருகம்! தானுழைத்து நமக்கு ஹோமமூலமாக அன்னமளிக்கும் என் இவனைக் கண்டு களிப்பர். அதையும் விட்டவனோ? மிருகத்திலுங்கேடுகெட்டவன்.

547. அஞ்ஞானத்தினால் ப்ருஹ்மத்தினிடமிருந்து ஆகாசம், அதிலிருந்து வாயு, அதிலிருந்து அக்னி, அதனிடம் ஜலம், அதிலிருந்து பூமி, அதிலிருந்து நெல் முதலியன உண்டாகின்றன. அழியும்போது பூமி ஜலத்தில், ஜலம் அக்னியில், அக்னி வாயுவில், வாயு ஆகாசத்தில், ஆகாசம் அஞ்ஞானத்தில், அது சுத்த ப்ருஹ்மத்தினிடம் லயமாகிறது. அந்த ப்ருஹ்மமே நான்.

548. நான் ப்ருஹ்மமே. தேஹாதிகளல்ல என்று மனதால் நிச்சயமாக நினைப்பது மேல். அது முடியாத பக்ஷத்தில் வாயால் அந்த சப்தத்தை உச்சரித்துக்கொண்டேயிருந்தால் புழு, குளவி சப்தத்தைக் கேட்டு த்யானம்செய்து குளவியாக மாறுவதுபோல் ப்ருஹ்ம மயமாவான்.

549. தியானம் சிறந்தது. ஒருமாத த்யானத்தால் ப்ருஹ்ம ஹத்தி பாபமகலும். ஓராண்டில் அஷ்டமாஸித்திகள் கைகூடும். உடல் முடியும்வரை த்யானம் செய்தால் ஜீவன் முக்தனாவான். ஹிருதயகமலத்தில் வேத ஸாரமான ப்ரணவமாய் ப்ரகாசமாய் ஆனந்தமாயுள்ள ஆத்ம ஸ்வரூபத்தைத் தினமும் ஓர் க்ஷணமாவது தியானம் செய்.

# 31. யோகதாராவலீ. (29)

550. ஸதாசிவனால் சொல்லப்பட்ட லயத்திற்குரிய, ஒண்ணேகால் லக்ஷம் அவதாரங்க ளுண்டு. அவைகளில் நாதாநுஸந்தாந ஸமாதிக்கு ஸமம் மற்றொன்றுமில்லை யெனலாம். இது ஸுலபமான சிறந்த வழியாகும்.

551. நமது சரீரத்திலுள்ள காற்றை ஒரு மூக்கால் வெளியில் விடுவது ரேசகம். இரண்டு த்வாரத்தையு மடைத்து நடுவில் வாயுவை நிறுத்துவது கும்பகம். மற்றோர் த்வாரத்தால் வெளிக்காற்றை உள்ளே இழுப்பது பூரகம். இப்படிச் செய்வதால் ஒவ்வொரு நாடியும் சுத்தமாகிறது. அப்போது அநேக மாதிரியாக அநுஹதம் என்றோர் சப்தம் உள்ளே தோன்றும்.

552. அதை த்யானம் செய்வதே நாதாநுஸந்தாநம். இதனால் ச்வாஸத்துடன்கூட மனம் ஹிருதயாகாசத்தில் லயமாகும்.

553. ஜாலந்தர பந்தமென்பது கண்டத்திலுள்ளது. ஒட்யாணபந்தம் வயிற்றிலுள்ளது. மூலபந்தமென்பது அபானத்திலுள்ளது. இம்மூன்றையு மறிந்து அப்யாஸம் செய்தால் யமனுடைய பந்தம் வராது.

554. இம்மூன்று பந்த அப்யாஸத்தாலும் குண்டலினீ சக்தியானது விழித்தெழுந்து ச்வாஸத்தின் போக்குவரத்து நின்றுவிடும்.

555. ஆதாராக்னி கிளம்பி சந்திரனை உருக்கி அங்கிருந்து அமிருத தாரையைப் பெருக்கும். அதைப் பருகும் யோகியே தந்யனாவான்.

556. பந்தத்ரயத்தை அப்யஸித்து ஜயித்துவிட்டால் ரேசக பூரகங்கள் நின்றுவிடும். கேவலம் கும்பகமே விஷயங்களை யகற்றி ப்ராகாசிக்கும். மனதும் ஸ்வாதீனமாகும்.

557. ரேசக பூரகங்களைநிறுத்தி கேவலம் கும்பகத்தை அப்யஸிப்பது ராஜயோகம். அதில் ஸர்வ இந்திரியங்களின் வியாபாரமும்ஒடுங்கி,ஓரானந்தநிலைதோன்றும். அது தூக்கமுமல்ல; விழிப்புமல்ல; கனவுமல்ல. இருப்புமல்ல; இறப்புமல்ல.

558. கும்பகத்தில் அஹம் என்னுடையது என்ற இவை அகலும். ஓரே சித்துதான் விளங்கும். கண் கொட்டுதல் நிற்கும். மனஸ் ஸங்கல்ப விகல்பமற்றிருக்கும். இதை உந்மனீ அவஸ்தை என்பர்.

559. அந்நிலையை யடைய ஸுலபமான வழி ஒன்றுண்டு. உலகப்பற்றில்லாமல் என்ன நடக்கிறதெனப் பார்த்திரு. அதன் செய்கையைக் கண்டு விருப்பு வெறுப்புகொள்ளாதே. எவ்விஷயத்தைப் பற்றியும் மனதில் ஸங்கல்பம் செய்யாதே. இதுதான் அவ்வழி.

560. ஸங்கல்ப பரம்பரைகள் மனதில் தோன்றத்தோன்ற பலாத்காரமாய் அவைகளை அழித்துப் பிடிப்பில்லாமல் செய்தால் மெதுவாகத் தானே மனமொடுங்கும்.

561. விவிக்த தேசத்தில் உட்கார்ந்து பாதி கண்ணைத் திறந்து, மனதையும் பிராணனையும் ஒடுக்கி பரமாத்ம யோகத்தைப் பெற்றுப் பேரானந்தம் பெறுவதெக்காலம் என்று யோசி.

562. ஆத்ம விசாரத்தால் வாஸனையை யகற்றி கர்மத்தை ஒழித்து, ஓயாது கும்பகத்தை, அப்யஸித்தால் ஓர் வகை நிலையுண்டாம். அதை யோகநித்ரை என்பர்.

563. ஸமாதி காலத்தில் மனம் லயிக்க, உடல் அசையாமலிருக்க, மலை குகைகளில் உடலைக் கட்டையென்றெண்ணி அருகிலுள்ள கொடிகள் சூழ, பக்ஷிகள் கூண்டுகட்ட இந்நிலைகிட்டிய பாக்யவானுக்கு வேறென்ன தேவை.

## 32. ஸ்வாத்ம ப்ரகாசிகா (68)

564. எவ்வளவு முறை சொல்லியும் உலகம் பொய்யாகத் தோன்றவில்லை. ஸத்யமாகவே இருக்கிறதென சிஷ்யன் கேட்டான். எத்தனை முறை பார்த்தாலும் பழுதையைப் பார்த்து பயந்தவன் பாம்பென்றே எண்ணுகிறான். நிச்சய ஞானம் வந்தால் அவனே கயிற்றைத் தூக்கி எறிகிறானல்லவா? உனக்கு நிச்சய ஞானமுண்டாகவில்லை என்றார் குரு.

565. ஆத்மா எங்கும் நிறைந்திருந்தும் ஏன் கண்ணில் தென்படவில்லை? கரும்பில் நிறைந்திருக்கும் சர்க்கரை ஏன் கண்ணுக்குத் தெரியவில்லை. கரும்பைக் கசக்கிப் பிழிந்து சாற்றை எடுத்துப் பக்குவமாகக் காய்ச்சின பிறகன்றோ சர்க்கரை வெளிவரும். உன் உடல் என்ற கரும்பை நிஷ்காம்ய கர்மா தபஸ் விரதம் முதலியவைகளால் கசக்கிப் பிழிந்து ரஸரூபமான ஆத்மாவை ஞானக்னியால் காய்ச்சு.

566. ஆனந்தமயமான நாம்தான் மூவுலகையும் வியாபித்து நிற்பது. அப்படிப்பட்ட நாம் நமது ஆனந்தத்தின் லவலேசமுள்ளதும் உடனே அழிவதுமான விஷயானந்தத்தில் ஆசைகொள்ளலாமா? ஏழை தநிகனுய்விட ஆசைப்படுவதுண்டு. தநிகன் ஏழையாக ஆசைப்படுவானு?

567. ஓர் பாத்திரத்தில் விஷத்தையும் மற்றொன்றில் அமிருதத்தையும் வைத்து உனக்கு வேண்டியதை எடுத்துக்கொள் என்றால், விஷத்தைவேண்டும் அவிவேகி உண்டா? இருந்தால் அவன்தான் மோக்ஷாமிருதத்தைவிட்டு ஸம்ஸார விஷத்தை வேண்டும் மூடன்.

568. ஜனதாத்ம ஸ்வரூபத்தை நன்கு உணர்ந்துவிட்டால், அவன் ராஜ்யத்தைத்தான் ஆளட்டும், பிக்ஷையைத்தான் எடுக்கட்டும், கர்மாவைத்தான் செய்யட்டும், மௌனியாகத்தா னிருக்கட்டும், தாமரை இலை ஜலம்போல் ஒன்றிலும் ஒட்டாதவன் அவன்.

569 ஆனந்த ரூபனும்விட்ட ஜீவன்முக்தன் சரீரத்தின் பழக்கத்தினால் ஏதாவது கர்மாவைச்செய்தாலுங்கூட அக்கர்மா அவனை ஆகாசத்தைத் மேகம்போல் அணுகுவதில்லை. (அவனை நிந்திப்பவன் பாபகர்மாவின் பலத்தையும் அவனை உபசரிப்பவன் நற்கர்ம பயனையும் அடைவான்.)

570. ப்ருஹ்மம், ப்ருஹ்மத்தின் பிரதிபிம்பம், புத்தி இது மூன்றும் ஒன்றுசேர்ந்தால் ஜீவன் என வியவஹாரம். தனியான ப்ருஹ்மம் ஜீவனாகாது. ஏன்? ப்ருஹ்மம் நிர்விகாரியா யிருப்பதால், பிரதிபிம்பமோ வஸ்துவே இல்லையாதலால் புத்தி ஜடமானதால் ஜீவனல்ல. ஆதலால் மூன்றையும் சேர்த்தே ஜீவனென்கிறோம்.

571. ஸ்வப்ரகாசனான ஸூர்யன் ஜ்வலிக்கும்போது குருடனுக்கும் கோட்டானுக்கும் எதிரிலுள்ள வஸ்துக்கள் தெரிவதில்லை. ஸ்வயம் ஜ்யோதிஸ்ஸாக ஆத்மா ப்ரகாசித்தாலும் அதைக் காணாதவர் குருடரே. கோட்டானே யாவர்.

572. சின்னதீபமா யிருந்தாலும் நம் அருகிலுள்ள இருளை நீக்குகிறது. ஸ்வல்ப வேதாந்த ஞானம் வந்தாலும் அவித்யையை யகற்றும். ஆனால் அந்த ஞானம் அநுபவத்தில் வரவேண்டும்.

573. ஆத்மா சலனமற்றவன். ஆயினும் புத்தியுடன் தாதாத்ம்ய ஐக்யமாய்விட்டதால் அவனதைச் செய்கிறான் என கர்த்ருத்வத்தைப் பெறுகிறது. ஜலம் சீதளந்தான். ஆயினும் அக்னியின் சேர்க்கையால் உஷ்ணமாகிறது.

574. ஜலத் திவலைகளால் ஆகாசம் நனைவதில்லை. வெயிலால் உலர்வதுமில்லை. அதேபோல் நித்யசுத்தனான ஆத்மா கங்கா ஸ்நானாதிகளால் சுத்தனாவதில்லை. மரத்தில் பழுத்த பழங்களால் மரத்திற்கு ஏதேனும் திருப்தியுண்டோ? அதேபோல் ப்ருஹ்மத்தினிட மிருந்துண்டான அன்னபானாதிகளால் ஆத்மாவிற்கு திருப்தி என்பது கிடையாது.

575. புத்தி அஞ்ஞானத்தில் லயமாகும்போது தூக்கம் உண்டாகிறது. அதன் கார்யத்துடன் அஞ்ஞானமே ஆத்மாவினிடம் லயமாகிறதெனில் அவருக்கு தூக்கமேது? புத்தி பூர்ணமாக மலர்ந்திருத்தல் விழித்திருத்தலாம். புத்தியே நசித்து விடுவதால் ஆத்மாவிற்கு ஏதுவிழிப்பு? ஸூக்ஷ்ம நாடிகளில் புத்தி செல்லும்போது ஸ்வப்நம். அசைதலே இல்லாத ஆத்மாவினிடத்தில் ஸ்வப்நம்தான் ஏது?

576. உடலில்சேர்ந்த அழுக்கை யகற்ற ஸ்நாநம். பூர்ணனும் மாசற்றவனுமுள்ள ஆத்மாவிற்கு ஸ்நாநம் எதற்கு? பிராணவாயுவின் ஸஞ்சாரம் உலர்வதால் தாஹமெடுக்கிறது; உலருதல் நனைதலில்லாத ஆத்மாவிற்கு தாஹமேது?

577. வாயு, அக்னி இரண்டும் சேர்ந்து நாடிகளைப் பீடிக்கும் போது பசி உண்டாகிறது. வாய்வக்னிகளுக்கே காரணமான ஆத்மாவை அவைகள் பீடிக்க முடியாது. ஆதலின் அதற்குப் பசியேது ? கைகால் தலை முதலிய அவயவம் இருந்தாலல்லவோ கிழத்தனமுண்டாகும்?

578. ஸ்த்ரீ ஸுகமும், கர்வமும் நிறைந்த யௌவனம் ஓரே வஸ்துவான ஆனந்த ரஸம் நிறைந்த ஆத்மாவிற்கேது? ஒன்றுமறியாத புத்தியும் கோபமுமுள்ளதும் துக்கத்திற்கே இருப்பிடமானதுமான பால்யாவஸ்தை ஸுகக் கடலான ஆத்மாவிற்குண்டோ ? இத்தகைய விசாரம் செய்வோர் மோக்ஷ ஸாம்ராஜ்யத்தை அடைவார்.

## 33. வாக்ய ஸுதா (46)

579. கண் ஒரே ரீதியாகப் பார்த்துக் கறுப்பு வெளுப்பு, பெரியது சிறியது, நீளம், குள்ளம் இப்படிப்பலவகையான உருவங்களை விளக்குவதுபோல் ஒரே சித்தானது ஸமமாகவே இருந்து ஆசை, ஸங்கல்பம், ஸந்தேஹம், ச்ரத்தை, அச்ரத்தை, தைர்யம், அதைர்யம், வெட்கம், புத்தி, பயம், முதலியவைகளை ப்ரகாசப்படுத்துகிறது.

580. நான் என்பது மூன்றுபொருளோடு ஐக்யமாகிய அர்த்தமுள்ள சொல். ஒன்று சுத்த சித்தான ஜீவப்ருஹ்ம ஐக்யமானது. இது ஸஹஜ ஐக்யமென்பது. என்று மழியாதது. சிதாபாஸனும் ப்ருஹ்மமும் ஐக்யமானது இரண்டாவது. இது கர்மத்தின லுண்டான ஐக்யம். ஞானம் வந்து கர்மக்ஷயம் ஏற்பட்டால் இது அழியும். சரீரத்திற்கும் ப்ருஹ்மத்திற்கும் ஐக்யமுள்ளது மூன்றுவது. ப்ராந்தியால் வந்தது இது. ஞானம் வந்தால் விலகுமிது.

581. சித்தின் நிழல், அஹங்காரம் அந்தக்கரணம் என இரண்டாக புத்தியில் விழுகிறது. அஹங்காரம் பரமாத்மாவில் லயமானுல் தூக்கம். அது பாதி விழித்திருந்தால் ஸ்வப்நம். பூர்ணவிகாஸத்துட னிருந்தால் ஜாக்ரத்.

582. சித்தின் நிழலுடன் அந்தக்கரணவிருத்தி ஐக்யமாகி ஸ்வப்நத்தில், ஜாக்ரத் அவஸ்தையில் தான்முன் அநுபவித்த விஷயங்களின் வாஸனையுடன் வியவஹாரம்செய்கிறது. மனம் அஹங்காரத்திற்குக் காரணமான பொருளுடன்கூட லிங்க சரீரமெனப்படும். அதற்கே பிறப்பு இறப்புகளாம்.

583. மாயைக்கு விக்ஷேபசக்தி ஆவரணசக்தி என இரண்டுண்டு. விக்ஷேபசக்தி கடலில் அலை உதயமாவதுபோல் ப்ருஹ்மத்தினிடமிருந்து ஜகத்தைப் படைக்கிறது. ஆவரணசக்தி ஸ்வரூபத்தைத் தெரியவொட்டாமல் மறைக்கிறது. ஆவரண சக்தி அகன்றுல் ப்ருஹ்மத்தினிடம் ஜீவன் முதலியன கல்பிதமென விளங்கும்.

584. ஒவ்வொரு பொருளிலும், இருக்கிறது, ப்ரகாசிக்கிறது, ப்ரியமானது, பேருள்ளது, உருவமுள்ளது, என ஐந்துவகையான வியவஹாரமுண்டு. முதல் மூன்றும் எல்லா வஸ்துக்களிடமும் ஒரே மாதிரியாயிருக்கிறது. அது ப்ருஹ்மத்தின் அம்சம். பின்னிரண்டும் மாறுபடுகிறது. அது மாயையின் அம்சம்.

585. முதல் மூன்றும்சமிருப்பதால் ஒவ்வொரு பொருளும் ப்ருஹ்மமே என்று வெளியிலுள்ளதையோ ஜீவனையோ தியானம் செய். அந்த தியானம் நிர்விகல்பகம் ஸவிகல்பகமென இருவகைப்படும்.

586. ஸவிகல்பக ஸமாதியானது த்ருச்ய ஸவிகல்பகம் சப்த ஸவிகல்பகமென இருவகைப்படும். காமம் கோபம், லோபம் முதலிய குணங்கள் மனதைச் சார்ந்தன. இவைகளுக்கு ஸாக்ஷியா யிருப்பது சித் என்பது, திருச்ய ஸவிகல்பக ஸமாதியாகும். பற்றற்று ஸச்சிதானந்தமாய் ஸ்வயம் ஜோதிஸ்ஸாய் ஒன்றுயிருக்கிறே னென்பது சப்த ஸவிகல்பக ஸமாதியாம்.

587. பேரானந்தத்தைத் தானே அநுபவித்து த்ருச்யத்தையோ சப்தத்தையோ அபேக்ஷிக்காமல் காற்றில்லாத விடத்தில் வைத்த தீபசிகைபோல் அகண்ட ப்ருஹ்மாகார விருத்தியாய் நிற்பது நிர்விகல்பகமாகும்.

588. வெளி வஸ்துக்களில் ஏதாவதொரு தேவதா புத்தியை வைத்து தியானம்செய்வது ஸாமாந்ய ஸமாதி. அகண்ட ஸச்சிதானந்த லக்ஷணமுள்ளது ஆத்மா என்று த்யானம் செய்வது மத்யமம். ஒரே நிலையாய், நீ நான் தேவன் என பேதத்தை யகற்றி ஒன்றுக த்யானம்செய்வது மேலானதாம்.

589. மேற்சொன்ன த்யானம் ஆறையும் அல்லது சக்தியானதை தினமும் அப்யஸித்துவந்தால் தேஹாபிமானம் ஒழியும். பரமாத்ம ஸ்வரூப தர்சனமாகும். மனத்திலுள்ள சிக்கல் அறும். ஸந்தேஹங்கள் அகலும். கர்மாக்கள் நசிக்கும்.

## 34. ஆத்ம ஷட்கம் (6)

590. சிதானந்த வடிவான சிவனே நான். உடலோ ஸப்த தாதுக்களோ பஞ்சபூதங்களோ தசப்ராணன்களோ தசேந்திரியங்களோ நானல்ல.

## 35. காசீ பஞ்சகம். (5)

591. மனமொழிந்து பரமசாந்தி ஏற்பட்டால் அது தான் மணிகர்ணிகை. ஆத்மஞானம் இடைவிடாதிருத்தல் கங்காப்ரவாஹமாம். ஆத்ம ஸ்வரூபபோதமே காசியாகும். இந்த ஞானமில்லாதவருக்கு அந்த காசிதான் சரணம்.

592. பஞ்சகோசத்திலும் ப்ரகாசமாய் ஒவ்வொரு உடலையும் ஆலயமாய்க்கொண்டு புத்திவடிவமாய் நிற்பவள் பவானி. ஸாக்ஷியாயுள்ள அந்தராத்மா சிவன். ஞானரூப காசியிது. ப்ரகாசமான ஆத்மபோதம்பெற்றவன் காசி சென்றவன்.

593. சரீரமே காசி. ஞானமே கங்கை. பக்தி ச்ரத்தையே கயை. தன் குருவின் திருவடித் தியானமே ப்ரயாகை. ஸாக்ஷியான பரமாத்மா விச்வேச்வரன். இப்படி த்யானம் செய்கிறவனுக்கு வேறு காசி எதற்கு?

## 36. தக்ஷிணாமூர்த்தி அஷ்டகம் (8)

594. உலகம் கண்ணாடியில் காணும் நகரம் போலுளது. மாயையால், உண்மைபோல் வெளியில் தோன்றும். ஞானம் வந்தால் தன்னைத்தவிர வேறொன்றுமிராது. இந்த தத்துவத்தைப் பரமாத்மா தக்ஷிணாமூர்த்தி குருவாய்த் தோன்றி மௌனமாய் உபதேசிக்கிறார். அவரை வணங்கில் ஞானம் வரும்.

595. ஸிருஷ்டிக்குமுன் உலகம் தத்தன் கர்மவாஸனையுடன் விதைக்குள் முளைபோல் ப்ருஹ்மத்தினிடம் அவ்யக்தமாயிருந்தது. மாயையால் விசித்ரமாக உலகம் வெளியில் தோன்றிற்று. இதெல்லாவற்றையும் இந்திரஜாலக்காரன் போல் ஆட்டிவைக்கும் தக்ஷிணாமூர்த்தியை வணங்கு.

596. ஆத்மா அழியாதது, என்றுமுளது, இது இல்லாததுபோல் அஞ்ஞானத்தால் தோன்றும். குரு, கடாக்ஷத்தால்

ஸ்ஹாவ்ரக்யத்தை, அண்டினவர்களுக்கு அருளுவார். அந்த ஸ்வரூபத்தைத் தர்சித்தால் பின்னரேது பிறப்பு?

597. பலத்வாரமுள்ள ஓர் பானையில் தீபமொன்றுளது. அந்தத்வார வழியாக ஒளிவெளியில் ப்ரகாசிக்கிறது. பானையே உடல். த்வாரம் இந்திரியங்கள். தீபம் ஆத்மா. தீப ஒளியால் த்வாரம் மற்றதை ப்ரகாசப்படுத்துகிறது. ஆத்ம ப்ரகாசத்தால் மற்றவைகளுக்கு ப்ரகாசம். ஆத்மாவே தக்ஷிணாமூர்த்தி.

598. பெண்கள், சிறுவர், குருடர், மூர்க்கர் முதலியோர் பித்தனைப்போல் உடலையோ இந்திரியங்களையோ புத்தியையோ நானென நினைப்பர். ஆத்மாவை அறியார். மாயையினால் ஏற்பட்ட இம்மோஹத்தை நீக்கி ஞானத்தை யளிக்கும் குருவை வணங்கு.

599. சந்திர ஸூர்யர்களை ராஹு பிடிப்பதுபோல ஆத்மாவை மாயை விழுங்கிவிட்டது. அதுவரை நல்ல தூக்கத்திலிருந்தான். புண்யவசத்தால் ஞானமுதித்து எழுந்தான். ஐயோ இதுவரை தூங்கிவிட்டேனே என தன்னைத்தானே நினைத்துக்கொள்கிறான் ஜீவன்.

600. குழந்தையா யிருக்கும்போதும் நான் என்றோம். யௌவனத்திலும், கிழத்தனத்திலும், விழிப்பிலும் தூக்கத்திலும் கனவிலும் நான் என்பது மாறுவதில்லை. எல்லாவற்றிலும் தொடர்ந்து ஒன்றாய் ஒளியாய் நிற்பது ஆத்மா. அது நீதான் என் சின்முத்ரையால் தக்ஷிணாமூர்த்தி உபதேசிக்கிறார்.

601. எல்லாம் ஒன்றாயிருக்க மாயையின் வலையில் சிக்கி, நான், என் எஜமான், சிஷ்யன், குரு, மைந்தன், தந்தை, மனைவி, புருடன்என பலவகை பேதத்தைக் கல்பித்துக் கஷ்டமடைகிறோம், குருவை சரணமடைந்தால் துக்கமகலும்.

602. பஞ்சபூதம் யாகதீக்ஷிதர் சந்திர ஸூர்யன் என்ற எட்டு சரீரம் பரமசிவனுக்குண்டு. ஆதலாலவர் அஷ்டமூர்த்தி எனப்படுகிறார். அலசிப் பார்த்தால் இவ்வெட்டு மாத்ரமல்ல. சராசரமான வஸ்துக்களெல்லாம் அவனைத் தவிர வேறொன்றுமில்லை.

## 37. பராபூஜா. (10)

603. ஒன்றாய் ஆனந்தமாயுள்ள பரமாத்மாவை யார் எதனால் எப்படி பூஜிப்பது? பூர்ணனுக்கு ஆவாஹனம் எங்கு செய்வது? எல்லாவற்றிற்கும் ஆதாரமானவனுக்கு ஆஸனம் எங்கிருந்தளிப்பது? ஸ்வச்சனாய்ச் சுத்தனாயுள்ள ஆத்மாவிற்குப் பாத்யம், அர்க்யம், ஆசமநீயம் எதற்கு?

604. நிர்மலனுக்கு ஸ்நாநம் வேண்டுமோ? உலகையே தன் வயிற்றிற்குள்ளடக்கியவனுக்கு எவரிடம் வெட்கப்பட்டு உடலைமூட வஸ்த்ரம் வேண்டும்? எந்த வர்ணம் எந்த கோத்ரம் என்று தெரிந்தால் உபவீதம் போடலாம். ப்ருஹ்மம் எதைச் சார்ந்தது? எப்படி உபவீதம் போடுவது?

605. பற்றற்ற ஆத்மாவிற்கு கந்தம் பூசினால் ஒட்டுமா? வாஸனையற்றவனுக்கு புஷ்பம் எதற்கு? பூஷணம் போட்டால் அதற்காக ப்ரகாசிக்கிறவனல்ல. பூஷணமில்லை என அதற்காக ப்ரகாசிக்காம லிருக்கப்போவதில்லை. உருவில்லாதவனுக்கு எதற்காக எங்கு எப்படி ஆபரணம் பூட்டுவது?

606. நிரஞ்ஜநனுக்கு தூபத்தினால் ஆகும் பயனுண்டோ? ஸர்வ ஸாக்ஷிக்கு தீபம் எதற்கு? ஆத்மானந்தத்தில் திருப்தி யடைந்தவனுக்கு எதை நிவேதனம் செய்வது? ஜகத்திற்கு ஆனந்தத்தை விளைவிக்கும் இவர்க்கு தாம்பூலத்தால் என்ன ஸந்தோஷமுண்டாகப் போகிறது?

607. சந்த்ர ஸூர்யாதிகளுக்கு ஒளியளிக்கும் இவருக்கு நீராஜனம் எதற்கு? ப்ரதக்ஷிணம் செய்வதென்றால்

முடிவில்லாத உருவமுள்ளவனை எப்படி வலம் வரமுடியும்? வணங்குவோமெனில் நான்தானே அவன். என்க்கு நானே வணங்கவேண்டும்.

608. துதிப்போமெனில் வேதவாக்கே இவனைத் துதித்து உருவைக் காணமுடியாமல் திரும்பிவிட்டது. எங்குமுள்ள ஆத்மாவை எப்படி உத்வாஸநம் செய்வது? இப்படி ஏகாந்தத்தில் உட்கார்ந்து த்யானம் செய்தால் ஞானம் பெறலாம்.

## 38. விஞ்ஞான நௌகா. (9)

609. தபஸ், யக்ஞம், தானம் இவைகளால் சித்தம் சுத்தமாகும். வைராக்யம் உதிக்கும். ராஜ்யபதவியையும் துச்சமாக எண்ணுவான். எல்லாவற்றையும் விட்டபிறகு எது நிற்கிறதோ அதே ஆத்மா!

610. தயையுள்ள ப்ருஹ்ம நிஷ்டரான குருவைத் தேடி அவர் திருவடியைப் பூஜி. வஸ்து விசாரம்செய்து நிதித்யாஸனம் செய். மனோவாக்குக் கெட்டாத பரம் வஸ்து நீயாகத் தோன்றும்.

611. ஆத்ம ஸ்வரூபத்தை விளக்குவதும் அநாத்ம வஸ்துக்களை நிந்தித்து வைராக்யம் ஞானம் முதலியவைகளை உண்டுபண்ணுவதுமான ஸ்தோத்ரங்களைக் காலைமாலைகளில் ப்ரதிதினம் படித்துவந்தால் க்ரமமாக ஞானம் பெறலாம்.

## 39. ஹரிமீடே (43)

(ஸம்ஸார இருளைநீக்கும் ஹரியைத் துதிக்கிறேன் என்பது பிரதி சுலோகத்தின் நாலாம்பாதம்.)

612. ஏதாவதொரு பொருளில் எக்காரணத்தைக் கொண்டாவது வைராக்யம் தோன்றும். ஆனால் எப்பொருளிலும் எக்காலத்திலும் வைராக்யமுண்டானால்தான் ஞானம்

வரும். ஆசார்யன் அருள், பக்தி, அப்யாஸம், இவைகளால் சீக்ரம் ஞானத்தைப் பெறலாம்.

613. ச்வாஸத்தை இழுத்துப்பிடித்து ஹ்ருதயத்திற்குள் ப்ரணவத்தை ஏகாக்ர சித்தமாக த்யானம்செய்து, மனதை ஒழித்து ஸ்வயம் ப்ரகாசமான வஸ்துவைக்காண்.

614. எந்தெந்த விஷயத்தைப் பஞ்சேந்திரியங்கள் மூலமாக மனம் உள்ளே கொண்டுவருகிறதோ, அதை அதை ஆத்மா என்று த்யானம் செய்து அதனால் ஸநகாதிகள் விடுபட்டனர், விடுபடுகின்றனர்.

615. மனதுடன் கண்சேர்ந்து வியாபாரம் நடக்கும்போது ஜீவன் பார்க்கிறான் என்று வியவஹாரம். காதுடன் சேர்ந்தால் கேட்கிறான். கேவலம் மனது மாத்ரம் வேலைசெய்யும்போது அறிகிறான். நாக்குடன் சேர்ந்தால் ருசிபார்க்கிறான். மூக்குடன் சேர்ந்தால் முகர்கிறான். இப்படிப் பார்த்தல், அதனாலுண்டான ஞானம் என்ற இரண்டையும் ஒன்று சேர்த்துப் பேசுகிறோம்.

616. விவேகமுள்ளவன், விழித்தல் தூக்கம் ஸ்வப்நம் என்ற மூன்றவஸ்தையிலும் ஸம்பந்த மில்லாமலிருந்தும் அதை அநுபவிப்பவன்போல் ஜீவன் எதனால் தோற்றுகிறான் என்பதை உணர்வான்.

617. சுத்த ஸ்படிகத்தி னருகில் எந்த வர்ணத்தைக் கொண்டுவந்தாலும் ஸ்படிகம் அந்த வர்ணமாகிறது. ஆனால் அவ்வர்ணம் அகன்றால் சுத்தமாகவே நிற்கும். கர்ம பலத்தினால் தரித்ரனாய்த் தநிகனாய் குரூபியாய் ஸுரூபியாய் இருந்தாலும் இவனது சுத்தஸ்வரூபத்திற்கு என்றைக்கும் ஹானி இல்லை.

618. ஒரே கடவுள் ஒரே பெயருடன் இருத்தலாகாதோ? ஒரே ஸுலோகத்தையே ஒரு ஸாதநத்தைக்கொண்டே எல்லோரும் விரும்பலாகாதோ? அவரவர் புத்திக்கேற்ற

ஸாதநத்தைக்கொண்டு ஸுகத்தைப் பெறுவதுபோல் ஒரே வஸ்துவை புத்திபாகத்தால் உபாஸகர்களுக் கநுகுணமாக பலதேவர் பெயரால் அழைக்கின்றனர்.

619. வருணனது புதல்வர் ப்ருகு தந்தையிடம் போய் ஆத்ம ஸ்வரூபத்தைச் சொல்லுமென்றார். ஸத்யம் ஞானம் சுத்தம்அநந்தம் சாந்தமானது ரஹஸ்யமானது, ஆனந்தமான தென்றார், அவர்.

620. ஐந்து கோசங்களையும் ரூபரஸாதி விஷயங்களையும் விட்டு, நீயே ப்ருஹ்மமாக இருக்கிறாய் என்று பிதா உபதேசித்தபடி உபாஸித்து ப்ருகு மோக்ஷமடைந்தார்.

621. வேதாந்த சாஸ்திரமோ புராணங்களோ மற்ற தந்த்ரங்களோ எந்த வழிசொன்னாலும் முடிவில் ஹிருதய கமலத்திலுள்ள ஆத்மாவுடன் லயமாகத்தான் சொல்கின்றன. எங்கு பெய்த மழையும் முடிவில் ஸமுத்ரத்தையே வந்தடையவில்லையா?

622. ஆயிரம் ஜந்மா எடுத்தாலும், குருவாக்யத்திலும் சாஸ்திரத்திலும் சிரத்தை, குருபக்தி, தெய்வபக்தி, த்யாநம், சமதமாதி முதலிய ஸாதநங்களில்லாவிடில் பரமாத்மாவைப் பார்க்கமுடியாது.

623. கீதை ஆத்மாவை அக்ஷரன் எனக் கூறுகிறது. பக்தியின் மேன்மையால் ஸ்வப்ரகாசமான அக்ஷர வஸ்துவை அர்ஜுநனைப்போல் காணும் பாக்யம் சிலருக்கே கிட்டும்.

624. வேதவியாஸர் பதினெட்டுப் புராணங்களையும், பாரத பாகவதங்களையும், வேதாந்த ஸூத்ரங்களையுங் கொண்டு ஆத்ம ஸ்வரூபத்தைப் பலவகையாக வர்ணித்திருக்கிறார். அதை நன்கு விசாரித்து ஸ்வரூபத்தை அறிபவன் விவேகி.

625. நமது ஹிருதய கமலத்தினிடையேயுள்ள ஆகாசம் ஆனந்த வடிவம். அதில்லாவிடில் எவனும் பிழைத்திருக்க முடியாது என தைத்திரீய உபநிஷத் கூறுகிறது.

626. ஸ்வர்ணம்போன்ற ஜீவஸ்வரூபத்தில் பல அசுத்தங்கள் சேர்ந்திருக்கின்றன. ச்ரவணம், மநநம் முதலிய வாயுவால் ஞானக்நியை நன்கு ஜ்வலிக்கச் செய்து ஜீவனை அதில் உருக்கினால் அது ஸ்வச்சமாகும்.

## 40. சிவபுஜங்க ஸ்தோத்ரம் (15)

627. சிவம், ஈசானம், தத்புருஷம், அகோரம், வாமதேவம் முதலிய ஐந்து முகங்களால் சரணமடைந்தவர்களின் ஆபத்தை நீக்கும் பவாநீபதே! உம்மைச் சரணமடைகிறேன்.

628. மஹாதேவ! தேவேச! தேவதேவ! என்று எப்பொழுதும் பக்தியுடன் உமது நாமத்தைக் கூறி, உமது பாதார விந்தத்தை மனதில் நினைக்கும்படி அருள் செய்யும்.

629. உம்மைத் தவிர வேறு சரணமில்லை யென்று உம்மையே சரணமடைகிறேன். என் தைந்யத்தைப் போக்காவிடில் உமக்கு பக்தர்களிடத்தில் அன்புடையவன் என்ற கீர்த்திக்கு ஹானிஏற்படும். அதற்காகவாவதுஎன்னைரக்ஷியும்.

630. அபயம் கொடுக்க இதுவே காலம். நானே பரம தீனன் ஆதலால் தகுந்த பாத்ரம். நீரோ மஹா தானசீலன். உம்மைத் தவிர யாரையும் நான் யாசிக்கவில்லை. உம்மிடத்தில் பக்தியை மாத்ரம் கொடுத்தால்போதும். வேறொன்றையும் கேட்கவில்லை.

631. ஒன்றுமறியாத பசு நான். ஆதலால் என்னைத் தாங்கள் உபேக்ஷிக்கக்கூடாது. தாங்கள் அவ்ரிஷபத்தின்மீதேறவில்லையா ? பாபமுடையவன் ஆனாலும், களங்கியான சந்திரனுக்குத் தாங்கள் தலைமேல் இடங்கொடுக்கவில்லையா? சொன்ன சொல்லை மாற்றும் இரட்டை நாக்குடையவ னானாலும் இரண்டு நாக்குள்ள ஸர்ப்பத்தைத் தாங்கள் ஆபரணமாக ஏற்கவில்லையா ? என்னை ஏற்றுக்கொண்டால் நானும் சுத்தனாய்விடுவேன்.

632. ஒரு தந்தையும் மைந்தனும், பிராஹ்மணரது பசுவை மேய்ப்பதுவழக்கம். மைந்தன் மேய்க்கும்போது காட்டில் சிவலிங்க ப்ரதிஷ்டைசெய்து பசுவின் பாலால் அபிஷேகம் செய்வான். இதைக்கண்ட தந்தை விப்ரத்ரோஹம் கூடாதென்க் கோபத்தால் காலால் லிங்கத்தை உதைத்தார். சிவாபராதம்செய்த தந்தையின் காலை வெட்டினன் மைந்தன். தனது பாபச் செயலை உத்தேசித்துத் தவிக்க அவனுக்கு அருள்புரிந்தார் சிவன். அவரே சண்டிகேசன். புத்ரனைக் கறிசெய்து விருந்திட்டார் சிறுத்தொண்டர். மற்றொருவர் மனைவியைச் செக்கிலிட்டார். இவ்வெல்லோருக்கும் அருள்புரிந்தீர். நான் ஒருவருக்கும் த்ரோஹம் செய்யாதவன். எனக்கு அருள்புரியலாகாதா?

633. விதிப்படித் துதிக்கவோ அர்ச்சிக்கவோ தியானம் செய்யவோ யானறியேன். ஆயினும், மார்க்கண்டேயரைக் காக்க எந்த சரணம் எமனை உதைத்ததோ அதைச் சரணமடைகிறேன். அது என்னைக் கைவிடாது.

634. கழுத்தில் கறுப்பும் உடலில் பாம்பும் கையில் கபாலமும் நெற்றியில் கண்ணும் தலையில் சந்திரனும் இடதுபுறத்தில் மனைவியுமில்லாத வேறு தைவம் என் கண்ணில் படவில்லை.

## 41. சிவ பஞ்சாக்ஷரி. 5

635. சிவனது மஹாமந்த்ரம் பஞ்சாக்ஷரியாம். அது வேதத்தில் ருத்ரத்தில் அமைந்த ஐந்தெழுத்துள்ள மஹாமந்தரம். ஒவ்வோர் எழுத்துக்கும் ஒவ்வோர் சுலோகமாக ஸாதாரண ஸ்துதியாய் பரமாத்ம ஸ்வருபத்தை விளக்கும் பாராயணத்திற்குரிய சுலோகங்கள் இவை.

## 42. வேதஸார சிவஸ்தவம். 11

636. பசுபதியும் பாபத்தை அகற்றுபவனும் யானைத் தோலை உடுக்தியவனும்,ஜடையில் கங்கையைத் தரித்தவனும், மந்மதனை ஜயித்தவனுமான மஹாதேவனை த்யானம் செய்கிறேன்.

637. ஜகத்தெல்லாம் வியாபித்து ஏகரூபனாய் ஜகத்திற்கு விதையாய் ஆசையற்றவராய் ஸ்ருஷ்டி ஸ்திதி லயகாரணராய் ஓங்காரத்தினால் அறியத்தக்கவராயுமுள்ள அஷ்டமூர்த்தியை நினைக்கிறேன்.

638. துரீயமூர்த்தியாய் ப்ரளய காலத்தில் தமோகுணத்துடன்உலகெல்லாவற்றையும் எரித்துச் சாம்பலாக்கிச் சுத்தஸத்வனாய் விபூதியணிந்து பசுபாசங்களை அழிக்கும் பசுபதியை வணங்குகிறேன்.

## 43. கால பைரவ அஷ்டகம். 8

639. இந்திரனால் பூஜிக்கப்படும் பாதாரவிந்தமுள்ளவரும் நாரதாதியோகிகளால் நமஸ்கரிக்கப்பட்டவரும் திகம்பரனாய்க் காசிநகரத்திற்கு நாயகனாய் விளங்கும் காளபைரவரை நமஸ்கரிக்கிறேன்.

640. கோடி சூர்யனைப்போல் ப்ரகாசிப்பவரும் பிறவிக்கடலைத் தாண்டுவிப்பவரும் வேண்டியதை அளிப்பவரும் காலனுக்கு காலனாயுமுள்ள காலபைரவரை வணங்குகிறேன்.

641. உலக வடிவமாய் நிற்பவரும் தர்ம மார்க்கத்தை ரக்ஷிப்பவரும் அதர்மத்தை நாசம் செய்பவரும் கர்மபாசத்திலிருந்து விடுவிப்பவரும் தனது அட்டஹாஸத்தால் ப்ரளய காலத்தில் ஸகல ப்ருஹ்மாண்டத்தையும் உபஸம்ஹாரம்செய்பவரும் கடாக்ஷவீக்ஷணத்தால் ஸகல பாபத்தையுமகற்றுபவருமான காலபைரவரை நமஸ்கரிக்கிறேன்.

## 44. ஸ்ரீமத் அச்யுத அஷ்டகம் 8

642. தன்னிலையிலிருந்து வழுவாத புருஷோத்தமனே தசாவதாரம் செய்து உலகதாபத்தை யகற்றினீர். எனது ஸகல துக்கத்தையுமகற்றி என்னைக் காத்தருளும்.

643. பூர்ணரூபனுகச் சங்கானுகத் துக்கத்தையகற்று பவனுக கோபிகைகளின் மனதை ஸந்தோஷப்படுத்தியவனு யுள்ள வாஸுதேவ! தாங்கள் கருணைக்கடல் ஆதலால் எனது துக்கத்தை யகற்றி என்னை ஸந்தோஷப்படுத்தும்.

## 45. அச்யுத அஷ்டகம். 8

644. அச்யுத! கேசவ! ராம! நாராயண! கிருஷ்ண! வாஸுதேவ! தாமோதர! ஹரே! என்று ஸதா பகவன்னு மாவை உச்சரித்து, அவரது குணங்களை ஸ்மரித்துப் பூஜித்து வந்தால் பாபம் அகன்று சித்தம் நிர்மலமாகி ஞானம் உண் டாகும்.

645. த்ரௌபதிக்கு வந்த ஆபத்தை எல்லாம் நீக்கி அவளைக் காத்த த்வாரகா நாத! தண்டகாரண்யத்திலுள்ள மஹர்ஷிகளது மனோரதத்தைப் பூர்த்திசெய்த புண்ய மூர்த்தே! பூதனைக்கும் நற்கதியளித்த நந்தகுமார! என்னைக் காத்தருள்வாய்.

## 46. நாராயண ஸ்தோத்ரம். 30

646. மேகம்போன்ற கறுத்த திருமேனியுடைய வனே! கோகுலத்தில் தோன்றி இடையர்களுடன் ஸமமாக விளையாடி அழகிய ஆபரணங்களைப்பூண்டு ரமித்து, பலருக்கு நற்கதி அளித்த பரந்தாமா! என்னை ஸம்ஸாரக் கடலிலிருந்து தூக்கிவிடுவாய்.

647. தசரதனுக்குத் தநயனுய்த்தோன்றி விச்வாமித் ரர் யாகத்தைக்காத்து ஸுரர்களுக்கும் ரிஷிகளுக்கும் ஜாந கிக்கும், அபயமளித்த கருணுமூர்த்தே! எனக்கபயமளிப்பாய்.

648. தசகண்டன், வாலி, அஹல்யை இவர்களது பாபத்தைத் தாங்கள் நீக்கவில்லையா? எவ்வளவு பாபியானு லும் தங்களிடம் வந்தால் போதுமெனப் பக்தர்களிடத்து அன்புபூண்ட தீனபந்தோ! எனது பாபத்தை அகற்றும்.

## 47. விஷ்ணுபாதாதி கேசாந்த வர்ணனஸ்துதி. 51

649. பகவானது சின்னங்களான சங்கு, சக்ரம், சார ங்கமெனும் வில், நந்தகமெனும் கத்தி, கௌமோதகீ எனும் கதை, வாஹநமாய் வேதஸ்வரூபமாயுள்ள கருடன், படுக் கையான ஆதிசேஷன், ஜகன் மாதாவான மஹாலக்ஷ்மீ இவர் கள் நாராயணனது பரிவாரமாதலின் அவர்களை முதலில் நமஸ்கரிக்கிறேன்.

650. அஸுரர்களால் வெறுக்கப்படுவதும் ப்ருஹ்மாதி தேவர்களால் பக்தியுடன் தலையால் வஹிக்கப்படுவதுமான பகவானது பாதாரவிந்ததூளி எனது பாபத்தைப் போக் கட்டும்.

651. லக்ஷ்மிதேவியின் மிருதுளமான தாமரைபோன்ற கைகளால் பிடிக்கப்படுவதும், ஒரே காலத்தில் அஸுரருக்கு அழிவையும் தேவருக்கு ஸம்பத்தையும் அளித்ததும், சங் கசக்ராதி ரேகைகள் நிறைந்ததுமான பகவத் பாதாரவிந்த ங்கள் எனக்கு மங்களத்தைக் கொடுக்கட்டும்.

652. இந்த்ர நீலதண்டம்போல் விளங்குவதும் லக்ஷ்மி யால் பூஜிக்கப்படுவதுமான முழங்கால்கள் நமது மனதில் ஸந்தோஷத்தை யளிக்கட்டும். எந்தத் தொடையில், ப்ரஹ்லா தனை வதைத்த ஹிரண்யனை வைத்துக் கொன்றுரோ அவை இன்பத்தை யளிக்கட்டும்.

653. பீதாம்பரத்தையும் ஸ்வர்ண அரைஞாணையும் தரிக்கும் பகவானது அழகிய இடையானது, நமக்கு நற்புத் தியை அளிக்கட்டும்.

654. எந்த நாபியிலிருந்து அழகிய தாமரைப் பிறந்து பதினுலு உலகையும் படைப்பவரான ப்ருஹ்மாவிற்கு வீடா யிருக்கிறதோ அந்த நாபி எனும் ஸரஸில் என் மனமெனும் ஹம்ஸம் எப்போதும் விளையாடட்டும்.

655. காந்தி எனும் ஜலத்தில் மூன்று மடிப்பெனும் அலை வீச, நாபிஎனும் சுழல் சுழல, ஸ்வர்ண மயமான நாபித் தாமரை எனும் படபாக்னி ஜ்வலிக்க, பகவானது வயிறெனும் ஸமுத்திரத்தில் என் மனமெனும் மீன் விளையாடட்டும்.

656. அகண்டு விசாலமாய், ஸ்ரீவத்ஸத்தால் ஓர்புறம் கௌஸ்துபத்தால் மற்ரோர்புறம் பிரகாசிப்பதும், ஸம்ஸார வழியில் நடந்து களைத்தவர்களுக்கு இளைப்பாறும் இடமாயு முள்ள, பக்வானது மார்பு என் மனதை விட்டகலாதிருக்கட்டும். பாகுமூலம் பந்தத்தை அகற்றட்டும்.

657. சங்கம், சக்ரம், கதை, அபயமுத்ரை இவை களை ஏந்திய பக்வானது கைகள் மோஹத்தைப் போக்கட்டும். அவர் கழுத்து நம்மனதில் எப்போதும் தோன்றட்டும். அவர் தந்த பங்தி நமது இருளை நீக்கட்டும்.

658. தனது ஸேவைக்காக வந்த சிவ, ப்ருஹ்ம இந்தி ராதிகளை அவரவருக்கேற்றபடி உபசார வார்த்தை சொல் லக்கிளம்பிய அமிருதம் போன்ற வாக்கானது நமது வாக் கைச் சுத்தமாக்கி மனதை ஸந்தோஷப் படுத்தட்டும்.

659. குண்டலங்களால் விளங்கும் கன்னம் ஆபத்தை அகற்றட்டும். நாஸிகை நல்ல ஜன்மாவை அளிக்கட்டும். தாமரை இதழ்போன்ற கண்கள் நம்மைக் காப்பாற்றட்டும். கேசபாசம் க்லேசத்தைப் போக்கட்டும். கிரீடம் ஸௌகத்தை அளிக்கட்டும்.

## 47. ஆனந்த லஹரீ. 20

660. ஹே பவானி! தங்களைத் துதிக்க நான்கு முகம் படைத்த ப்ருஹ்மனும் ஐந்துமுகம் படைத்த பரமசிவனும் ஆறுமுகமுள்ள ஸுப்ரஹ்மண்யனும் ஆயிரம் தலைகொண்ட ஆதிசேஷனும்சக்தனல்ல எனில் நானென்னசொல்லமுடியும்.

661. நெய், பால், திராக்ஷை, தேன் இவைகளது ருசியையே எவ்வளவு சிறப்பான சொற்களாலும் சொல்ல முடிவதில்லை. வேதத்திற்கெட்டாத குணகணமுள்ள தாயே! சிவபிரானது அநுபவத்தால் மாத்திரம் அறியத்தக்க தங்கள் ஸௌந்தர்யம், எங்கள் நாக்கிற்கு எப்படி விஷயமாகும்?

662. வாயில் தாம்பூலமும், கண்ணில் மையும், நெற்றியில் திலகமும், கழுத்தில் முக்தாஹாரமும், இடுப்பில் ஒட்டியாணமும் விளங்க பர்வத ராஜனது குமாரியாய் விளங்கும் உங்களுருவத்தை உள்ளத்தில் எப்போதும் வைப்பாம்.

663. சில குணங்களுடன் கூடிய இலையுள்ள கொடியை சிலர் ஆச்ரயிக்கின்றனர். அதில் எனக்காசையில்லை. இலையேயில்லாத (அபர்ணா—இலையில்லாதது, பார்வதி) கொடியொன்று பழையஸ்தாணுவை (கட்டையை, ஈசனை) முத்தினும் பலனுள்ளதாகச் செய்தது. அதை அண்டுகிறேன். (அபர்ணா ஸ்தாணு இவ்விரண்டும் இரண்டர்த்தமுள்ள ச்லேஷை வார்த்தை.)

664 இஹபரஸுகத்திற்கும் ஸகல வஸ்துக்களுக்கும் காரணமானவள் நீ. உன்னிடத்தில் த்ருடமான பக்தி எனக்கு உதிக்கவில்லை. ஆனாலும் தயையுள்ள நீ என்னைக் கைவிடக்கூடாது. எதைச்செய்தால் என் புத்தி தங்களை நாடுமென அறியேன். சாதக பக்ஷியின் வாயில் மதுரமான ஜலத்தை மேகம் புகட்டவில்லையா? அதுபோல் தாங்களே தயை புரிக.

665. நான் கருணைக்குப் பாத்திரமா என்று என்னைப் பரீக்ஷிக்கலாகாது. உடனே உமது கருணைத் ததும்பிய கடா

க்ஷத்தை ஏழைமேல் ஏவவேண்டும். இல்லையேல் மற்றவர்களுக்கும் தங்களுக்கும் தாரதம்யம் இராதுபோய்விடும். எல்லா செடியும் செடிதான். கல்பலதையும் இவைபோன்ற செடிதானே?

666. தங்களது பாதாரவிந்தத்தில் பலமான நம்பிக்கை வைத்து இதர தேவர்களைக் கைவிட்டேன். தாங்களிப்போது என்னைக் கைவிட்டால் யாரை யான் அண்டுவது? முன்னர் என்னால் மதிக்கப்படாத இதரதேவர்தான், என்னை இப்போது மதிப்பரோ?

667. என் மனம் சுத்தமில்லை என்று உபேக்ஷையா? இரும்பு ஸ்பர்சம் என்பதோடு சேர்ந்து தங்கமாகவில்லையா? அசுத்தமான தெருவில் ஓடும் ஜலம் கங்கையில் கலந்து சுத்தமாகவில்லையா?! அப்படி தங்கள் திருவடியில் சேர்ந்து என் மனம் சுத்தமாகாதோ?

668. தாயே, உன்னைத் தவிர மற்றவரிடம் வரம் பெறலாம். அங்கு நான் கேட்டதைத்தான் பெறலாம். நீயோ குழந்தையின் நன்மையை நாடி அதற்கு வேண்டியதை எல்லாவற்றையும் கேட்டதற்கும் அதிகமாய் அளிக்கும் தாய்என பிருஹ்மாதி தேவர்கள் கூறுவதால் உன்னையே சரணமடைந்தேன்.

669. அன்னையே உனக்கு வாஸமோ கைலாஸம். உன்னைத் துதிப்பவர்களோ ப்ருஹ்மா, இந்திரன் முதலிய தேவர்கள். உமக்குக்குடும்பமோ மூன்றுலோகமும். அணிமாதி ஸித்திகளோ கைகூப்பி காத்துக்கொண்டிருக்கின்றன. பர்த்தாவோ மஹேசன். உனக்குஉபமானம் எவரைச்சொல்லமுடியும்

670. பரமசிவனுக்கு வாஹனமோ ஓர் கிழ எருது அன்னமோ விஷம். வஸ்திரமோ திக்குகள். விளையாட்டு பூமியோ ச்மசானம். ஆபரணமோ பாம்புகள். இப்படி இவரது ஸாமக்ரிகள் உலகில் மிகப்ரஸித்தமானதே. ஆயினும்

தங்களது மஹிமையால் உலகில் எல்லோரையும்விட ஈசன் மேலான மங்கள ஸ்வரூபியாயிருக்கிருன்.

671. ஒவ்வொரு மஹா ப்ரளயத்திலும் ஸகல ப்ருஹ்மாண்டத்தையும் உபஸம்ஹாரம் செய்வது பரமசிவனுக்கு வழக்கமாய் விட்டது. வாஸமும் ச்மசானத்தில்; உடலிலும் பஸ்மா பூசி இருக்கிருர். இப்படியிருந்தும் ஸமுத்ரத்தைக் கடைந்தபோது உண்டான விஷத்தைத் தயையுள்ள உனது ஸம்ஸர்க்கத்தினுல் உள்ளே விழுங்கி உலகை லயப்படுத்தாமல் கழுத்திலேயே வைத்திருக்கிருர் என்று தோன்றுகிறது.

672. உனது அத்புதமான அழகைக் கண்டு வெட்கமடைந்து கங்கை ஜலமாக உருகி ஓடிவிட்டாள். ஈசன் கருணையால் அவளுக்குத் தலையில் இடமளித்தார். சந்தநம் முதலிய வாஸனை த்ரவ்யங்களுடன் தாங்கள் ஸ்நாநம் செய்து கீழே விழுந்த ஜலத்தை எடுத்து ப்ருஹ்மா தேவலோக ஸ்திரீகளைப் படைக்கிருர்.

673. வஸந்த காலத்தில் புஷ்பங்களால் வாஸனை சூழ மலர்ந்த பொற்றுமரையுள்ள ஸரஸில் ஹம்ஸங்கள் அழகாக விளையாட, மலய மாருதத்தால் மந்தமாக அலைவீச, ஸகிகளுடன்கூட அம்பிகைஜலக்ரீடை செய்வதாகத் தியானம்செய்வோர் ஜ்வரத்தினுல் வரும் தாபத்தை நீக்கி ஸுகமடைவர்.

## 48. த்ருபுர ஸுந்தரீ ஸ்தோத்ரம். 8

674. கதம்பவனத்தில் ஸஞ்சரிப்பவளும், அழகிய வீணையைக் கையிலேந்தியவளும், குடில சித்தமுள்ளவர்களுக்கு எட்டாதவளும், முக்கண்ணனது மனைவியாயுமுள்ள த்ருபுர ஸுந்தரியை ஆச்ரயிக்கிறேன்.

## 49. அன்னபூர்ணு ஸ்தோத்ரம். 12

675. எப்போதுமானந்தத்தை அளிப்பவளும் ஸகல பாபங்களையும் நீக்கி சுத்தியாக்கும் ஸ்வபாவமுள்ள காசி

க்ஷேத்திரத்திற்கு ஈச்வரியாய் விளங்கும், தாயான அன்ன பூர்ணேச்வரீ! எனக்கு பிக்ஷையை அளி.

676. வேண்டிய வரத்தை அளிப்பவளும் பலவகை யான ரத்னாபரணம் பூண்டு வேதாந்த சொற்களால் அறியத் தக்க ஸ்வரூபமுள்ளவளும் ஓங்காரத்தை பீஜாக்ஷரமாக உடையவளுமான அன்னபூர்ணேச்வரீ! எனக்கு பிக்ஷையளி

677. அன்னையே! உன்னை உபாஸிப்போருக்கு மோக்ஷ வாசற் கதவைத் திறந்து விடுவாய். பக்தர்கள் கோரும் ஸமஸ்த வஸ்துக்களும் உன்னிடம் பூர்ணமாயிருக்கின்றன. ஞான வைராக்ய பிக்ஷையை எனக்களி.

678. தாய் எனக்கு பார்வதீ, தந்தை பரமசிவன், பந்துக்கள் சிவபக்தர்கள், ஊரோ மூன்று உலகமும் என்று நினைப்போருக்குத் தாயின் அருள் தானே சுரக்கும்.

## 50. அம்பாள் அஷ்டகம் 8

679. அம்பிகையை என் வாயாரத் துதிக்க தங்கு தடையின்றி ஸர்வரஸம் நிறைந்த ஸரளமான கவிபாடுந்தன் மையை, தேவியின் முகாரவிந்தத்திலுள்ள வெற்றிலைபாக்கு ரஸத்தின் திவலை அளிக்கட்டும். ஸர்வ அவயவங்களிலும் அழகு நிறைந்த தேவியின் திரு உருவம் என் மனத்தே எப்போதும் இருக்கட்டும்.

680. எங்கு என் மனம் ஆவலுடன் ஓடுகிறதோ அங்கு ஸகல தேவர்களாலும் உபசரிக்கப்படும் ஜகதம்பிகை வந்து தோன்றட்டும். ஸகல ஜநங்களின் பாபத்தையுமகற்ற வல்ல தேவி என்னைப் பாபத்திலிருந்து விடுவிக்கட்டும்.

681. எல்லா சக்தியும் நிறைந்த ஸர்வேச்வரி! அங்குமிங்கும் அலையும் என் மனதை உன்பாதாரவிந்தத்தை ஸேவிக்கும்படிச் செய். ஓ மனமே! காக்கைக்கும் கழுகிற்கும் ஆஹாரமானதும் ஆபாஸமானதும் அழியக்கூடியதுமான இவ்

வுடலில் ஏன் ஆசை வைக்கிறாய்? ஆனந்த மயமான அம்பிகையின் பாதாரவிந்தத்தை நாடு.

682. பரமசிவனைவிட தாங்கள் எங்களுக்கு க்ஷேமத்தை யளிப்பதில் ஆசையுள்ளவள். ஆதலால் ஓ சைல ராஜகுமாரி! என் மனம் தங்கள் பாதாரவிந்தத்தில் பக்திகொள்ளும்படி செய்யும்.

## 51. கிருஷ்ணாஷ்டகம். 8

683. ஸாக்ஷாத் லக்ஷ்மீதேவி அன்புடன் தழுவ, வேதத்தினால் அறியத்தக்க புண்டரீகாக்ஷன், சங்கு சக்ர கதாபாணியாய்க் கிருஷ்ணனாய் என் கண்முன்னே தோன்றானோ?

684. யமநியம் ப்ராணாயாமம் முதலிய ஸாதனங்களால் இந்திரியங்களை அடக்கி ஹிருதய கமலத்திலே கிருஷ்ணனை யோகிகள் தியானம் செய்கிறார்கள். மாயாவியான பகவான் அவர்களையே ஏமாற்றி விடுகிறாரே! எனக்கெப்படி அருள் புரிவர்? சரணமடைந்தவரைக் கைவிடாரன்றோ?

685. பூமியினுள்ளிருந்து அதை நன்கு அறிந்து ஆட்டிவைக்கிறான். ஆயினும் பூமி இவனை அறிவதில்லை என ச்ருதி கூறுகிறது. தேவாதிகளும் இவரது நிஜஸ்வரூபத்தை அறியவில்லை. அர்ஜுநனுக்கு ஸஹாயமாயிருந்து அவனது கர்வத்தை யகற்றிய பரமபுருஷன் என் கண்ணுக்குப் புலப்படுவரோ ?

686. எவனைத் தியானம் செய்யாவிடில் பன்றி முதலிய ஜன்மங்கிட்டுமோ? எவனை உணராவிடில் பிறப்பிறப்பு அகலாதோ, எவனை நினையாவிடில் பல ஜன்மம் புழுவாய்ப் பிறக்கவேண்டுமோ? அவனை யான் காண்பேனோ?

687. அஞ்ஞானத்தை அகற்றுபவன் உலகிற்குக் காரணமானவன். தனக்குக் காரணமில்லாதவன். ஆயினும் இடையர்ச்சேரியில் பிறந்தவன். தனக்கு ஸமமாக வேறொருவ

னில்லாதவன். ஆயினும் அர்ஜுநனுக்குத் தோழன். தர்மத்தைக்காக்க தரணியில் அவதரிப்பவன். அவனை என்று காண்பேனே? (ஸ்ரீசங்கராசார்யர் தன் தாய்க்கு வைகுண்டமளிக்கும்படி விஷ்ணுவைப் பிரார்த்தித்தசுலோகங்களிவை.)

## 52. கோவிந்தாஷ்டகம். 8

688. ஸச்சிதானந்த வடிவனான கோவிந்தன், மண்ணை ஏன் தின்றாய் எனத் தாய் அடிக்கவரும்போது வாயைத் திறந்து பதினாலு உலகத்தையு மவளுக்குக் காட்டினார். அவரை வணங்கில் வேண்டியதைப் பெறலாம்.

689. அவனை எல்லோருங் காணவும் அறியவும் முடியாது. அவன் ஆஹாரமே இல்லாதவன். வெண்ணையைக் கண்டால் விடமாட்டான். கறுத்தமேனி யுடையான். நிர்மலமானமனத்தினரால் காணத்தக்கவன். விஷ்ணுவாயினும் கேவல சைவன். தன்னைக்கொண்டே ரமிப்பவன். கோபீ கோபாலர்களுடன் கூடி விளையாடுபவன். நாமரூப மற்றவன். பல்லாயிரம் பெயருடையவன்.

690. நித்யசுத்தன். கோதூளியால் தன்னைச் சுத்தி செய்து கொள்பவன். பக்தி ச்ரத்தையுள்ளவருக்கு எப்போதும் தர்சந மளிப்பவன். சோக மோஹமற்றவன். கோபிகளது வஸ்திரத்தை அபஹரித்து விளையாடுபவன். அவனை வணங்கு.

## 53. கிருஷ்ணாஷ்டகம். 8

691. கோபகுலத்திலே தோன்றி எண்ணிறந்த லீலைகளால் எல்லோருள்ளத்தையும் ஆகர்ஷித்த ஸ்ரீகிருஷ்ணனது தாமரை மலரை ஒத்த பாதங்கள், இரவும் பகலும் எவருள்ளத்திலே குடிகொண்டிருக்கிறதோ அவர் வைகுண்டம் செல்வது ஸத்யம்.

## 54. பாண்டுரங்க அஷ்டகம் (8)

692. பீமரத்யை நதிக்கரையில் புண்டரீக னெனும் பக்தனுக்கு அருள்புரிய முனிகணங்களுடன் வந்த பாண்டு ரங்கனைப் பஜி. புண்டரீகன் என்ற பக்தன் தந்தை தாய்க்குப் பணிவிடை செய்யும்போது பீதாம்பரதாரியான பகவான் எதிரில் வர, அருகிலிருந்த செங்கல்லைப் பகவானுக்கு ஆஸனமா யளித்து, தந்தை தாய்ப் பூஜை முடிந்தவுடன் தங்களைக் கவனிக்கிறேனென கூற, அதை ஏற்றுநின்ற எம்பிரானை வணங்கு.

693. ஸ்வாமி தனது இடுப்பில் கையை வைத்துக் கொண்டு தன்னை அண்டியவர்களுக்கு ஸம்ஸாரக்கடல் இவ்வளவு ஆழந்தான் என்று உபதேசிக்கிறார். அதற்கு தனது நாபிக் கமலத்திலிருக்கும் பிருஹ்மாவைக் காத்து நிதர்சனமாகக் காட்டுபவர்போல் பிரகாசிக்கிறார்.

## 55 கங்காஷ்டகம் (8)

694. ஆதியில் ப்ருஹ்மாவின் நியமாநுஷ்டானத்திற்கு வேண்டிய ஜலமாயிருந்தாள். பின்னர் மஹா விஷ்ணுவின் பாத தீர்த்தமானாள். அதன் பிறகு பரமசிவனது செஞ்சடையில் தங்கினாள். ஜன்ஹு ரிஷிக்கு கன்னிகையாகத் தோன்றினாள். மனிதர்களது மஹா பாபத்தையும் அகற்ற மாநிலத்தில் கங்கையாக அவதரித்தாள்.

695. கங்கே! உனது அலை கண்ணில் பட்டால் போதும். பின்னர் துக்கமென்பதுகிடையாது. உன்ஜலத்தை உட்கொண்டால் வைகுண்டம் செல்லலாம். உன் மடியில் உடலை விட்டாலோ தேவேந்திர பதவிகூட துச்சமாகத்தோன்றும்.

696. ஸ்வர்க்க லோகத்திற்கு வழியாய் விளங்கும் கங்கே! ப்ருஹ்மஹத்தி பாபம்போகப் பிராயச்சித்தமாக உன் ஜல

லவம் போதுமென்றால் உன்து மஹிமையை வர்ணிக்க எவ ரால் முடியும்?

697. உன் கரையில் தலைமீது கைகளைக் கூப்பி உடல் போகும்போது பகவானது திருவடிகளை நினைப்பவனுக்கு ப்ராணன் போவது துக்கமா யிருக்காது. உத்ஸவமா யிருக் கும். சிவன் விஷ்ணு என்ற பேதமற்று ஒன்றான சாச்வத பக்தியே உதிக்கும். (ஆசார்யாளது தாயார் கொஞ்சதூரத்தி லுள்ளநதிக்கு ஸ்நாநம் செய்யப்போய்ப் பாதிவழியில் வெயில் தாளாமல் மூர்ச்சையாக விழுந்தாள். அவளை ஆச்வாஸப் படுத்தி, தாய்வீட்டிற் கருகில் அந்நதி வரும்படி கங்கையைக் குறித்து இந்த ஸ்துதி செய்ததாகச் சொல்வதுண்டு.)

## 56. யமுனாஷ்டகம். (8)

698. ஸூர்யனது பெண்ணாய்ப் பிறந்து கறுத்த ஜல முடையவளாய் ஸகல பாபத்தையும் போக்கி மோக்ஷத்தை யளிக்க வல்லவளாயுள்ள யமுனை என்னைச் சுத்திசெய்யட்டும்.

699. மதுவனத்தில் ஸஞ்சாரம் செய்து க்ருஷ்ணனு க்கு மிகவும் பிரியமாயிருந்து கங்கையுடன் சேர்ந்து உலக பாபங்களை யெல்லாம் அகற்றும் சக்தியுள்ள யமுனே! ஸ்ரீ க்ருஷ்ணன் ராஸக்ரீடைசெய்யும்போது கோபிகளது ஸமஸ்த தாபத்தையு மகற்றினாய். என் தாபத்தையும் நீக்குவாயாக.

## 57. நர்மதாஷ்டகம் (8)

700. யமதூதனது பயத்தை யகற்றி மார்க்கண்டேய னுக்கு ப்ரளய காலத்தில் மாடிபோ லிடமளித்துக் காக்கும் நர்மதே! உன்னை வணங்குகிறேன். என் பாபத்தை யகற்று. வஸிஷ்டர், பிப்பலாதர், ஸநத்குமாரர், நாசிகேதர், கச்யபர், அத்ரி, நாரதர் முதலிய மஹர்ஷிகளால் ஸேவிக்கப்பட்டவள் நீ. ஹரிஹர ப்ருஹ்மாதிகளுக்கு மிருப்பிடமாயிருக்கிறாய்.

701. உன்னருகே வஸிக்கும் ஸகல ஜந்துக்களுக்கும் நற்கதி யளிப்பவள் நீ. உன்னை நினைத்துத் துதித்தாலே எவ்வளவு பாபியானாலும் ரௌரவாதி நரகம் செல்லமாட்டான் என்றால், உன் ஜலத்தில் ஸ்நாநம் செய்தவர்களைப் பற்றிக் கேட்கவும் வேண்டுமோ?

## 58. ஸ்ரீமணிகர்ணிகா அஷ்டகம் (8)

702. ஓ மணிகர்ணிகே! உன் கரையில் சிவனும் விஷ்ணுவும் ஒன்றுகூடி அங்கு இறப்பவர்களுக்கு ஸாயுஜ்ய மளிப்பதா முக்தியளிப்பதா என வாதம் செய்யும்போது விஷ்ணு, சிவனைப் பார்த்து, ஸ்வாமி 'என்னுருவத்தைத் தரிக்கட்டும் இந்த பக்தன்' என வேண்டி ஸாயுஜ்யத்தை யளிக்கிறார்.

703. யக்ஞாதி புண்ய கர்மாவால் தேவேந்த்ரன் முதலிய பதவி பெற்றோர் புண்யமானவுடன் பூமியில் மனிதனாகவோ மிருகமாகவோ பிறக்கின்றனர். உன் ஜலத்தில் நிஷ்காம்யமாக ஸ்நானம் செய்தவர் மஹாவிஷ்ணுவின் ஸாயுஜ்யம் பெற்றுப் பூமிக்குத் திரும்பமாட்டார்.

704. காசியே புண்ய புரி. கங்கை பாவனமானது. மணிகர்ணிகை முக்தியை அளிக்கத்தக்கது. ஆதலால் அமிருத கலசம், சிந்தாமணி, கல்பவிருக்ஷம், முதலிய நிறைந்த ஸ்வர்க்கத்தைவிட சிறந்தது. இதை அறிய தேவர்கள் ஓர் தட்டில் காசியையும் மற்றொன்றில் ஸ்வர்க்கத்தையும் வைத்து நிறுத்துப்பார்த்தனர். அதிக மதிப்புள்ளதால் காசி பூமியில் நின்றுவிட்டது. லேசான ஸ்வர்க்கம் மேலே சென்றது.

705. கங்காதீர மெல்லாம் பாவனமானது. அதிலும் காசிமேலானது. அதிலும் விச்வேச்வர ஸாந்நித்யமுள்ள மணிகர்ணிகை ஸர்வ ச்லாக்யமானது. ஜன்மாந்தரத்தில் செய்த பெரும் புண்ணியமுள்ளவர்களுக்கே இம்மணிகர்ணிகை கிடைக்கும்.

706. பலவகைத் துன்பங்களை அநுபவிக்கும் பிராணி கள் உஜ்ஜீவிக்குமாறு கடவுளால் படைக்கப்பட்டவள் மணி கர்ணிகை. அதன் தீரத்திலுள்ளவர் ஸ்ரீதாரும் கங்காதாரு மாவர். அங்கு மங்களமாக சரீரத்தை விட்டவர் சிவனுக வோ விஷ்ணுவாகவோ வருவதைக்கண்டு இந்திரன் பிரமித் துப் பூஜை செய்யக் காத்திருக்கிறான்.

707. மத்யாஹ்ந காலத்தில் செய்யும் மணிகர்ணிகா ஸ்நாநத்தின் பலனைக்கூற சதுர்முகனுலும் தன்னுயுட்காலம் பூராவாக ச்ரமப்பட்டாலும் முடியாது? தனது யோகபலத் திஞல் சிவனும் விஷ்ணுவும் அங்கு வஸிக்கின்றனர்.

708. பல அச்வமேததங்களுக்கு ஸமம் ஓர் மாத்யாஹ் நிக மணிகர்ணிகா ஸ்நாநம். மணிகர்ணிகையின் ஸ்தோத் திரத்தைப் படிப்பவர்களே ப்ருஹ்மலோகம் செல்வர். ஸ்நா நம் செய்தவரைப்பற்றிக் கேட்கவேண்டுமா?

## 59 தக்ஷிணமூர்த்தி ஸ்தோத்ரம். (19)

709. ஞான வடிவமாய்த் தென்முகமாய் ஆலமரத்தின் கீழே வஸிக்கும் பரஞ்சோதியாய் மந்தஹாஸத்துடன்கூடிய மௌனத்தால் முனிவர்களது இருளை நீக்கும் தக்ஷிணமூர்த் தி என் மனதில் தோன்றட்டும்.

710. கடோரமான ஸம்ஸார பந்தத்தால்வாடிய முனி வர்களைக் காருண்யம் நிறைந்த கடாக்ஷத்தால் ஆச்வாஸப்படு த்தி அவர்களுக்கு மௌன முத்ரையால் மஹாவாக்யார்த்தத் தை உபதேசிக்கும் ஆதிகுருவை வணங்கு.

711. காலின்மேல் காலைப்போட்டுப்பாம்பையே யோக பட்டமாக உடையவரும் சுத்தவெண்மை நிறம்வாய்ந்தவரு மான குரு ஓங்கார வித்யையை உபதேசித்து இருளை யகற்ற ட்டும்.

712. தான் யுவாவாக இருந்தும் கிழவர்களான முனி

தண்ங்களுக்கு மௌனத்திருநிலையே ஸகல ஸம்சயங்களையும் அகற்றும் குருமூர்த்தி என்னெதிரில் தோன்றட்டும்.

713. மந்மதனை எரித்தச் சாம்பலைப் பூசி புலித்தோலை உடுத்தி தலையில் ஜடையணிந்து சந்தரசூடனாய் வீணாபாணியாய் விளங்கும் ஆசார்யன் எனது அஞ்ஞானக் கடலை படபாக்னியாயிருந்து அழிக்கட்டும்.

714. அஹங்கார லேசமற்ற சுகாதிகள் கூட ஓர்வித விருப்புமின்றி எவரை உபாஸிக்கிறார்களோ? எவர் பலதேவர்களிருந்துங்கூட கருணையால் மூடர்களது அஞ்ஞானத்தை அகற்ற சிந்முத்ரையுடன் ஸித்தமாயிருக்கிறாரோ அந்த மூர்த்தி என் மோஹத்தை அகற்றட்டும்.

715. எண்ணிறந்த தவத்தின் பயனாக, ஞானகுரு தொங்கும் சடையுடன் ப்ரகாசமான தலையிலணிந்த சந்திரனுடன் மலர்ந்த தாமரைப்போன்ற முகத்துடன் நிர்மலமான மனத்தில் தோன்றுவார்.

716. சந்த்ரன் சந்திரகாந்தக்கல்லை உருக்கி ஜலமாக்குவதுபோல் பக்தர்களது சித்தத்தைத் தன் நிஜஸுந்தரரூபத்தால் ஆகர்ஷிக்கும் தக்ஷிணாமூர்த்தியை உபாஸித்தால் செல்வம், ஆயுள், வித்யை இவைகளையும் முடிவில் வேதாந்த ரஹஸ்யத்தையும் பெறுவான்.

## 60. த்வாதச ஜ்யோதிர்லிங்க ஸ்தோத்ரம் (13)

717. அழகிய ஸௌராஷ்ட்ர தேசத்தில் ஜ்யோதிர்மயமாய்ப் பக்தியை உலகிற்கு ஊட்ட ஸோமநாதனையும் ஸ்ரீ சைலத்தில் மல்லிகார்ஜுனனையும் தோன்றிய பரமசிவனைச் சரணமடை.

718. அவந்தியில் ஸாதுக்களுக்கு முக்தியளித்த மஹாகாலேச்வரராய்த் தோன்றியவரும் நர்மதா காவேரீ ஸங்க-

மத்தில் மாந்தாத்ரு பட்டணத்தில் ஓங்காரேசனுயுதித்த வனை நமஸ்கரி.

719. பூர்வோத்தரதிக்கில் ஸ்ரீவைஜநாதனுகவும் யாம்ய நகரத்தில் ஸ்ரீ நாகநாதனுகவும், ஹிமாலயத்தருகே கேதாரேச்வரனுகவும், ஸஹ்யாத்ரியின்மீது தர்சனமாத்ரத்தால் ஸகல பாபங்களையும் நீக்கும் த்ரயம்பகனுகவும் தோன்றியவனைச் சரணமடை.

720. ராமேச்வரத்தில் ஸ்ரீராமனுல் ஸ்தாபிக்கப்பட்டு ஸ்ரீ ராம நாதனுகவும், சாகினீ டாகினீமுதலிய சக்திகளால் பூஜிக்கப்பட்டு பீமேச்வரனுகவும், கர்சியில் விச்வநாதனுகவும் இலா புரத்தில் கிருஷ்ணேச்வரனுகவும் தோன்றிய பரம சிவனைப் பணிந்து சரண மடை.

## 61 லலிதாபஞ்சகம். 6

721. கோவைப் பழம்போன்ற உதடுள்ளதும் பெரியமுத்தினுல் ப்ரகாசிக்கும் நாஸிகையுள்ளதும் காது வரை நீண்ட கண்களுடையதும், குண்டலத்தாலழகியதும் மந்த ஹாஸமுள்ளதுமான ஸ்ரீலலிதா தேவியின் முகாரவிந்தத்தைக் காலையில் எழுந்தவுடன் நினை.

722. ஸ்வர்ணவலயம்பூண்டு ரக்தாங்குலீயத்தால் ப்ரகாசிப்பதும் ,ஆயுதங்களை ஏந்தியதுமான அம்பிகையின் கராரவிந்தங்களைக் காலையில் மனதால் பூஜி. பக்தர்களிஷ்டத்தைப் பூர்த்தி செய்வதும் ஸம்ஸாரக் கடலுக்குத்தோணி போன்றதுமான சரணுரவிந்தத்தை நமஸ்கரி.

723. பகவதியைக் காலையில் துதித்து லலிதே! காமேச்வரீ! கமலே! மஹேச்வரீ! சாம்பவீ! ஜகஜ்ஜநநீ! திரிபுரேச்வரீ! என்று வாக்கினுல் துதி. மனங்குளிர்ந்த மாதா, வித்யை செல்வம், கீர்த்தி முதலியவைகளைக் கொடுப்பாள்.

## 62 ப்ரமராம்பாஷ்டகம் 8

724. ஸ்ரீசைலத்தில் குடி கொண்டிருக்கும் ப்ரமராம்பிகை சராசரமான உலகை ஸம்ரக்ஷிப்பவள். தனதழகால் பரம சிவனை ஸ்வாதீன மாக்கியவள். அவளை த்யானம் செய்.

725. ஸ்ரீசக்ரத்தை வீடாகக்கொண்டு தேவாஸுரர்களால் ஜயிக்க முடியாத மஹிஷாஸுர பண்டாஸுரன் முதலிய துஷ்டர்களைக் கொன்று உலகைக் காத்தருளிய கருணவடிவமான தாயைப் பணி. உன்னிஷ்டத்தைப் பெறலாம்.

## 63 ஆத்மானாத்ம விவேகம். 41

(வசன நடையில் வினவிடை மூலமானது)

726. ஆத்மாவிற்கு ஏன் துக்கம்வந்தது? சரீர மெடுத்ததால். சரீரம் எதனுல் வந்தது? கர்மாவினுல். கர்மா எதனுலுண்டானது? ராகாதிகளால். ராகாதிகள் உண்டாகக் காரணம் என்ன? அபிமானத்தால். அதற்கு ஹேது என்ன? அவிவேகம். அது எதனுலுண்டானது? அஞ்ஞானத்தால்? அது எதனுலுண்டானது? எதனுலுமில்லை. தானே அனுதியாயிருக்கிறது.

727. ஆயின் அஞ்ஞானமென்பது யாது? எப்போதுண்டானது? அது அநாதி. ஸத்தென்றும் அஸத்தென்றும் சொல்ல முடியாதது. முக்குணவடிவமானது. ஞானத்திற்குப்பரம விரோதி. அஞ்ஞானத்தால் அவிவேகம், அதிலிருந்து முன் கூறியபடி க்ரமமாக துக்க முண்டாகிறது.

728. துக்கம் எப்போது அகலும்? அடியோடு சரீரமெடுப்பது ஒழிந்தால்தான். எப்போது சரீர மெடுக்காமலிருக்கலாம்? அடியோடு கர்மா அகன்றபிறகே. கர்மா? ராகாதிகள் அகன்றால். ராகாதிகள்? அபிமான மொழிந்த பிறகு. அபிமானம்? அவிவேகமழிந்த பின். அவிவேகம்? அஞ்ஞான மகன்றபின். அஞ்ஞானம்? நாமும் ஆத்மாவும் ஒன்றென ஐக்யானுபவஞானம் வந்த பின்.

**729.** ஞானம் வந்தால்தான் அஞ்ஞானம் அழியும். ஆனால் அந்த ஞானம் வரும் வழி யாது? ஆத்மானாத்ம விசாரத்தால். அந்த விசாரத்திற்கு யார் அதிகாரி? நான்கு ஸாதன முள்ளவன். அவை எவை? நித்ய அநித்ய வஸ்துவைப் பகுத்தறிதல், இவ்வுலகிலும் தேவாதி லோகத்திலுமுள்ள போகத்திலும் வெறுப்பு, சமாதி ஆறு குணம், மோக்ஷம் வேணுமென்ற தீவ்ர ஆசை இன்னான்குமே.

**730.** புராணாதிகளால் பிரும்மம் ஸத்யம் உலகம்பொய் என அறிதல். சரீரம் ஜீவித்திருக்க வேண்டியதைவிட அதிகமான சந்தனம் மாலை பெண்கள் ருசியுள்ள பதார்த்தங்கள் முதலிய இந்த லோகசுகத்திலும் ஸ்வர்க்கம் முதல் பிரும்மாதிலோகம் வரையிலுமுள்ள லோகங்களிலுள்ள விமானம் அமிருதம் ரம்பாதி ஸுகம் முதலியவைகளிலும் வாந்தி எடுத்த வஸ்துவிலும் நாய் விஷ்டையிலும் கழுதை மூத்திரத்திலும் உள்ளது போல் ஓர் துச்ச ஹேயபுத்தி வேண்டும்.

**731.** சமம், தமம், உபரதி, திதிக்ஷா, ச்ரத்தா, ஸமாதானம் இவை சமாதி ஆறும். மனதை யடக்குவது சமம். அதை எப்படி அடக்குவது? ஆத்ம விஷயமாகக் கேள்வி, நினைத்தல் த்யானம்செய்தல் தவிர மற்ற விடங்களுக்கு மனம் போகாமல் தடுத்தல்.

**732.** ச்ரவண மென்பதென்ன? ஆசான் முகமாக ஆறுவித காரணங்களால் வேதத்தில் கூறப்படுவது ஒன்றான ஆனந்த மயமான ஆத்ம ஸ்வரூபமே என்று நிர்ணயித்தல்.

**733.** ஆறுவித காரணம்யாவை? ஆரம்பத்திலும் முடிவிலும் ஓரே விஷயங் கூறப்பட்டிருத்தல், அதே விஷயத்தை அடிக்கடி சொல்லல், அபூர்வமான விஷயத்தைச் சொல்லல், பலன் கூறல், அவ்விஷயத்தைத் துதித்தல், யுக்தி கூறுதல், உபக்ரமோபஸம்ஹாரம், அப்யாஸம், அபூர்வதை, பலம்,

அர்த்த வாதம், உபபத்தி என்பனவாம். இவை பிரம்ம விஷய மாகவே வேதத்தில் காணப்படுகிறது.

734. மநநமாவது யாது ? குருவினிடம் கேட்ட அத்விதீய மான வஸ்துவை வேதார்த்தத்திற்கனுகுணமான யுக்தியினுல் சிந்திப்பது. நிதித்யாஸனம் யாது ? ஆத்மாவைத்தவிர மற்ற வஸ்துவின் எண்ணங் குறுக்கிடாமல் ஆத்ம விஷயமான ப்ர வாஹம் போன்ற ஒரே சிந்தை செய்தல்.

735. தமமென்பது யாது? ஞானேந்திரியம் ஐந்தையும் கர் மேந்திரியம் ஐந்தையும் வெளியில் போக விடாமல் தடுப்ப தாம். உபரதி எது ? ஸன்யாஸம் செய்துக் கொள்வது அல் லது கேட்ட விஷயத்திலேயே மனதை நிறுத்துவது.

736. திதிக்ஷை எது ? குளிர்தாபம் வலி முதலியவைகளைப் பொருத்தல். தனக்கு எதிரியை அடக்கத்தக்க சக்தியிருந்தும் அவன் செய்யும் அபராதத்தைப் பொறுத்துக்கொள்ளல். ஸமாதானம் யாது ? ஆத்ம விஷயமாக மனம் சிந்தை செய் யும்போது வாஸனையால் விஷயங்களில் ஓடும் மனதை அடக்குதலாம்.

737. ச்ரத்தையாவது யாது ? குருவாக்கியத்திலும் வே தாந்த வாக்கியத்திலும் அதிக விச்வாஸங் கொள்ளுதல். முமுக்ஷுத்வமெனில் யாது? மோக்ஷத்தில் தீவ்ர ஆசையாம்.

738. இங்ஙனம் நால்வகை ஸாதனமில்லாத கிருஹஸ்தன் வேதாந்த விசாரம் செய்தால் பாபம் வருமா ? பாபமில்லை. ப்ரதிதினம் பக்தியுடன் குருவுக்குப்பணி விடை செய்து வேதாந்த ச்ரவணம் (சாந்தி பாடத்துடன்)செய்தால் எண்பது கிருச்ர பலம் கிடைக்கும்.

739. ஆத்மா யாது? ஸ்தூல ஸூக்ஷ்மகாரண சரீரங்களை விட வேறாய் பஞ்சகோசத்திற்கு மேலாய் மூன்றவஸ்தைக ளுக்கும் ஸாக்ஷியாய் ஸச்சிதாநந்தனாய் விளங்கும் ஸ்வரூபம்.

740. அநாத்மா யாது? பொய்யானதும் ஜடமானதும் துக்க வடிவமானதும் ஸமஷ்டி வியஷ்டி என்ற பிரிவுடன் கூடியதுமான மூன்று சரீரம்.

741. ஸ்தூல சரீரமெது? பஞ்சீகிருத பஞ்ச பூதங்களாலாகியதும் கர்மாவினால் உண்டானதும் பிறப்பு வளர்ப்பு முதலிய மாறுதலுடையதும் ஸுக துக்கங்களை அனுபவிக்கும் இடமுமான உடல். இதே அன்னமய கோசம். வயதால் ஜீர்ணமாகி அழிவதால் சரீரமென்றும், கொளுத்தப்படுவதால் தேஹமென்றும் அதற்குப் பெயர்.

742. சில உடல் கொளுத்தப்படாமல் புதைக்கப்படுவதால் அதைத் தேஹமென எப்படிச் சொல்வது? வியாதி முதலிய ஆத்யாத்மிகம், புலி திருடன் முதலிய ஆதிபௌதிகம், இடி மழை பெருங் காற்று முதலிய ஆதிதைவிகமெனும் தாபத்ரயத்தால் எல்லா தேஹமும் கொளுத்தப் படுகிறதல்லவா?

743. ஸூக்ஷ்ம சரீரமெது? அபஞ்சீகிருதபூதத்தின் கார்யமாய் காது தோல் கண் நாக்கு மூக்கு ஆகிய ஐந்து ஞானேந்திரியங்களும், வாக்கு, கை, கால், பாயு, உபஸ்தமெனும் ஐந்து கர்மேந்திரியங்களும், பிராண அபான வ்யான உதான ஸமான மெனும் ஐந்து பிராணன்களும், புத்தி மனஸ் என்ற பதினேழும் சேர்ந்ததாம்.

744. அந்தக்கரணமென்பதென்ன? அதன் ஸ்தானம், வேலை யாது? மனஸ் புத்தி சித்தம் அஹங்காரம் இந்நான்கையும் அந்தக்கரண மென்பர். மனதின் ஸ்தானம் கண்டமாம். வேலை ஸம்சயமாம். புத்தியின் ஸ்தானம் வதனம். வேலை நிச்சயம். சித்தம் நாபியிலுள்ளது. வேலை தாரணம். அஹங்காரம் ஹிருதயத்திலுள்ளது. வேலை அபிமானமாம். சித்தம் புத்தியிலும் அஹங்காரம் மனதிலும் சேரும்.

745. ஐந்து உபப்ராணன் யாது? அதன் வேலை என்ன? நாகன் கூர்மன் க்ருகரன் தேவதத்தன் தனஞ்ஜயன் என ஐந்து. ஏப்பம் முதலியன நாகத்தின் வேலை. கண் கொட்டு வது கூர்மம். போஷிப்பது தனஞ்ஜயன். கோட்டுவாய் விடு தல் தேவதத்தன். தும்பல் கிருகரனது வேலை.

746. ஸூக்ஷ்ம சரீரத்தில் சேர்ந்த கோசம் யாது? அதன் வேலை என்ன? ப்ராணமய கோசம். இது கிரியா சக்தி உடையதால் கார்ய ரூபம். மனோமயம் இச்சா சக்தி யுடையதால் காரணம். விஞ்ஞானமயம் ஞான சக்தி உடைய தால் கர்த்ரு ரூபமாம்.

747. லிங்க சரீரமென்று ஏன் பெயர் வந்தது? சரீர மானால் அழியுமா? அழிவதானால் எதனால்? ரஹஸ்யமான விஷயத்தை ச்ரவணமனனாதிகளால் அறிவிப்பதாதலின் லிங் கம் எனப்படும். நான் பிரும்மம் என்ற நிச்சய ஞானம் வந்தால் லிங்க சரீர மழியும்.

748. காரண சரீரம் யாது? ஸ்தூல ஸூக்ஷ்ம சரீரங் களுக்குக் காரணமாய் அநாதியாய் அநிர்வசனீயமா யுள் ளது அஞ்ஞானம். இது பிரும்மாத்மைக்ய ஞானம் வந் தால் அழியும்.

749. விச்வன் தைஜஸன் ப்ராக்ஞன் என்பவர் யாவர்? ஜாக்ரத் ஸ்தூல சரீரத்தை அபிமானிப்பவரை விச்வன் என் பர். ஸ்வப்ன ஸூக்ஷ்ம சரீராபிமானியைத் தைஜஸனென் பர். ஸுஷுப்தி காரண சரீராபிமானியை ப்ராக்ஞன் என்பர்.

750. கோசங்கள் என்று ஏன் பெயர்? கத்தியை மேலுள்ள உறை எப்படி மறைக்கிறதோ அப்படி ஐந்து கோசங்களும் ஆத்ம ஸ்வரூபத்தை மறைக்கின்றன. தாய் தந்தைகள் புஜித்த அன்னம், சுக்ல சோணித ரூபமாகி நம து ஸ்தூல சரீரத்தை உண்டுபண்ணுகிறது. இது அன்ன மய கோசம். அது ஆத்மாவை மறைக்கிறது.

2. கர்மேந்திரியமைந்து ப்ராணன் ஐந்து ஆகிய இக்கூட்டம் ப்ராணமயகோசம். பேசாது கொடாது நடவாது உள்ள ஆத்மாவைப் பேசுபவன் கொடுப்பவன் நடப்பவன் எனக் காட்டி பசிதாஹமில்லாதவனைப் பசிதாஹ முள்ளவன்போல் காட்டி நிஜஸ்வரூபத்தை மறைக்கிறது.

3. ஞானேந்திரிய மைந்து மனஸ் இவை மனோமயமாம். இது ஸம்சய சோகமோஹ தர்சனுதி வியாபாரமற்ற ஆத்மாவை ஸந்தேஹிப்பவராகவும் சோக மோஹதர்சனமுள்ளவராகவும் தோற்றி வைத்து உண்மை வடிவத்தை மறைக்கிறது.

4. ஞானேந்திரிய மைந்தும் புத்தியும் சேர்ந்து விஞ்ஞானமயமாம். இது கர்த்ருத்வம் ஜாட்யம் முதலியவைகளற்ற ஆத்மாவைக் கர்த்தா ஜடன் எனக்காட்டி ஸ்வச்ச வடிவத்தை மறைக்கிறது.

5. பிரியம் மோதம் ப்ரமோதம் முதலியவைகளையுடைய அஞ்ஞானம், ப்ரதானமாக அந்தக்கரணம் இவை ஆநந்தமய கோசம். இஷ்டர்களை அல்லது புத்ரனைக் காண்பதாலுண்டாவது ப்ரியம். இஷ்டப்பட்ட பொருள் கிடைத்தால் மோதம். அது அதிகமானுல் ப்ரமோதம். இவை ஆத்மாவிற்கில்லை. இருப்பதுபோல் காட்டி ஆத்மாவை மறைப்பது இந்த கோசம்.

751. ஸச்சிதானந்தமென்றுல் என்ன? ஸத் என்பது எக்காலத்தும் எதனுலுமழியாமல் ஏக ரூபமாயிருத்தல். சித்தெனில்? வேறொன்றை அபேக்ஷிக்காமல் தானே ப்ரகாசமாயிருப்பதுடன் தன்னிடத்தில் கல்பிக்கப்பட்ட இதர வஸ்துக்களை விளக்குவது. ஆனந்தமெனில்? எதற்கு மேல் ஆனந்தமில்லையோ? எது நித்யமோ? எது ஆத்மாவினிடமே ஜனிக்குமோ? அதே ஆனந்தமாம். இவை ஆத்மாவினிடமே உண்டு.

752. இப்படி யிருக்குமா இராதா என்ற எண்ணம் ஸந்தேஹம். அப்படியிராது என்பது அஸம்பாவனை. சொன்னதற்கு நேர் மாறான விஷயத்தைக் கொள்ளுதல் விபரீத பாவனை. இம்மூன்றையும் விட்டொழித்து குரு சொன்னபடி வேதாந்த வாக்கிலுள்ள விஷயத்தை விசாரிப்பவன் ஜீவன் முக்தனுவான்.

## 64. அத்யாத்மபடல விவரணம் 14.

(ஆபஸ்தம்பரியற்றிய வேதாந்த விஷயமான ஸூத்ரங்களுக்கு ஸ்ரீமதாசார்ய ரியற்றிய வ்யாக்யானம்)

753. ஆத்ம லாபத்தைத் தவிர அடைய வேண்டியதொன்றுமில்லை. ஆதலால் அதற்குரிய யோகங்களைக் கைப்பற்று. ஆத்மா ப்ராணிகளது ஹிருதய குஹையில் வஸிக்கிறார். ஸ்வர்க்க ஸுகம் முதல் எல்லா விஷயங்களையும் விட்டு மோக்ஷ ஸுகம் பெறு.

754 யோகத்திற்குப் பிரதிபந்தகமாயுள்ளவைகளை உணர்ந்து அதை முன்னே அகற்ற வழி தேடுபவன் விவேகி. இல்லையேல் இத்தோஷங்கள் மனதைக் கெடுத்து ஞானம் வராது தடுத்துவிடும்.

755. 1. குரோதம். பரநிந்தை அடி இவைகளில் கொண்டு விடும். மனதைக் கலங்கச்செய்யும். சரீரத்தில் நடுக்கம் வியர்வை முதலியவைகளை உண்டு பண்ணும். 2. ஹர்ஷம். இஷ்டங்கை கூடியதால் உண்டாகும். ஆனந்த பாஷ்பம் மயிர்க்கூச்சல்களை உண்டு பண்ணும். 3. ரோஷம். அனிஷ்டத்தால் வரும் மனதின் மாறுதல். 4. லோபம். பிறர் பொருளிலாசை. ஸத்பாத்ரத்திலும் தன் பொருளைக் கொடாமை. 5. மோஹம். செய்யத்தக்கது தகாதது என்ற அறிவில்லாமை. 6. தம்பம். தான் வெகு தார்மிகன் என வெளிப்படுத்தல். 7. த்ரோஹம். பிறருக்கு அனிஷ்டத்தைச் செய்தல். 8. பொய் கூறல். 9. அதிகமாக உண்ணல் 10. பிறர் தோஷத்

தை மறைவில் கூறல் 11. அஸூயை பிறர் குணத்தைப் பொறுக்காமை. 12. காமம், பெண் விஷயமானது. 13. மன்யு. அது தடைபடுவதாலுண்டாகும் கோபம், 14. அநாத்ம்யம். ஆத்ம விஷய சிந்தை இல்லாமை.

756. யோகங்களாவன. 1. கீழ்க் கண்டவைகளுக்கு மாறுனவை. 2. ஸம்விபாகம். யதாசக்தி அதிதிக்கு அன்ன மிடல். 3. த்யாகம், எல்லா ஸாதனங்களுமிருக்கும்போதும் ஸுக வஸ்துக்களை விடல். பரலோக இந்திராதி ஸுகங்களை யும் விடுதல். 4. ஆர்ஜவம். கபடமில்லாமல் வாக் மனஸ் சரீர கார்யங்களைச் செய்தல். 5. மார்த்தவம். 6. சமம் 7 தமம்.

757. 1. ஆர்யம். அல்பத்தனமில்லாமை 2. க்ரூரமில் லாமலிருத்தல். 3. துஷ்டி. கிடைக்க வேண்டியது கிட்டாவிட் டாலும் தெளிந்த மனதோடிருத்தல். இக்குணங்களைப் பெற்றோர் பந்தத்திலிருந்து விடுபடுவர்.

## 65 சதச்லோகி. 100

758. ஸ்பர்சமென்ற கல்பம் கல்லைத் தொட்டால் ஸ்வர்ணமாகும். குரு சிஷ்யனைத் தொடாமலே தன்னைப் போல் செய்துவிடுகிறார். சந்தன விருக்ஷத்தின் சேர்க்கை யால் மற்ற மரங்களும் வாஸனையைத் தருவதுபோல் குருஉப தேசம் பெற்ற சிஷ்யனும் உலகை ஸந்தோஷப்படுத்துகிறான்.

759. உலகெல்லாம், உடலை நானென்றெண்ணி அதற்கு வேண்டிய போஷணை அலங்காரங்களைச் செய்கிறதே தவிர எந்த வஸ்துவால் இந்த உடல் பிணமாகாமல் நாற்றமெடுக் காமலிருக்கிறதோ அதைப்பற்றி கவனிப்பதேயில்லை.

760. ஓர் நல்ல ஸாமர்த்தியம் வாய்ந்த புழு காட்டி லுள்ள முள்ளுகளால் தனக்கோர் வீடு அமைத்துக்கொண்டு ஆயுள்வரை அதில் வஸிக்கிறது. அதேபோல் ஜீவன் தனது புண்ய பாபகர்மங்களால் சரீரத்தை எடுத்துப் பலனை அனு பவிக்கிறான்.

761. புலிவேஷம் பூண்டு ஒருவன் பிச்சை எடுக்கிறான். ஸ்திரீ வேஷம் பூண்டு ஒருவன் நடிக்கிறான். புலிவேஷக்காரன் மனிதர்களையும் பசுக்களையும் அடித்துத் தின்பானா? பெண்வேஷதாரி புருஷனது காமேச்சையைப் பூர்த்தி செய்வானா? அதேபோல் ஜீவவேஷம் பூண்ட ஆத்மா ஸுகதுக்கங்களை அனுபவியான்.

762. அழுங்குழந்தையை ஸமாதானம் செய்யத் தாய் திராக்ஷை மாம்பழம் வாழைப்பழம் முதலியவைகளையும் சொப்புகளையும் அளிப்பதுபோல அனேகப் பிறவிவாஸனையால் மோஹமடைந்த மனதை நல்வழிப்படுத்த உபநிஷத் என்ற தாய் ருசியான பல உபாயங்களைக் கூறுகிறாள்.

763. உலகில் பிரியமானவஸ்து ஆத்மா. அதற்காக மனைவி தனம் பிள்ளை வீடுமுதலியன பிரியமாயிருக்கின்றன. ஒருவன் தனக்காக இவைகளை இழக்க ஸம்மதிப்பான். ஆனால் அந்தப்பிரிய வஸ்துவை விசாரித்து பூர்ணானந்தம் பெற முயற்சிப்பதில்லை.

764. பிரும்மார்ப்பணம் என்றளித்த தானம், மனதிலும் கோபமில்லாமை என்ற பொறுமை, ச்ரத்தை என்ற ஆஸ்திக்யம் ஸத்யம் இன்னான்கைக்கொண்டு பந்தகரமான ஸ்வர்க்காதிகளைப் பெறுவதைவிட நிஷ்காம்யமாக இவைகளையே அனுஷ்டித்து மோக்ஷமடைவோர் துர்லபம்.

765. தேவதைகளுக்கும் அதிதிகளுக்குமளித்த அன்ன சேஷம் அமிருதம். தனக்காகச் செய்த உணவு வ்யர்த்தமானதோடு மிருத்யுவை யளிக்க வல்லது. தான் மாத்ரம் உண்பவன் கேவல பாபத்தை அனுபவிப்பவன். ப்ராணாக்னிஹோத்ரம் செய்யாமல் புஜிப்பவன் நரகத்தையே அனுபவிப்பான்.

766. நனைந்த கட்டையில் அக்னி பற்றுவதில்லை. ஸூர்யதாபத்தால் ஈரம் உலர்ந்த பிறகு சீக்கிரமாக தீ பிடிக்கும். விஷயங்களால் மனம் நனைந்தபோது ஞானம் வருவ

தில்லை. வைராக்யத்தினுல் மனம் உலர்ந்த பிறகு ஞானம் உதயமாகும்.

767. பலவாத்யங்கள் ஏக காலத்தில் வாசிக்கப்பட்டால் தனித்தனியாக அதன் த்வனி நம் காதில் விழுவதில்லை. எல்லாம் கலந்து ஒன்ருகவே கேட்கிறது. அதேபோல் மாயையினுல் சைதன்யத்தையும் ஜடவஸ்துவையும் பிறிக்க முடியாமல் உலக வியவஹாரம் நடக்கிறது.

768. ப்ரளயகாலம், ஸுஷுப்தி, ஜீவன்முக்தி இம்மூன்றிலும் ஒரே ஸுகந்தான். முன்னிரண்டிலும் வாஸனை கர்மா இரண்டும் ஒழியாததால் மறுபடி துக்காநுபவமுண்டு. பின்னதில் பிறப்பிறப்பில்லை, பேரானந்தமுண்டு.

769. ஸுக துக்கங்களுக்குக் காரணம் என்ன என்று ஜநகர் ஸபையில் வாதம் நடந்தது. மித்ரர் சத்ருக்கள் காரணமில்லை; கர்மாதான் ஹேதுவென யாக்ஞவல்க்யர் சொன்னுர். அக் கர்மா இல்லாமல் க்ஷணம்கூட மனிதனிருப்பதில்லை என கீதாசார்யன் கூறினுர்.

770. மரத்தை வெட்டுவது கோடரி. ஆயினும் அதை எடுத்துத்தூக்கிப் போடுபவன் ஒருவனிருந்தால்தான் கோடரி வெட்டும். பூர்வகர்மாவே பலனை யளிப்பது. ஆயினும் அதை அனுபவிக்க புருஷ ப்ரயத்னம் வேண்டும். நம் முன்னேநின்று அந்தராத்மா நம்மைத் தூண்டுகிருன்.

771. வேரில் ஜலம் விட்டால் கிளை இலை புஷ்பம் காய் கனி ஸந்தோஷமடைவதுபோல் வர்ணுச்ரமாசாரப்படி கர்மாவைச் செய்து பகவதர்ப்பணம் செய்துவிட்டால் எல்லா தேவர்களும் ஸந்தோஷித்து கர்மபலத்தைப் பெறும்படி செய்வர்.

## 66. விவேக சூடாமணி 581.

772. மானிடப்பிறவி கிடைப்பது துர்லபம். அதிலும் புருஷ ஜன்மம் கிடைப்பதரிது. அதிலும் பிராம்மணனுய்ப்

பிறப்பதரிது. அதிலும் வைதிக தர்மமார்க்கத்தைப் பற்றுவ தரிது. அதிலும் வித்வானுயிருத்தலரிது. ஆத்மவிசாரம் ஆத்மானுபவம் முக்தி இவை நூறுகோடி ஜன்மமெடுத்துப் புண்ணியஞ் செய்யாமல் கிட்டாது.

773. மனுஷ்யப் பிறவி, மோக்ஷேச்சை, மஹா புருஷனை அண்டுதல். இம்மூன்றும் தேவானுக்ரஹ காரணமானது. கிடைக்கத்தகாதது. இந்த ஸாதனங்களைப் பெற்றும் முக்திக்கு வழி தேடாதவன் ஆத்மஹத்தி செய்தவனுவான்.

774. சித்தசுத்திக்காக ஏற்பட்டது கர்மா. ஸ்நான தானப்ராணுயாமாதிகளால் வஸ்துவைக் காண முடியாது. ஆதலால் அதிகாரி ஸத்குருவையடுத்தே பிரும்மத்தை விசாரித்து மோக்ஷம் பெறல் வேண்டும். மந்தாதிகாரியானுலும் குரு கிருபையால் ஆத்மவிசாரம் செய்யலாம்.

775. மோக்ஷஸாதனங்களில் பக்திதான் சிறந்தது. ஸ்வரூபானுஸந்தானமே பக்தியாகும். தகப்பனைக் கடனிலிருந்து விடுவிக்கும் பிள்ளைகளுண்டு. பந்தமோசனமென்பது தனக்குத்தானே செய்துகொள்ளத் தக்கதாகும். தலைச் சுமைக் கஷ்டத்தை மற்றொருவன் நீக்கலாம். பசித் துன்பத்தை நாமே புஜித்து அகற்ற வேண்டுமன்றோ ?

776. வீணையின் அழகு, தந்தியின் ரம்யமான நாதம், இவை கேட்பவரை ஸந்தோஷப்படுத்துமேயல்லாது ராஜ்யத்தைக் கொடுக்குமோ ? வித்வான்களது பேசுந்திறமை, வியாக்யான சாதுர்யம் முதலியவை புக்திக்கு ஸாதனமே தவிர முக்திஸாதனமல்ல.

777. வேதாந்த சப்த ஜாலங்களைப் பலமுறை சொல்லியதால்மட்டும் மோக்ஷம் கிட்டாது. ஒருவனைப் பாம்பு கடித்தது; மருந்து, மந்த்ரம் என லக்ஷம் முறை வாயால் சொன்னுலும் அவ்விஷம் நீங்குமா ? அநுபவத்தில் வரும் வேதாந்தமே பயனைத்தரும்.

778. பூமிக்குள் நிதி இருக்கிறது. இதை ஆப்தனுன ஸித்தன் காட்டினுன். மேலுள்ள மண்ணைத் தோண்டி எடுத்தால் நிதி கிடைக்கும். நிதிஎன்பது ஆக்மா. ஸித்தன் என்பவன் குரு. மண்ணை வெட்டுதல் மனன நிதித்யாஸனங்களாம்.

779. மான் சப்தத்தினுலும், யானை ஸ்பர்சத்தாலும், வெட்டுக்கிளி ரூபத்தாலும், மீன் ருசியாலும் வண்டு வாஸனையாலும் பிடிபடுகிறது. இவ்வைந்திலும் ஈடுபடும் மனிதன் மூன்னுக்கு வரவழி எது? விஷய ஆசையை விட்டவனே மோக்ஷத்திற்கு முக்யாதிகாரி

780. ஸத்வகுணம் மத்யமமாயிருப்பவருக்குக் கர்வமில்லாமை யமநியமாதி குணங்களுதிக்கும். ச்ரத்தை பக்தி மோக்ஷேச்சை இது தைவ ஸம்பத்தாகும். சுத்த ஸத்வ குணமுள்ளவனுக்கு த்ருப்தி, ப்ரஹர்ஷம், தெளிந்திருத்தல், பரமசாந்தி, ஆத்மானுபூதி இவை உண்டாகும்.

781. ஸம்ஸாரமென்பதோர் மரம். அதற்கு விதை அஞ்ஞானம். தேஹமே ஆத்மா என்ற எண்ணம் முளை. ஆசையே துளிர். கர்மாவே ஜலம். சரீரம் தண்டு. ப்ராணன் கிளைகள் இந்திரியங்கள் நுனிகள். விஷயங்களே புஷ்பங்கள். துக்கமே பழம். இதை உண்ணும் பக்ஷி ஜீவன்.

782. மனதைத்தவிர மாயை என்பது வேறில்லை. இதேபந்தத்திற்கும் மோக்ஷத்திற்கும் காரணம். ஸ்வப்னத்தில் வெளி ஸாதனங்களொன்றுமில்லாமலே அது தனியாக ஸகல வஸ்துக்களையும் படைக்கிறது. மனமொடுங்கிய தூக்கத்தில் ஒரு வியாபாரமுமில்லை. விவேக வைராக்யமுள்ள மனஸ் முக்திக்கு ஸாதனமாகிறது.

783. ஜகத் உண்மை என்ருல், ஆத்மா அநந்தன், என்பதற்கும், வேதம் ப்ரமாணம் என்பதற்கும், ஈச்வரன் ஸத்யவாக் என்பதற்கும் ஹானிவரும். வந்தாலென்ன வெனில்? லோகோபகாரமாகக் கருணையால் உபதேசிக்கும் பகவானுக்

கும் வேதமாதாவுக்கும் பொய் சொல்லி ஆக வேண்டிய காரியமென்ன ?

784. ஆத்மாவிற்கும் ஜீவனுக்கும் கல்பிதமான உபாதியுள்ளவரைதான் ஆத்மா ஜீவன் என வியவஹாரம்இருக்கும். ராஜ்ய முள்ளவரை ராஜா. ஆயுதமுள்ளவரை சிப்பாய் எனப்படுவர்.

785. லோகவாஸனே தேஹவாஸனே சாஸ்திர வாஸனே முதலியவைகளுள்ளவரை ஞானம் வராது. இம்மூன்றும் முப்பிரி ஏற்றிய இரும்பு சங்கிலி போலாம். ஸம்ஸாரத்திலிருந்து விடுபட விரும்புபவன் முதலிலிதை அறுக்க வேண்டும்,

786. சாச்வதமானதும் நல்ல வாஸனேயுள்ளதுமான ஆத்மவாஸனே, பாஹ்ய ஸம்ஸாராதி வாஸனேயால் மூடப்பட்டு துர்நாற்றம் வீசுகிறது. சந்தனக்கட்டை ஜலத்தில் அழுக்குடன் ஊரி மேலே துர்நாற்றம் வீசுகிறது. அதைத் தேய்க்கத் தேய்க்க நல்லவாஸனே கிளம்பும்.

787. மனம் ஆத்ம ஸ்ரூபத்தை நாடி த்யானம் செய்யச் செய்ய வெளி வாஸனே அகலும. சரீரத்தையும் போஷிக்கிறேன், ஆத்ம விசாரமும் செய்கிறேனென்றால் முதலேயைக் கட்டை என்றெண்ணி ஸமுத்திரத்தைத் தாண்ட ஆசை கொண்டவன் கதிதான் நேறும்.

788. மோக்ஷம் வேண்டினல் அதிக தூக்கத்திற்கும், ஊர்வம்பிற்கும், மறதிக்கும், விஷயங்களுக்கும் இடமளிக்காதே. உடல் தாய் தந்தையின் மலத்தாலுண்டானது. மல மாம்ஸம் நிரைந்தது என்று அதைச் சண்டாளனேப்போல் தூரவிலக்கு. ஆத்மானுஸந்தானம் செய்.

789. ஜீவன் முக்தியைப்பெறவிடாமல் தடுக்கும் ப்ரதிபந்தகங்கள் பலவுள. அதில் முக்யமானதும் முதலானதும் அஹங்காரம். நான் என்ற எண்ணம் ஒழியும்வரை ஞானலவலேசங்கூட உண்டாகாது. முதலில் அதை அகற்ற வேண்டும்.

790. பிரும்மானந்தமென்ற நிதியை மூக்குணமென்ற மூன்று தலையுடன் அஹங்காரமென்ற பாம்பு சூழ்ந்துக் கொண்டிருக்கிறது. விக்ஞானமென்ற கத்தியால் அதை வெட்டி விலையில்லா அந்நிதியைப் பெறு.

791. உடலில் விஷமிருந்தால் எப்படி ஆரோக்ய மிராதோ, அப்படி அஹங்காரமுள்ளவனுக்கு ஞானோதயமா காது. வெட்டினாலும் பட்டாலும் மழை பொழிந்தவுடன் எலுமிச்சை மரம் கிளம்புவதுபோல் எத்தனை முறை கண்டித் தாலும் விஷயங்களைக் கண்டவுடன் அஹங்காரம் கிளம்பி விடும். அதை முன்னே அகற்று.

792 மேலே ஏறுவது கஷ்டம். இறங்குவது மிக ஸுலபம். பெரும்பாடுபட்ட ஞானி பிரும்ம நிஷ்டையி லேயே காலத்தைக் கழிக்கவேண்டும். தவறுதல் என்பதுதான் யமன். தவறிவிட்டால் கெட்டவள் பரபுருஷனைத் தழுவுவது போல் மோஹம் அஹங்காரம் முதலியவைகள் தோன்றி இவ னைப் பாதாளத்திற்குக்கொண்டு வந்துவிடும்.

793. கேட்பதைவிட மனனம்செய்வது நூறு மடங்கு விசேஷம். மனனத்தை விட நிதித்யாஸனம் லக்ஷ மடங்கு விசேஷம். நிதித்யாஸனத்தைவிட நிர்விகல்பக ஸமாதி செய் வது எல்லை இல்லாமற் சிறந்தது. ஆதலால் அடிக்கடி மன னாதிகளை அனுஷ்டிக்க வேண்டும்.

794. யோகத்திற்கு முதல் வாசற்படி மௌனமாம். இரண்டாவது, மனைவி மக்களில்லாமை. மூன்றாவது ஆசை யில்லாமை. நான்காவது ஏகாந்தமாயிருத்தல். ஏகாந்தமாயிருத் தல் என்பது இந்திரியங்களை அடக்க வல்லது.

795. மோக்ஷமென்ற மாடிமீதேற ஜீவனென்னும் பக்ஷி கிளம்புகிறது. ஞானம் வைராக்யம் என்ற இரண்டு இரக் கைகளும் ஸரியாயிருந்தால்தான் பறந்து போகமுடியும்.

796. விஷம் போன்ற விஷயங்களில் ஆசை வைக்காதே. அதே யமலோகத்திற்கு மார்க்கம். கடமை என்று ஸ்வகர்மாக்களை அனுஷ்டித்து பகவதர்ப்பணம் செய். நான் உயர்ந்த ஜாதி, மதம் என்ற கர்வத்தை விடு. தேஹமே நான் என்ற எண்ணத்தை அகற்று. முக்தி உன் கைமீதுளது.

797. ஆத்மா ஒன்றுதான் என ச்ருதியும் அதைத் தழுவி ஸ்மிருதி ஸூத்ர புராணங்களும் கூறுகின்றன. ஸுஷுப்தியில் எல்லாம் ஒய்ந்திருக்க ஆத்மா ஒன்றுதானிருக்கிறது என்பதை அனுபவிக்கிறோம். பழுதையைப் பாம்பாக ப்ரமத்தால் எண்ணுகிறோம். ஞானம் வந்த பின்னர் அது பழுதையே என்றுணர்ந்தோம். இதே போல் ஆத்மாவே உலகாக வந்தது. ஆதலால், ச்ருதி அனுபவ யுக்திகளால் ஆத்மா ஒன்றென அத்வைதமே நிச்சயமாகிறது.

798 தேஹத்திற்கும் நிழலுக்குமிருக்கும் ஸம்பந்தம் ஆத்மாவிற்கும் ஜீவனுக்கும் உளது. ஜீவன் தந்நிலையை நன்கு உணர்ந்தால் உடலைப் பிணமாக நினைப்பான். அதை துச்சமென முடியுமானால் ஏற்கவும் மாட்டான்.

799. கல்வி என்பது யாது ? அஸத்திலிருந்து நம்மை ஸத்திற்குத் திருப்புவது கல்வி. அஸத்தாவது உலக விஷயம். ஞானத்தின் கடைசி எல்லை அஹங்காரமற்றிருப்பதாம். வைராக்யத்தின் முடிவான எல்லை போகவஸ்துவில் வாஸனையே உண்டாகாமலிருத்தலாம்.

800. தன்னை ஸாது பூஜித்தாலும், துஷ்டன் பீடித்தாலும் இரண்டிலும் ஸமபாவமுள்ளவன் ஜீவன்முக்தன். பிறர் தூண்டும் விஷயங்கள், இவனிடம் வந்து ஸமுத்திரத்தில் கலந்த நதிப்ரவாஹம்போல் ஒன்றுகிவிடும். இவனைக் கெடுக்காது.

801. முக்தனுனல் முன் போல் உலகில் அவனுக்கு ஸம்ஸாரப்ரவிருத்தி யிராது. ப்ரவிருத்தி யிருந்தால் அவன்

முக்தனல்ல. எவ்வளவு விடனாயிருந்தாலும் தாயை யாராவது பெண்டாடுவானா? அதேபோல் ஞானி ஸம்ஸாரத்திற்கு திரும்பான். ஸ்வப்னத்தில் செய்த புண்ய பாப கர்மங்களுக்கு ஸ்வர்க்க நரகமில்லாததுபோல் ஒரு ஸமயம் ஏதாவது ஞானி செய்து விட்டால் அவனுக்கு அக்கர்மா பலனை யளிக்காது.

802. பந்தம் மோக்ஷம் த்ருப்தி சிந்தை ஆரோக்யம் பசி முதலியவை தனக்குத்தானே அறியத்தக்கன. பிறர் தெரிந்துகொள்கிறாரெனில் அது அனுமான ஞானமாம். ப்ரத்யக்ஷமல்ல. வேதம் போல் குருவும் தடஸ்தனாயிருந்து சொல்வதை அனுபவிப்பவன் நாம்.

803. பூர்ண ஞானத்தால் பகவத் குரு கிருபையால் ஆத்மஸாக்ஷாத்காரம்செய்த ஓர் ஜீவன், நிஷ்டையிலிருந்து எழுந்தவுடன் தன் குழந்தைப் பருவ விளையாட்டை, வயதான வன் பிறகு நினைத்து எப்படி அதை எண்ணுவானோ அதே போல் "கள் குடத்திலுள்ள ஆகாசத்திற்கு எப்படி கள் நாற்றமில்லையோ ? நிழலே நெருப்பு கொளுத்தினாலும் ஜலம் நனைத்தாலும் சரீரத்திற்கு எப்படி உஷ்ண சீதளாதிகளில் லையோ அதேபோல் உடலுக்கும் ஆத்மாவிற்கும்பற்றில்லை. யான் முன் உடலையே ஆன்மாவாக எண்ணி ஏதேதோ செய்தேன்" என நினைப்பான்.

804. எந்த குருவினருளால் மஹா நித்திரையிலிருந்து எழுந்து உலகமெலாம் எனக்குள்ளடங்கி யானும் ஆனந்தமாய் ஹரியாய் ஹரனாய் எல்லாமாய் இருக்கின்றேனோ அக் குருவை என்றும் மறவேன் என ஸந்தோஷத்தால் ஞானி ஆத்மானுபவத்தைச் சில ஸமயம் குருவினிடம் கூறுவான்.

805. சந்திரன் பிரகாசிக்கும்போது சித்திரத்தில் எழுதிய சந்திரனைப் பார்த்து யாராவது ஸந்தோஷப்படுவாரா ? பரமாத்ம ஸ்ரூபத்தையே ஓயாமல் தியானம் செய். சாந்தனாய் மௌனியாய் பசி தாஹத்தை மறந்து குழந்தைகள் விளை

யாடுவதுபோல் நீ பிரும்மத்தினிடம் ரமித்திரு. தேசம் காலம் திக்கு ஆசாரம் முதலியவைகள் பிரும்ம நிஷ்டைக்குக் கிடையாது. நிற்கும்போதும் உட்காரும்போதும் நடக்கும் போதும் படுக்கும்போதும் ஆத்ம சிந்தனையை விடாதே.

806 பிரும்ம ஞானத்தைத் தவிர ஒருவித சிந்தையும் வேண்டாம். தேஹி என்று கேளாமல் கிடைத்ததைப் புஜி. குளத்தில் ஓடையில் நீர் அருந்து. தங்கு தடையின்றி சுதந்திரமாயிரு. உனக்கு பயமென்பதேது? மயானத்திலோ வ்ருக்ஷத்திலோ படுத்துறங்கு. வெளுத்த காய்ந்த வஸ்த்ரம் வேண்டுமென்று விரும்பாதே. திக்கே வஸ்தரமாயிருக்கட்டும். பூமியே படுக்கை. வேதாந்த மார்க்கத்தில் ஸஞ்சரி. பரப்ரஹ்மத்தினிடம் விளையாடு.

807. குழந்தையைப்போல், பைத்தியம் பிடித்தவனைப் போல், பிசாசு பிடித்தவனைப்போலிருப்பாய். தைவத்தினலல்லது பிராரப்த கர்மத்தினல், ப்ரவாஹத்தில் கட்டை மேடு பள்ளங்களில் கொண்டு போகப்படுவதுபோல் சக்கரம் மேலும் கீழும் போவதுபோல் உனது சரீரம் லோக துக்கங்களுக்கு ஆளாகலாம். சக்ரம் சுத்தினலும் அச்சு சுத்தாதது போல் உன்னத்மா இதிலீடுபடாது ஆனந்தமாகவேயிருக்கும் என்று கூறுவர் குரு.

808 முக்தனது சரீரம் மரத்திலிருந்து உலர்ந்து விழுந்த இலைபோல் எங்கேயாவது விழலாம். அதனல் மரத்திற் கென்ன ஹானி ? உலகத்தவரைப்போல் அதற்கு அக்னி ஸம்ஸ்காரம் இல்லாவிடினும் பாதகமில்லை. ஏற்கனவே சிதக்னியினல் எரிக்கப்பட்டது அது.

809. சரீரத்தைத் தண்டகமண்டலத்தை விடுவதல்ல மோக்ஷம். அவித்யையால் நிறைந்த மனமுடியின் மோக்ஷமே மோக்ஷம். பாலில் பாலும் எண்ணையில் எண்ணையும் ஜலத்தில் ஜலமும் விட்டால் ஏப்படி தனியாக பிரித்தெடுக்க முடியாமல்

ஒன்ருய் விடுகிறதோ அதே போல் ப்ராரப்த தேஹ மொழிந்த பின் ஜீவனும் பிரும்மமும் ஒன்ருகி விடும். இதே விதேஹ கைவல்யம்.

810. அத்தகையவன் மறுபடியும் திரும்பான். அவன் கண்ணுக்கு மாயை பிரபஞ்சம், ஸ்ருஸ்டிஸ்திதிலயம், பந்த மோக்ஷம் ஒன்றுமில்லை. வாக் மனங்களுக்கு எட்டாத ஓர் பேரானந்த நிலையை யடைகிருன்.

## 66. உபதேச ஸாஹஸ்ரீ 116.

(வசனமாயுள்ளது, முதல் பாகம் குரு சிஷ்ய ஸம்வாத ரூபம்.)

811. ஆத்ம ஸ்வரூபத்தை யுணர்ந்து கேவல லோகா னுக்ரஹத்திற்காக நடமாடிவரும் ஸதாசார்யனை, ஸமித்தைக் கையிலேந்தி விதிப்படி சிஷ்யன் சரணமடைய வேண்டும். குருவும் சிஷ்யனது ஜாதி குலம் ஸதாசாரம்குணம் வைராக்ய போஹம் முதலியவைகளை நன்கு பரீக்ஷித்து பிரும்மலக்ஷ ணத்தைக் கூறும் ச்ருதிகளை முதலில் உபதேசிக்கவேண்டும்.

812 சிஷ்யன் எப்படி அதை கிரஹித்தான் என பரீ க்ஷிக்க, நீ யார்? என வினவினுல் நான் இன்ன கோத்ரம், அல்லது இந்த பெயருடைய ஸன்யாஸி என்று சொன்னுல் அழிவுள்ள உடலா நீ? எனக்கேட்டு சரீரம் முதல் ஆநந்தமய கோசம் வரை நீ யல்ல என உபதேசித்து ஞானம் வரும் வரை பல யுக்திகளால் அதைப் போதிக்க வேண்டும். ஸந் தேஹங்களைச் சாந்தமாக நன்கு விளக்கவேண்டும்.

813. சரீரத்தில் நெருப்பு பட்டால் வேதனை உண்டா கிறது. ஆத்மாவிற்கில்லை ஸுக துக்கமெனில்? எப்படி நம்பு வது? எனக்கு வேதனை என்ற விடத்தில் வேதனை யுள்ள தாகச் சொல்லுகிறவன் ஸாக்ஷியே தவிர வேதனைப்படுபவ னில்லை. கண் உலக வஸ்துக்களை காட்டுகிறதே தவிர தன்னைக்

காண்பதில்லை. வேதனை என அறிபவன் ஆத்மா. வேதனைப் படுவது அஹங்காரத்துடன் கூடிய உடல். தலையில் வேதனை காலில் வேதனை என்றே சொல்கிறான். என்னில் வேதனை என்பதில்லை.

814. ஜீவனுக்கு ஸம்ஸாராதி துக்கம் ஸ்வபாவமா? இல்லை. ஏன்? ஸ்வபாவமாயிருந்தால் அது போகாது. ஞானம் வந்தவுடன் துக்கம் போய் விடுகிறது. ஆனால் எப்படி துக்கம் உண்டானது? நைமித்திகமானது? நிமித்தம் எது? அவித்யை.

## 67. உபதேச ஸாஹஸ்ரீ. 675.

(சுலோக ரூபமானது 19 ப்ரகரணமுள்ளது.)

815. பத்து நண்பர்களாக ஓர் ஆற்றைத் தாண்டி கார்யார்த்தமாய் வெளியூர் போனார்கள். கரையேறியவுடன் எல்லோரும் வந்து விட்டார்களா பாருங்கள் என்றார் ஒருவர். ஒவ்வொருவரும் தன்னைவிட்டு ஒன்பது பேரை எண்ணி ஒருவன் ஆற்றில் போய் விட்டான், என துக்கித்தனர். விவேகி ஒருவன் வந்து எண்ணிக் காட்டி நீ தான் பத்தாவது மனிதன் என்றவுடன் ஸந்தோஷப்பட்டனர். இப்படி சோக மோஹமுள்ள நமக்கு குருபதேசத்தால் நிஜஸ்வரூபமே விளங்கி மோக்ஷமாகிறது.

816. ஆத்மா என்பது அக்னி. அக்னி தனியாகக் காணப்படுமா? விறகிலன்றோ காணப்படும். புத்திதான் விறகு. அவித்யை காமம் கர்மா என்ற காற்றினால் விசிறப்பட்டு நமது உடலினுள்ளே ஆத்மாக்னி எரிகிறது. இந்திரியங்கள் என்ற த்வாரத்தால் அதை அறியலாம்.

817. ஸாங்க்ய காணாத பௌத்தம் முதலிய பல பல மதங்கள் வெவ்வேறு வழியைக் காட்டுகின்றன. அவை நல்லது போலவும் தோன்றும். உபநிஷத்தின் ரஹஸ்யார்த்தத்தை

அவைகள் வெளியிடவில்லை. ஆதலால் அதைப் படிக்கலா காது. ஸ்வமதாசார்யன் கூறிய வேத ஸம்மதமான மா ர்க்கத்தையே கைப்பற்றவேண்டும்.

818. தபஸுகளால் மனம் சுத்தமானால்தான் வித் யை ஞானத்தை யளிக்கும். பல தபஸுகள் சொல்லப்பட் டிருந்தாலும் மனமும் இந்திரியங்களும் ஏகாக்ரமாயிருத்தல் தான் உயர்ந்த தபஸ். உயர்ந்த தர்மமும் அதுவே.

819. பாலிலிருந்துதான் நெய் உண்டாகிறது. அந்த நெய் அல்லது வெண்ணெயைப் பால் தயிரல்லது மோருடன் சேர்த்தால் அது சேராமல் தனியாகவே நிற்பதுபோல் உலகத்துடன் பழகும் ஞானி ஞானம் வந்தபின் முன் போல் உலக வியவஹாரத்தி லீடுபடான்.

820. புஷ்பங்களிலிருந்து தேனைப்போலவும் கடலிலி ருந்து அமிருதத்தைப் போலவும் உபநிஷத்துகளிலிருந்து ரஹஸ்யமான விஷயங்களை ஆசார்யாள் நமக்கு எடுத்து விள க்கி வைத்திருக்கின்றனர். ஆதலின் அவரருளிருந்தா லன்றி மோக்ஷம் பெறமுடியாது, அவரை மறக்கவுங்கூடாது.

## 68, விஷ்ணு ஸஹஸ்ரநாம பாஷ்யம்

(பாரதயுத்தம் முடிந்த பிறகு உத்தராயணத்தை எதிர்பார்த்து சரதல்பத்தில்படுத்திருக்கும் பீஷ்மரை தர்மபுத்திரர் நற்கதி பெற ஸுலபமான வழிகேட்க அவர்விஷ்ணு ஸஹஸ்ரநாமத் தை ஜபிக்கச் சொன்னார். அதற்கு ஆசார்ய பாஷ்யம்)

821. கலியில் விஷ்ணுநாமாவைச் சொல்லி ஸித்தி பெறலாம். எக்கர்மாவை விட்டாலும் ஜபத்தைவிடாதே. இதர யுகங்களில் தபஸாலும், யாகத்தாலும், தியானத்தாலும் எந்த பலனை அடைந்தார்களோ, பகவந்நாமாவை, ஜபித்து கலியில் அதைப் பெறலாம். எப்படிக் கூறினாலும், பகவந்நாம யார் எப்படி எதைப்போட்டாலும் அக்னி எரிப்பதுபோல் பாபத்தை யகற்றும்.

822. எங்கும் நிறைந்த பரமாத்மாவின் வடிவமே சிவனும் விஷ்ணுவும். ஓர் ஸமயம் ஓர் கார்யத்தைக்குறித்து ஓர் மூர்த்தி பெரிதாகக் காணப்படலாம். இவர்களுள் பேத புத்தி, தாரதம்யம், த்வேஷம் பாராட்டுபவன் ப்ருண ஹத்தி பாபத்தை அடைவான்.

823. ஸன்யாஸிக்கு முக்யதர்மம் சமம், வாநப்ரஸ்தனுக்கு நியமம், கிருஹஸ்தனுக்கு தானம், பிரும்மசாரிக்கு குரு சுச்ருஷை. விஷ்ணுவைப் பூஜிப்பவன் முதலில் தன்னை விஷ்ணுவாக எண்ணவேண்டும். விஷ்ணு வல்லாதவன் விஷ்ணுவைப் பூஜிக்கலாகாது.

824. வேதமுணர்ந்த வேதியன் உடலில் ஸகல தேவர்களும் வஸிக்கின்றனர். ஆதலின் அவனை நிந்திப்பவன், பூஜிக்காதவன், அடிப்பவன், இவர்கள் என்னைச் சார்ந்தவரில்லை. அவர் பாபி, தண்டிக்கத் தக்கவர் என விஷ்ணு கூறுகிறார்.

825. ப்ருஹ்மம் ஒன்றிருக்கிறது என நம்பிக்கையுடன் அறிந்தவனே ஸாது. அந்த ப்ருஹ்மம் ஜலத்திலும் செடிகொடிகளிலும், ஸாதுக்களிடத்திலும் எங்கும் ஸுலபமாகக் கிடைக்கிறது. அவரைப் பூஜித்தாலோ முக்தியை யளிப்பார். ஏன் இன்னும் ப்ரயத்னம் செய்யாமலிருக்கிறீர்கள்?

826. அவரவர் வர்ண ஆச்ரமங்களுக்குறிய தர்மத்தை அனுஷ்டித்தால் அதே பகவானுக்குச் செய்யும் பூஜையாம். இதில் ஸந்தோஷிக்கிற அளவு மற்றதில் பகவான் ஸந்தோஷிப்பதில்லை. ஆதலால் எந்நிலையிலும் ஸ்வதர்மத்தைக் கைவிடாதே.

827. வேதம் ஸ்மிருதி பதினெட்டு புராணம் பாரதம் ராமாயணம் இவைகளில் ஆதியிலும் இடையிலும் முடிவிலும் பகவானது ஸ்வரூபம் கூறப்பட்டிருக்கிறது. அதிதியாக வருபவன் அவனே. உனக்கு எதுமிகவும் பிரியமான

தோ அதையே அவருக்கு அர்ப்பணம் செய்தால் அக்ஷயமான பலன் கிடைக்கும். குணமில்லாப்பொருளைத் தானம்செய்யாதே.

828. பதினைந்துநாள் உபவாஸமிருந்தால் எவ்வளவு பாபம் போகுமோ, நூறுபிராணாயாமம் செய்தால் அவ்வளவு பாபமகலும். ஆயிரம் பிராணாயாமம் செய்தால் எவ்வளவு பாபம் போகுமோ, அவ்வளவு பாபம் க்ஷணகாலம் பகவத்யானம் செய்தால் போகும். பகவத்யானத்தை மறவாதே.

829. கிருஷ்ணனுக்கு ஓர் நமஸ்காரம் செய்தால் அது பத்து அச்வமேதத்திற்கு ஸமம். கிருஷ்ணன் ஜகத்ப்ரபு. அல்ப அதிகாரிகளுக்கு விழுந்து பக்தியுடன் நமஸ்காரம் செய்து அற்பப் பலனைப் பெற்றாலும் பெறலாம். ஒரு ஸமயமில்லாமலும் போகும். பரமாத்மாவைப் பணிந்தால் பிறப்பிறப்பு நிச்சயமாக அகலும். அவரைவணங்கி பெரும் பயனைப் பெறலாகாதா?

830. தர்மத்தை அநுஷ்டித்தால் ஸௌக்யமும் ஞானமும் உண்டாகும். ஞானத்தால் மோக்ஷமுண்டாகும். தர்மத்திற்கு மூலம் ஆசாரம். தர்மத்திற்கு அதிபதி பரமாத்மா. ஆசாரத்துடன் தர்மத்தைச் செய்து பகவானருளைப் பெறு.

(சிவ விஷ்ணுபேதமற்ற அத்வைதியான ஆசார்யாள் எக்காரணம் பற்றியோ சிவ ஸஹஸ்ரநாமத்தைப் பாஷ்யம் எழுத சிஷ்யனைக் கொண்டுவரச் சொன்னாராம். அது விஷ்ணு ஸஹஸ்ரநாமமாகவே இரண்டுமுறையும் இருந்ததாம். தானே சென்றபொழுது வளைகாப்புள்ள ஓர் கை விஷ்ணு ஸஹஸ்ர நாமத்தையே கொடுத்ததாம். அம்பாளது திருவுள்ளமென இதற்கு பாஷ்யம் எழுதியதாகச் சொல்வதுண்டு)

# 69. ஸர்வவேதாந்த ஸித்தாந்த ஸார ஸங்க்ரஹம் 1006.

831. எப்பொருளில் ஆசை விழுகிறதோ அப்பொருளிலுள்ள தோஷத்தை நன்குயோசித்தால் வைராக்ய முதிக்கும். அழகுள்ள வேசியினிடம் ஆசை உண்டாகும். அவளைத் தொட்டால் போதும், பெரிய வியாதிவரும் என்றால் யார் அவளருகே செல்வான்?

832. மலஜலம் நிரைந்த படுக்கையுள்ள இளமை, பெண்ணாசை யெனும் பேய்பிடித்த யௌவநம், கண்டவர் அவமதிக்கும் கிழத்தனம், தாய்மலம்நிரைந்த கர்ப்பவாஸம், யமதூதர் செய்யும் ஹிம்ஸை நிரைந்த மரணயாதனே, வைதரணியெனும் நெருப்பாறு, கும்பீபாகம் அஸிபத்ர வனம் முதலிய நரக துக்கம், புண்யமானவுடன் ஸ்வர்க்கஞ் சென்றவரும் கீழிறங்கல் முதலியவைகளை நன்கு யோசித்தால் யாருக்குத்தான் வைராக்யந் தோன்றாது?

833. பூலோக ஸுகமோ தேவாதி ஸுகமோ நச்வரமானவை. உள்ளே பற்பல தோஷம் நிரைந்தவை. வெளியில் அத்திப்பழம் போல் ஸ்தூலமாகப் பார்ப்பதற்கு அழகானவை. விவேகி இதை விரும்பமாட்டான். அஞ்ஞான இருள் சூழ்ந்தவனே இதில் ஆசைகொள்வான். ஜலம் சுண்டியும், வளையை விட்டுப்போகமுடியாத நண்டுபோல் ஸம்ஸாரத்தில் துக்கப்படுவான்.

834. ஓர்வகைப்புழு தன்னுடலைக் காக்க நூலைநூற்று நூற்றுத் தன்னுடலைச் சுற்றிக்கொள்ளும். பின்எழுந்துவெளி வரமுடியாமல் இறக்கும். அதேபோல் நம்முடலின் ஸுகத்திற்காக வீடு, வயல், மனைவி, மக்களைத் தேடுகிறோம், பின்னர் அவர்களுக்கு உழைக்கவே காலம்போதவில்லை. தன்னை எப்படி பந்தத்திலிருந்து விடுவிக்கமுடியும்?

835. வீட்டாசை கால் விலங்கு. பெண்ணாசை கழுத்தில் கட்டப்படும் பாசம். காமக்ரோதாதிகள் காவற்காரர். ஸம்மோஹமென்பது காராக்ருஹம். இதிலிருந்து விடுபடுவது கஷ்டம்.

836. சொள்ளைப் பெருக்கும் முகம், சளியுள்ள மூக்கு, கண்ணீருள்ள கண்கள், வேர்வைநாற்றம் நிரைந்த உடல், மூத்ரக்குழி, சதைவீக்கம் முதலியவைகளைப்பற்றி சொல்லவும் நினைக்கவும் யோக்யமல்ல. அப்படிப்பட்ட பெண்ணுருவை விவேகி தன் கண்ணிலும் காண ஸஹிக்கமாட்டான்.

837. விளக்குப்பூச்சி அக்னியைப் பார்த்து அழகென்று அதில் விழுந்திறப்பதுபோல் காமன் எனும் யமனும் பெண்ணெனும் வைதரணியுமுள்ள வீடு எனும் நாகத்தி லீடுபட்டிருப்பான் அவிவேகி. யமன் ஸாதுக்களை ஹிம்ஸிக்கமாட்டான். காமன் பிரியம்செய்வதுபோல் ஸாதுக்களையே கஷ்டப்படுத்துவான். மனதை அடக்க முடியாதவரைப்பற்றிக் கேட்கவும் வேண்டுமோ?

838. நமக்குள்ளேயே இருந்துகொண்டு சிறிப்பு சேஷ்டை பாவவிசேஷம் முதலிய பாசங்களால் ஆண்களையும் பெண்களையும் கட்டி ப்ரேமை எனும் மோஹத்தால் மயக்கி பிரபஞ்சத்தை வளர்ப்பவன் காமனெனும்ப்ருஹ்மஹத்திக்காரன். பரம சத்ரு இவன். இவனை ஜயித்தால் வேரெவரும் லக்ஷ்யமில்லை.

839. கேட்டதும் பார்த்ததுமான போக்யவஸ்துவினிடம், அதன் தோஷத்தை விரிவாக விசாரித்து அதைப்பற்றி ஸங்கல்பம் செய்யாமலிருந்தால், ஸங்கல்ப விதையிலிருந்து கிளம்பும் காமமுளை முளையாது. மணியைக் கல்லென்றெண்ணினால் அதில் ஸங்கல்பமும் ஆசையுமுண்டாகுமா?

840. தனத்தை, அரசன் திருடன் ஜ்ஞாதி முதலியவர்கள்கொண்டுபோவரோ என பயம். பலவகைப்பந்தத்தை விளை

விக்கும் கிருபண புத்தியை உண்டுபண்ணும். முக்திக்கோ மனச் சுத்திக்கோ பயன்படாதது இது. ஸாதுக்களுக்குத் துன்பத்தையே விளைவிக்கும். ஆதலின் தனத்தில் அதிக ஆசை வைக்காதே.

841. பணம் இல்லையே யென்று துக்கம் வந்துவிட்டால் லோபத்தினால் துக்கம். அதை அனுபவித்தால் மதமுண்டாகிறது. தானம் செய்தாலும் அதை அனுபவிக்க மறுபிறப்பைக் கொடுக்கிறது. கண்ணை மறைக்கிறது. துர் மார்க்கத்தில நடத்திச் செல்கிறது. இத்தனத்தினா லுண்டாடாகும் மதரோய்க்கு தாரித்ரயம் என்பதே ஸித்தாஞ்ஜனம்

842. பிறர்பொருள் நம்மைச் சாராதா என்ற எண்ணமும் நல்ல விஷயத்தில் செலவுசெய்ய மனமில்லாமையும் தனிகனுக் குண்டாகிறது. தனமிருப்பதால் வெகு சீக்ரத்தில் கோபமுண்டாகிறது. டம்பார்த்தமாக வீண்செலவு செய்வான். மதமாத்ஸர்யமுண்டாகும். அளவிற்கு மிஞ்சி தனந் தேடாதே.

843. பணமிருந்தால் ஸ்வஸ்தனாயிருக்கலாமென அறியார்தார் சொல்வர். பாம்பைப் படுக்கையில் வைத்திருப்பவன் எப்படியோ அப்படியே தனிகனது நிலை. தரித்ரனே விசாரமில்லாமல் ஸ்வஸ்தமாகக் காடோ வீடோ படுத்துறங்குவான். தனிகன் யாசகரைக் கண்டால், ஏன்? பெற்றெடுத்த புத்ரனைக் கண்டும் அஞ்சுவான். பணத்தில் பற்று வைக்காதே.

844. ச்ரத்தையும் பக்தியும் நற்குணமும் கற்புமுள்ள மனைவி, படித்த வணக்கமுள்ள புத்ரர்கள், அஷ்ட லக்ஷ்மியும் நிறைந்த வீடு, இவ்வளவும் நச்வரம், பந்தத்தை யளிப்பதென ச்ருதி யுக்திகளால் விசாரித்து விவேகிகள் வெளி சென்றனர். அவிவேகி எனது என அதில் உழலுவான்.

845. ஸத்கர்மாக்களைச் செய்து பாபத்தைக் குறைத்துக்கொண்டவர், ஸாதுக்களிடம் சென்று பல நல்ல விஷயங்

களைக் கேட்டவர், யுக்தியினால் நித்யாநித்ய வஸ்து விசாரம் செய்வோர், வைராக்யமெனும் கத்தியால் பெண்ணாசை முதலிய பாசங்களை அறுத்து மோக்ஷ மார்க்கம் செல்வோர் பாக்யவான்கள்.

846. ஸம்ஸாரமெனும் யம பட்டணத்திற்கு பெரிய வாசற்படி மூன்று. பெண், பொன், நாக்கு என்றவை. இவைகளை ஜயித்தவர் யமனைக் கண்டும் அஞ்ச வேண்டாம். விவேகமெனும் குதிரைமீதேறி வைராக்யமெனும் கத்தியை ஏந்தி திதிக்ஷை எனும் கவசந் தாங்கியவனுக்குச் சத்ரு கிடையாது.

847. உத்தம மத்யம மந்தமென மூவகையானது மனச்சாந்தி. தான் என்பதை மறந்து கேவல ப்ருஹ்மாகாரமாகநிற்பது உத்தம சாந்தி. சுத்தஸத்வத்துடன் நான் ப்ரத்யகாத்மா என நினைப்பது மத்யமம். ஸத்வக் கலப்புடன் விஷய வாஸனைகளை விட்டு ச்ரவணத்திலே ஏகாக்ரமாயிருத்தல் மந்த சாந்தி.

848. தீவ்ர வைராக்யமும் சமாதிகளு மில்லாதவர், தேவதாராதன மில்லாதவர், குருவினருளில்லாதவர், மனதை அடக்காதவர் இவர்களுக்கு மனச்சாந்தி ஒருபோதும் உண்டாகாது. இவைகளைத் தேடு.

849. ப்ருஹ்மசர்யம், அஹிம்ஸை, பூததயை, குடிலமில்லாமை, விஷயாசையை வெறுத்தல், சௌசம், தம்பமில்லாமை, ஸத்யம், மமதை யில்லாமை, ஸ்திரம், அபிமானமில்லாமை, ஈச்வர த்யானம், பிரும்மவித்துக்களின் ஸஹவாஸம், ஞான சாஸ்திரத்தில் ஆசை, சுக துக்கங்களில் ஸமதை, கௌரவத்தை விரும்பாமை, ஏகாந்த வாஸம், மோக்ஷேச்சை இவை மனந்தெளிய மருந்துகள்.

850. பெண்களோடு போகமில்லாமை மாத்ரம் பிரும்மசர்யமல்ல. அவர்களை நினைத்தல், பார்த்தல், அவர்களது குண கர்மாக்களைச் சொல்லுதல், நன்றாயிருக்கிறாளென்றெண்ணல்,

ஆசைப்பேச்சு, ஸஹவாஸம், மேலே படுதல் என்ற எட்டும் போகமே. ப்ருஹ்மசாரி இவைகளையும் விடவேண்டும்.

851. தியானம் பூஜை இவைகளை பலர் பார்க்கும்போது ஆடம்பரமாகச் செய்து பாரமார்த்திகமில்லாவிடில் அதற்கு தம்பாசாரமெனப் பெயர். இதன்பயனை இவன் அடையாததுடன் கர்மா முதலிய சத்ருக்களுக்கு பலந்தேடியவனாவன். டம்பத்தை விடு.

852. காற்றடிக்குமிடத்தில் தீ போவதுபோல இந்திரியங்கள் போகுமிடத்தில் மனம் தானே ஓடும். இந்திரியங்களை அடைத்து விட்டால் மனம் ஸத்வகுணத்தில் ஈடுபடும். ப்ராணாயாமத்தால் சஞ்சலமற்றிருக்கும். மனதை அடக்கு.

853. திதிக்ஷைக்கு ஸமமான ரக்ஷை ஞானிக்கு வேறு கிடையாது. வஜ்ராயுதங்கூட பொறுமையினிடம் தோற்று ஓடும். இதனால் அணிமாதி ஸித்திகளையும் பெறலாம். சரீரத்திலுண்டாகும் ரோகத்தைப் பொறுத்துக்கொள்ளாமல் சிகித்ஸை செய்துக்கொள்ளும் ஸன்யாஸி, ச்ரவணாதி தர்மத்தை விட்டுவிட நேரும். கர்மாவையும் செய்யமுடியாமல் ப்ரஷ்டனாகிறான்.

854. உலக இன்பத்தில் ஆசையிருந்தால் கிருஹஸ்தாச்ரமத்தை அடைந்து வேதம் சொல்லிய கர்மாக்களைச் செய். தீவ்ரமான மோக்ஷ ஆசையிருந்தால் சாஸ்திர விதிப்படி கர்மாக்களுக்கும் அக்னிக்கும் ஸமாதானம் செய்து க்ரமமாக ஸன்யாஸம் செய்துக்கொண்டு ஸத்குருவை அடைந்து ச்ரவணம் செய். ஸன்யாஸியே முக்யாதிகாரி. க்ருஹஸ்தனும் ச்ரவணம் செய்யலாம். இது இவனுக்குப் புண்யத்தை யளிக்கும்.

855. ச்ரவணத்திற்கு அங்கமாக இருப்பது ஸன்யாஸம். தீவ்ர வைராக்யமில்லாதவன் ஸன்யாஸம் செய்துக்கொண்டால் தகாதவனுக்கு யாகாதிகள் செய்து வைத்தவன்போல்

பயனை யடையாமல் பதிதனாவான். ச்ரத்தையுடன் குரு பக்தியுடன் ச்ரவணம் செய்யும் ஸன்யாஸி முக்தி பெறுவான். தேவர் வேதம் குரு மந்த்ரம் தீர்த்தம் மருந்து மஹாத்மா இவர்களிடத்தில் எவ்வளவு ச்ரத்தை இருக்கிறதோ அவ்வளவுதான் பலன் கிடைக்கும். ச்ரத்தையைக் கைக்கொள்.

856. தீவ்ர வைராக்யமும் மோக்ஷேச்சையுமிருந்தால் ஸமாதான முண்டாகும். ப்ருஹ்மசர்யம் முதலியன ச்ரவணத்திற்கு பாஹ்யாங்கம். சமாதிகள் அந்தரங்க அங்கம். அந்தரங்காங்கமில்லாமல் கோடிமுறை ச்ரவணம் செய்தாலும் பயனில்லை. முமுக்ஷுதான் எல்லாவற்றிற்கும் மூல காரணம். ஆசையும் ப்ரவிருத்தியுமில்லாதவனிடம் மோக்ஷம் தானே வந்து நிற்குமா?

857. தாபத்ரயத்தையும் மற்ற துக்கத்தையுங் கண்டு மனமுறுகி ஐயோ இந்த தாபம் எப்போது நீங்கும்? மனைவி மக்கள் துக்க வடிவமன்றோ? என்று அவர்களை விட்டு குருவைத்தேடி நிற்பது தீவ்ர முமுக்ஷு. தாபத்ரய துக்கத்தை நீக்க எண்ணி, பிரியமான மனைவி மக்களை விட முடியாமல் இடையில் தவிக்கும் நிலை மத்ய முமுக்ஷு. எல்லா போகங்களையு மனுபவித்து பின்பு மோக்ஷத்தை அடைய யத்தனிக்கிறேனென்பது மந்த முமுக்ஷு.

858. மோக்ஷம் தானாகவே கிடைத்துவிடாதா? என்பது அதிமந்தமுமுக்ஷு. அனேகாயிரம் ஜன்மாவில் ஈச்வரனைப் பூஜித்தாலன்றி பாபமகலுவதில்லை. பாபம் போனாலன்றி மோக்ஷேச்சை வருவதில்லை. விஷயமறியாமல் பாத்ரத்தைக் கையிலெடுத்தான் ஒருவன். அந்தப் பாத்ரம் அக்னியால் அதிக சூடானது. அதை எப்படி சீக்கிரமாய்க் கீழே போடுவானோ அதேபோல் தீவ்ரமுமுக்ஷு வீட்டைவிட்டு ஓடி அதே ஜன்மாவில் மோக்ஷமடைவான். மத்யமன் அடுத்த பிறவியில். அதமன் யுகாந்தரத்தில் மோக்ஷம் பெறுவான்.

859. நாய் பன்றி கழுதைகூட சாப்பிடுகிறது, சந்தோஷிக்கிறது, குழந்தைகளைப் பெறுகிறது. மோக்ஷமார்க்கத்தைத் தேடாவிடில் உனக்கும் அதற்கும் என்னபேதம்? ரோகம் கிழத்தனம் புத்திப்ரம்சம் யமன் இவைகள் வருவதற்குள் ஜன்மாவை அதிலும் கிடைக்கத்தகாத த்விஜ, புருஷ ஜன்மாவை வீணுக்காமல் வேதாந்த விசாரம் செய்.

860. பிராமணன் பிறக்கும்பொழுதே தேவ ரிஷி பித்ருக்கடன்களுடன் பிறந்ததாகவும் அதைநீக்கியபின்பே மோக்ஷேச்சைகொள்ளவேண்டுமென வேதம் சொல்கிறது. யாகம் செய்து தேவர் கடனையும், வேதாத்யயனம் செய்து ரிஷிகடனையும் ஸத்புத்ரனைப் பெற்று பித்ருகடனையும் நீக்கவேண்டும். இவைகளை நீக்கியவரும் தந்தையல்லது தான்பட்ட மனுஷ்ய கடனை நீக்குபவரும் பலருண்டு. பவபந்தத்திலிருந்து நீங்கியவர் துர்லபம்.

861. ஸம்ஸாரத்தை ஜயிக்கத் தனி அவயவம் வேண்டும். விவேகமே தலை, வைராக்யமே சரீரம், சமாதிகள் அங்கங்கள், மோக்ஷேச்சையே ப்ராணன், இதுடன்கூடிய சூரன் நல்ல ஞானமெனும் கத்தியால் யமனைக் கொல்லலாம்; ஸாம்ராஜ்யம் பெறலாம்.

862. அஞ்ஞானமெனும் இருள் பிரும்மத்தை மாத்ரம் மறைக்கவில்லை, துக்கத்தைச் சுகமாகவும் மாற்றிக் காட்டுகிறது. பிறப்பிறப்பு வியாதி புத்ரமித்ர களத்ரம் இவைகள் ஸம்ஸாரக் கடலிலுள்ள முதலைகளன்றோ? கர்மபலமெனும் அலையால் மேலுங் கீழுமிழுக்கப்பட்டு படுந்துன்பம் அளவற்றது. கரை ஏற்ற குருவே சரணம், ஸம்ஸாரத்தை ஸுகமாகக் காட்டுவது மாயை.

863. பரத்ரவ்ய ஆசை பரத்ரோஹம் பரநிந்தை பரஸ்த்ரீ கமனம் இவைகளை விட்டவர், தன்னைப்போல் மற்றவரை நினைப்பவன்; குருபக்தன், ஈச்வர பக்தன், சிஷ்டான்ன

த்தைப் புஜிப்பவன் ஸாதுக்களை ஸேவிப்பவன், தீர்த்தாடனம் ஸ்வதர்ம மிவைகளைச் செய்பவன் இவர்கள் மனமே சுத்தமாகத் தெளிந்திருக்கும். இவைகளைக் கைவிடாதே.

864, ஏகாந்தத்தில் வஸிப்பவன், மிதமாயும் ஹிதமாயும் புஜிப்பவன், மிதமாகத் தூங்குபவன், அதிக காரம் புளி உப்பு பழையது நாற்றமுள்ளது இவைகளை விட்டவனுக்கே ஸத்வகுண முதிக்கும், மனம் நிர்மலமாயும் சீதளமாயு மிருக்கும், முக்தி கைமேல் கிடைக்கும். இவைகளைக்கடைப் பிடி.

865. கர்ப்பப்பையிலிருந்து பிறக்கும் மனிதர் முதலியவை ஜராயுஜம். முட்டையிலிருந்து உண்டாகும் பக்ஷிமுதலியவை அண்டஜம், வேர்வையிலிருந் துண்டாகும் பேன் முதலியவை ஸ்வேதஜம், பூமியைப் பிளந்துண்டாகும் செடி கொடி முதலியவை உத்பிஜம். எல்லா ப்ராணிகளுக்கும் பிருதிவி அப்பு தேஜஸ் வாயு என நால்வகை பூதங்கள் ஆஹாரமாகும். பாம்பு முதலியவை காற்றையும் சில ப்ராணிகள் சந்த்ர ஸூர்ய தேஜஸ்ஸையும் மத்ஸ்யாதிகள் ஜலத்தையும் நாக்குப்பூச்சி முதலியவை மண்ணையும் ப்ரகாராந்தரமான நாலையும் நம்போன்ற சில ப்ராணிகள் பக்ஷிக்கின்றன.

866. பழுதையில் பாம்பென்ற எண்ணம் அத்யாரோபம் அல்லது அத்யாஸமெனப்படும். இங்ஙனம் எதிரில் கண்ட வஸ்துவினிடமே அத்யாஸமிருக்க ப்ரத்யக்ஷமல்லாத பிரும்மத்தினிடம் ஜகத் அத்யஸ்தமென்பது எப்படி பொருந்தும்? பிரும்மம் எல்லோருக்கும் நான் என ப்ரத்யக்ஷமே. அன்றியும் எதிரில் காணும் வஸ்துவில்தான் அத்யாஸமென நியமமில்லை. ஆகாசம் கருப்பு என்ற அத்யாஸத்தில் ஆகாசத்தைக் கண்டவன் யார்?

867. ஈச்வர ப்ரஸாதமில்லாதவர் குரு கிருபையற்றவர் ச்ருத்யர்த்தத்தை உணராதவர் தங்களைப் பண்டிதராக நினைப்பவர் தன் புத்ரனே ஆத்மா எனக் கூறுகின்றனர்.

ஆத்மா ப்ரியவஸ்து, பிள்ளையும் பிரியமானவன், ஆத்மாவே பிள்ளை என ச்ருதி கூறுகிறது, என்று கூறுகின்றனர். இதர களத்ர க்ஷேத்ராதிகளில் ஆசையிருப்பதாலும் வீட்டில் நெருப்பு பிடித்துக் கொண்டால் பிள்ளை முதலியவைகளை விட்டுத் தன்னைக்காக்க வெளியில் ஓடுவதாலும், பிள்ளை ஆத்மா இல்லை என்று அந்த மதத்தைக் கண்டித்து தன்னுடலே ஆத்மா என்கின்றனர் சார்வாகர்.

868. இந்திரியாதிகள் இல்லாவிடில் எழுந்திருக்கவும் பார்க்கவும் கேட்கவும் முடியாமல் கட்டையாகக் கிடக்கும் இவ்வுடலல்ல ஆத்மா. இந்திரியங்களே ஆத்மா என்பது சிலர் மதம். அதைக் கண்டித்து கோடரியைப்போல் வேறொருவர் தூண்டுதலால் இந்திரியங்கள் தன் வேலையைச் செய்கின்றன இவைகளைத் தூண்டும் ப்ராணனே ஆத்மா என்பர் சிலர்.

869. இவர்களைக் கண்டித்து சிலர் ஜடவாயுவான பிராணன்எப்படி ஆத்மா ஆவான். மனதிலிருந்துதான் ஸகல ஞானமும் உதிக்கின்றன. ஆதலால் மனமே ஆத்மா என்பர். இவரைக் கண்டித்து விஞ்ஞானமே ஆத்மா என புத்தாஸித்தாந்தம். ப்ராபாகரனும் தார்க்கிகனும் இதைப் புத்தி ஜடமாதலால் க்ஷணிகமானதால் இதல்ல ஆத்மா அஞ்ஞானத்தில் புத்தி வரை லயமாவதால் அஞ்ஞானமே ஆத்மா என்கின்றனர்.

870. அம்மதத்தைக் கண்டித்து ஞான அஞ்ஞானமய ஆத்மா என்று சொல்கின்றனர் சிலர். இவரைக் கண்டித்து சூன்யந்தான் ஆத்மா என சிலர் கூறுகின்றனர். ஏதாவது ஒரு ச்ருதி யுக்தி ப்ரமாணங் காட்டுவரிவர். இதெல்லாம் ச்ருதி ஸம்மதமானதல்ல. இதை மோக்ஷம் விரும்புவோர் ஆச்ரயிக்கலாகாது.

871. ப்ரளயகாலத்தில் எல்லாமழிந்த பிறகு பிரும்மமோ வடிவமில்லாதது என்று கூறுவதால் சூன்யமாகத்தான் காணப்படுகிறது. சூன்யத்திலிருந்து உலகம் உண்டாயிற்றெனக் கூறுவதில் பிசகென்ன ? மனுஷ்யனுக்குக் கொம்பில்லை ஆகாசத்தில் புஷ்பமில்லை என்ற இந்த சூன்யத்திலிருந்து எந்த வஸ்து உண்டானது ? ப்ரளய காலத்தில் அவ்யக்தத்தில், ஆலம் விதையில் ஆலமரமிருப்பதுபோல் ஜகத் இருந்தது. அதிலிருந்து பின்னுண்டானது.

872. எல்லாவற்றையும் தஹிப்பது அக்னி. அக்னியைத் தஹிக்க வேறொன்றுண்டோ ? அதேபோல் எல்லாவற்றையும் அறிவது ஆத்மா. ஆத்மாவை அறிய வேறொரு வஸ்து இல்லை. தூங்கினேன் என்பது ஸ்மிருதி. அனுபவியாததை ஸ்மரிக்க முடியாது. தூக்கத்தை அனுபவித்தவன் ஆத்மா என்று நாமே அறியலாம்.

873. ஸுகஹேதுவான ஸ்திரீசந்தனம் புஷ்பம் முதலிய மற்ற வஸ்துக்களுக்கு ஓர் காலம் தேசம் ப்ரமாணம் என்ற எல்லை உண்டு. எல்லையில்லாமல் எந்த காலத்திலும் எந்த அவஸ்தையிலும் எல்லோராலும் விரும்பப்படுவது ஆத்மா. நூறு வயதானாலும் எவரும் சாக விரும்புவதில்லை. ஸுகமே அதன் வடிவம். எல்லாவஸ்துவையும் விட அதையே விரும்புகிறோம். அதற்காகவே எல்லா வேலையும் செய்கிறோம்.

874. ஆத்மா ஆனந்த வடிவமாயின் அதற்காக ஏன் பாஹ்ய ஸுகங்களை விட்டு ப்ரவிருத்திக்க வேண்டும் ? தானே ஆனந்தம் வராதோ ? ஆத்மா ஸுகமென்பதை நன்றாக நாம் அறியவில்லை. நிதி வீட்டில் புதைந்திருப்பதைக்காணாதவரை பிக்ஷை எடுக்கிறான். ஸித்தனுபதேசத்தால் வெட்டி எடுப்பதுபோல், குரு உபதேசத்தால் நன்கறியவேண்டும். துக்கமான சரீரத்தை நானென்பது விஷத்தைக் குடித்து அமிருதத்தை விரும்புவது போலாகும்.

875. ருசியான ஓர் மாங்கனியைப் புஜித்தோம். அதனால் ஓரின்பம் உண்டாகிறது. இன்பம் பழத்திலுளதா ? நம் நாவிலா ? மனதிலா ? ஆத்மாவினிடமா ? பழம் தனியாக இருக்கும்போது இன்பமில்லை ஆதலால் அதிலில்லை. தனி நாக்கும் மனதும் பழத்தின் ருசியால்வரும் இன்பத்தை அனுபவிப்பதில்லை. ஆதலின் அவைகளிலுமில்லை. இம் மூன்றும் சேர்ந்து ஆனந்தமெனில் மூர்ச்சையில் அல்லது ஓர் துக்கத்தில் இவை இன்பமளிப்பதில்லை. பின் ? சித்தத்தில் பிரதிபலித்த சித்தே இன்பமயமானது. கர்மாவிற்கேற்றபடி இன்ப துன்பம் வருகிறது.

876. அரசன் ஸபைக்குச் சென்றால் மந்திரிக்கு ஓர் வகை மரியாதை. அவன் கீழ் வேலை செய்பவன், ஸாமான்ய உத்யோகஸ்தன், பண்டிதன், யாசகன், குடியானவன், இதர தேச தூதன், இதர அரசன் இவர்களுக்கு எப்படி படிப்படியாக மரியாதையில் தாரதம்யமுண்டோ ? அப்படியே பிரும்மாதி லோகம் செல்வோருக்கும் ஸுகதாரதம்ய முண்டு. அதைக்கண்டு துக்கம் பொறாமை உண்டாகும். ஆதலால் விஷயஸுகமனைத்தும் துச்சம்.

877. எண்ணெயைக் கீழேவிட்டால் அது எப்படி தனித்தனி சொட்டாகவிழாமல் ஒரே தாரையாகவிழுகிறதோ அதேபோல் மனதில் அகண்டாகார விருத்தி ஸதா தோன்றி நிற்பதே ஸமாதி. மரயானை என்பதுபோல் நான் பிரும்மம் என்று நினைப்பது ஸவிகல்ப ஸமாதி. நான் என்பது மறந்து கேவல பிரும்மாகாரமாயிருப்பது நிர்விகல்ப ஸமாதி.

878 மோக்ஷ ஸாதனமான ஞானம் வேண்டுமென விரும்புவோர் சித்த சுத்திக்காகக் கட்டாயம் கர்மாவைச் செய்ய வேண்டும். ஞானப்யாஸம் செய்கிறவன் கர்மா முதலிய ஸகல கார்யங்களையும்விட்டு விட வேண்டும். மரம் ஏறுகிறவன் இதர வேலையைக் கவனித்தால் விழுந்து விடுவானன்

'ரே? ஞானிக்கு உலகே இல்லை ஆதலின் கர்மாவைப் பற்றி பேச்சேது?

879. சுபேச்சா-விசாரணை-தநுமானஸீ-ஸத்வாபத்தி-அஸம்ஸக்தி-பதார்த்தாபாவனை-தூர்யகா என ஞான பூமி ஏழுவகை. 1. மூடனாயிருக்கிறேனே, நல்ல சாஸ்திரோபதேசம் பெற வேண்டாமா? ஸாதுக்களை ஆச்ரயிக்க வேண்டாமா? என வைராக்யத்துடன் நல்விஷயத்திலாசை சுபேச்சா எனும் முதற்படி. 2. வைராக்யம் சாஸ்திரோபதேசம், ஸாது ஸங்கம், இவற்றுடன் ஸதாசார ப்ரவிருத்தி உண்டாவது விசாரணை என்பதாம். 3. முதலிரண்டுடன் இந்திரியார்த்தங்களில் பற்றில்லாமையால் அவை ஒடுங்குவதும் தநுமானஸீ. 4. கீழ் மூன்றால் மனது சுத்தமாகி ஸத்வம் நிறைவதால் ஸத்வாபத்தி உண்டாம். 5. முன் நான்கினாலும் தயை உண்டாகி உலகப் பொருளில் ஆசையில்லாமை எனும் அஸம்ஸக்தி உண்டாகும். 6. ஸகல பதார்த்தங்களுமழிந்து ஆத்மா மாத்திரம் தோன்றும் பதார்த்தாபாவனை என்ற நிலை வரும். 7. இவைகளை நன்கு அப்யஸித்தால் ஆத்ம ஸ்வரூபமே நிற்கும். இந்த நிலை தூர்யகா எனப்படும்.

880. 1. கண்ணில் படும் பொருள்களில் இது என்னுடையது என்ற எண்ணமில்லாமை விழிப்பில் விழிப்பு. ஸச்சிதானந்தனை என்னிடம் உலகெலாம் நாமரூபமற்றிருக்கின்றதென நினைத்தல் விழிப்பில் ஸ்வப்னம். ஆனந்தமயமான என்னைவிட வேறு பொருளில்லை என்பது விழிப்பில் தூக்கமாம்.

2. மூல அஞ்ஞானமொழிந்த பிறகு எனக்கு பந்தமே இல்லை என்பது ஸ்வப்னஜாக்ரத். காரண அஞ்ஞானமொழிந்ததால் த்ருஷ்டா த்ருசயம் தர்சனமென்பதொழிதல் ஸ்வப்னஸ்வப்னம். நன்கு விமர்சம்செய்து தன் புத்தி ஆத்ம ஸ்வரூபத்தில் லயமாவது ஸ்வப்ன ஸுஷுப்தியாம்.

3. சின்மயாகாரமான விருத்தியாலுண்டாகும் ஆனந்தானுபவம் ஸுப்தி ஜாக்ரத். பிரும்ம விருத்தியில் ஸமதையை யடைதல் ஸுப்தி ஸ்வப்னம். எல்லாமொழிந்து ஆத்மா ஸ்வரூபத்துடன் ஐக்யமாவது ஸுப்தி ஸுப்தி.

881. ஸத்வாபத்தி எனும் நாலாவது படி ஏறினவனுக்கு உலகம் ஸ்வப்னம்போல் தோன்றும். அஸம்ஸக்தி எனும் ஐந்தாம்படி சென்றோர் உலக விசேஷமனைத்துமொழிந்து அத்விதீய பிரும்மத்திலே தூங்குபவர் போலிருப்பர். அடுத்தபடி சென்றோர் அயர்ந்து தூங்குபவர்போல் பிறர் கார்யத்தை அறியார். துர்யாவஸ்தைக்கு மேலான விதேஹ முக்தி துரியாதீதமாம்.

882. ஜீவன்முக்தனது பிராரப்ததேஹ மொழிந்தபிறகு விதேஹமுக்தியாம். இதைச்சூன்யம், பிரம்மம், விக்ஞானம், மலம், புருஷன், ஈச்வரன், சிவன், காலம், என முறையே சூன்யவாதி, வேதாந்தி, விக்ஞானவாதி, மலவாதி, ஸாங்க்யன், யோகி, சைவன், காலவாதி என்பவர் கூறுவர். யார் என்னசொன்னாலும் அது பேரானந்தமெனும் ஒரே வஸ்து.

## 70 ஸநத்ஸுஜாதீய பாஷ்யம்.

### 4 அத்யாயம் 111

(மஹாபாரதத்தில் விதுரர் திருதராஷ்டிரனுக்கு சில வேதாந்த விஷயம் கூறி இதற்குமேல் சூத்ரஜாதியில் பிறந்த யான் சொல்லாகாது, என்று யோக மஹிமையால் பிரம்மாவின் மானஸிக புத்ரரான ஸநத்ஸுஜாதரை யழைத்து உபதேசித்த நூல். இதற்கு ஸ்ரீ பகவத்பாதாள் பாஷ்யம்.)

883. பிரும்ம வித்யையைத் தகுந்த குரு தக்க சிஷ்யனுக்கு உபதேசிக்க வேண்டும். ஸத்குருவும் தகாத சிஷ்யனுக்கு உபதேசிக்கலாகாது. ஸச் சிஷ்யனும், தகாத குருவினிடம் உபதேசம் பெறலாகாது. ஞானம் வந்து ஜீவன் முக்த

னைபிறகு அவனைப் பற்றியமட்டும் வர்ணாச்ரம தர்மவிய வஸ்தை இல்லை. மற்றவர் ஸம்ப்ரதாயத்தைக் கைவிடலாகாது.

884. நூறாண்டு இந்திரனும் விரோசனனும் பிரும்மா வினிடம் ம்ருத்யுவை ஜயிக்க பிரும்மசர்யமிருந்ததால் மிருத்யு இருப்பதாகவும் ஸநத்ஸுஜாதர் இல்லை எனக்கூறியதாகக் கேட்டு இல்லையோ என்றும் தன் ஸந்தேஹத்தை விளக்கும் படி திருதராஷ்டிரர் ஸநத்ஸுஜாதரையே கேட்டார்.

885. யமனைக் கர்மாவினால் ஜயிக்கலாமென்பர் சிலர். மிருத்யுவே இல்லை என்பர் சிலர். மோஹமே மிருத்யு என்பர் சிலர். பிரும்மத்தினிடமிருந்து நாம் ஜீவனை நழுவிவந்தோமே இதே யமன் என்பது என்மதமென்றார் அவர்.

886. பிராணனையே உடலுடன் ஆத்மா என்றெண்ணி அதிலீடுபடுவோர் அஸுரர். அத்யாத்ம விஷயத்தை அவ லம்பிப்போர் தேவர். ஸூர்யனது பிள்ளையாய் நல்லவருக்கு நல்லவனாய் பாபிக்குப் பயங்கரமாயிருந்து பித்ரு லோகத்தை ஆளுபவன் ஒருவனுண்டு. உலக வாஸனையி லீடுபட்டுக் கர்மமார்க்கத்தி லுள்ளவர்களுக்கு இவனே யமன். ஞானவழி யிலுள்ளோருக்கு முன் சொன்ன யமன்.

887. அஹங்காரரூபமாக நம்முள்ளே யமன் நுழைந்து கோபம் தவருதல் லோபம் முதலியவைகளை உண்டு பண்ணி துர்மார்க்கத்தில் நம்மை நடத்தி மரணமடையச் செய்கிறான். பித்ரு லோகம் கொண்டுபோய் நரகத்தை அனுபவிக்கச் செய்து மறுபடியும் பிறப்புக்காகப் பூமியில்தள்ளி விடுகிறான் விவேகமற்றவருக்கு ஜனன மரணம் ஓயாமல் வரும். அனுசா ரம் நிரைந்த உடலை விரும்பி, அத்யாத்ம சாஸ்திரத்தைக் கற் காது, சதுர்வேதங்களை அங்கத்துடன் கற்றிருந்தாலும் அவன் ப்ராமண கழுதையாவன். வைக்கோலால்செய்த புலி ஆவான்.

888. ஆத்ம ஸ்வரூபத்தை உள்ளபடியில்லாமல் வே ருக உணர்ந்தவரும் கர்மாவே பெரிதென்றெண்ணி ஞான

மார்க்கத்தை விட்டு சித்தசுத்தியிருந்தும் கர்மாவிலேயே ஊடாடுபவரும் ஆத்மஹத்தி செய்துக்கொள்பவர். அவர் செய்யாத பாபமில்லை. அவர் அநந்தமெனும் ஸூர்யனில்லா இருள் சூழ்ந்த நரகத்தை அனுபவிப்பர். அக்கர்மாவையும் விட்டவர் கதி சொல்லத்தரமோ ?

889. தனிகனையும் ஸுகிகளையும் பார்த்துப் பொறாமை கொள்வோர், காம்ய கர்மாக்களைச் செய்து தூமாதி மார்க்கமாக ஸ்வர்க்கம் சென்று ஸ்வல்ப ஸுகத்தை அனுபவித்து மறுபடியும் பூமியில் பிறந்து பல துன்பங்களை அனுபவிப்பர்.

890. ஞானியும் விசேஷமாக ஆருருக்ஷுவும் தனது ஞானத்தை வெளிப்படுத்தாமலிருப்பது விசேஷம். ஸம்மானத்தை விஷத்தைப்போலெண்ண வேண்டும். அவமானத்தை அமிருதம்போல் விரும்ப வேண்டும். தன்னை ஹிம்ஸிக்காதவனும், பிரும்மநிஷ்டன் பொருளை அபஹரிக்காதவனும் யாரோ அவர் அன்னத்தைப் புஜிக்க வேண்டும். தன் யோக்யதையை ப்ரகாசப்படுத்துவோர் வாந்தி எடுத்ததைப் புஜிப்பவராவர்.

891. உலக வஸ்துவில் பற்றற்று ஞான மெனும் பொருளையுடைய ஒருவனுக்கு ஸமமாக தேவர்களையே சொல்லமுடியாதெனின் மற்றவர்களைக் கேட்க வேண்டுமா ? தன்னைப் பூஜிக்கும்போதும் அவமதிக்கும்போதும் அந்த ஞானி, கண் மூடுவதும் திறப்பதும்போல உலக வழக்கமிது. ஸஹஜந்தான் இது என்று மெண்ணவேண்டும்.

892. அன்னம், அழகிய ஸ்த்ரீ, மற்றபோகம், இவைகளுக்கு மானமென்று பெயர். மானத்தால் ஸம்ஸாரவிருத்தியும் துக்க ப்ராப்தியு முண்டாகும். பிரும்மானந்தத்திற்கு ஹேதுவானது மௌனம். அதனால் மோக்ஷமுண்டாகும். லக்ஷ்மீ மதத்தை அளிப்பாள். பிரும்மவித்யை எனும் ஸ்ரீ மோக்ஷமளிக்கும்.

893. கோபம் முதலிய பனிரண்டு தோஷங்களும்

ஏழு க்ரூரகுணங்களும், வேடன் மிருகங்களைத் தேடிக்கொல் வதைப்போல் ஸமயம் பார்த்து நம்மைக் கெடுக்கின்றன.

1. போகத்திலாசை. 2. பிறருக்கு விஷத்தைப்போல் உபத்ரவம் செய்து தான் விருத்தியாதல். 3. தானம் செய்து விட்டு ஐயோ கொடுத்துவிட்டேனே எனக் கஷ்டப்படுதல். 4. ஸ்வல்ப வருமானத்திற்காக எல்லா அவமானத்தையும் பொறுத்தல் 5. ஞான பலமில்லாமை. 6. இந்திரியங்களையும் அனுபவத்தையும் துதித்தல். 7. குற்றமற்ற மனைவியை நிந் தித்தல். இவைகளைக் களையவேண்டும்.

894. பனிரண்டு மஹாவ்ரதங்கள் அனுஷ்டிக்கத்தக்கன. ஞானம், ஸத்யம், தமம், ச்ரவணம், பொறாமையில்லாமை, அகார்யத்தைச் செய்வதில் வெட்கம், திதிக்ஷை, பிறர்தோ ஷங்கூறாமை, அக்னிஷ்டோமாதி யக்ஞம், தானம், போக வஸ்துவைக்கண்டும் மனங் கலங்காமை, இந்திரியங்களை அடக்குதல் இவைகளால் சீக்ரமாக ஞானம் உதிக்கும்.

895. தமம் என்பதை அப்யஸிப்பவன் அதற்கு விரோதியான பதினெட்டு தோஷங்களை அகற்ற வேண்டும். பொய், கோள் சொல்லல், த்ருஷ்ணை, எல்லோருக்கும் ப்ரதி கூலமாயிருத்தல், அஞ்ஞானம், கிடைத்ததைக்கொண்டு ஸந் தோஷப்படாமை, உலக பயங்கரமான கார்யத்தைச் செய்தல், கர்வம், விவாதம், பரஹிம்ஸை, பிறரைத் தூஷித்தல், வீண் பேச்சு, துக்கத்தையே ஓயாமல் சிந்திப்பது, பொருக்காமை, சபலம், தர்ம க்ஞான வைராக்ய மில்லாமை, பாபம், ஹிம் ஸை இவைகளை அடியோடு அகற்ற வேண்டும்.

896. தக்க யோக்யதை உள்ள ஒருவர் யாசிக்கும் போது தன் புதல்வனையும் தனத்தையும் த்யாகம் செய்வது, யாகத்தில் தக்ஷிணை கொடுப்பது, ஸ்மார்த்த கர்மாவில் கொடுப்பது, வைராக்யத்தால் ஸன்யாஸம் செய்துக்கொண்டு

கர்மாவை விடுவது, ஆசையை விடுவது என ஆறு வகை த்யாகத்தில், கடைசி இரண்டும் கிடைக்கத் தகாதது.

897. சீக்ரமாக ஞானம் வரவழி என்ன? அவஸரப்பட்டு செய்துவிடுவதற்கு இது ஒரு கர்மாவல்ல. ஸத்குருவை அண்டி வேறு ஞானஜன்மாவைப் பெறவேண்டும். குருபணிவிடை செய்து வித்யை பெறுவது பிரும்மசர்யத்தின் முதற் பாதம். குரு புத்ர குரும்னவிகளிடம் குருபக்தி செய்வது இரண்டாம் பாதம். ஆசார்யோபதேசத்தை நம்பி நான் கிருதகிருத்யனுனேன் என்றெண்ணுவது மூன்றும் பாதம். வாக்கு மனஸ் காயங்களால் ப்ராணத்தாலும் குருவுக்கு ப்ரத்யுபகாரம் செய்வது நான்காம் பாதமாம்.

898. குரு சொல்வது கால்மடங்கு, சிஷ்யன் தன் புத்தியால் யோசித்துக் கற்பது கால் பங்கு, படித்த விஷயம் காலம் ஆகஆக கால்பங்குதானே விளங்கும், கூடப் படிப்பவர் மூலம்கால்பங்கு, இப்படிக் கல்வி பூர்ணமாகிறது.

899. குதிரை கடிவாளத்திற்கு வாயைத்திறப்பதில்லை. இந்திரியங்கள் உள்ளே அடங்கிக் கிடப்பதில்லை. அதற்கு மனமென ஓர் கடிவாளத்தைக்கொண்டு புத்தி எனும் ஸாரதி அவைகளை அடக்கினுல் அடங்கும். அஹங்காரத்துடன் கூடிய புத்தி எனும் வண்டு விஷயமெனும் புஷ்பங்களிலிருந்து கர்மா எனும் தேனைத் தேடி அடையில் வைக்கின்றன. அடுத்த பதினைந்து நாள் எனும் ஜன்மாந்தரத்தில் அதை அனுபவிக்கிறது.

900. பாம்பு புத்திலிருந்து கிளம்பி வந்து ஒருவனைக் கடித்துவிட்டுப் புத்தில் போய் பதுங்கிக் கொள்வதுபோல் இந்திரியங்கள் வெளியில் வந்து ஜீவனைக் கெடுத்து விட்டுத் தன்னை மறைத்துக் கொள்கின்றன.

## 71. சிவாநந்த லஹரி 100.

901. பானைக்கு மண்பிண்டம் காரணம். அதற்கு அணு காரணம்: புகை தெரிவதால், பர்வதம் நெருப்புள்ளது என வீண் தர்க்க வார்த்தைகளால் பயங்கரமான யமனுக்கு பதில் சொல்லமுடியாது. பரமசிவன் பாதத்தைச் சரணமடை.

902. ஆழமான மடுவிலோ, பயங்கரமான காட்டிலோ, அகண்ட மலையிலோ உமது பூஜைக்காக புஷ்பத்தைத் தேடு பவன் மூடனன்றோ? உமக்கு ப்ரியமான அருகிலுள்ள மன மெனும் புஷ்பத்தால் உம்மை அர்ச்சித்து ஸுகிக்கலாகாதா?

903. நரனாகவோ, தேவனாகவோ, மலையாகவோ, காடாக வோ, மிருகமாகவோ, கொசுவாகவோ, பசுவாகவோ, புழுவாக வோ, பக்ஷியாகவோ பிறந்தாலும் பரமனது பாதாரவிந்தம் மனதை விட்டகலாவிடில் அதே உத்தம ஜன்மமாகும்.

904. ஆத்ம ஸ்வரூபத்தைக்காணப் பெருந்தடையாய் அஸாரமில்லாததாயிருக்கும் இந்த ஸம்ஸாரத்தில் மோஹத்தால் சுழன்றுருளும் என்னைக் கருணையால் காக்க வேண்டும். உம்மைவிட என்னை ரக்ஷிப்பவர் எவருமில்லை. என்னை விட பரமதீனனும் உமக்குக் கிடைக்க மாட்டான்.

905. துராசையால் உம்மை நினையாமலிருக்கும்படி என் தலையிலமைந்துள்ள எழுத்தைத் தாங்கள் உபேக்ஷை யால் அழிக்காமலிருக்கிறீர். உமக்கு என்னிடமருள் இருந் தால் இது ஓர் பிரயாஸமா? பிரும்மனது ஐந்தாந் தலையையே உமது நகம் அனாயாஸமாக அப்புறப்படுத்த வில்லையா?

906. துராசையால் அல்பதனிகர்வாசலில் நிற்கும்படி செய்கிறது ஸம்ஸாரம். அதற்கோர் முடிவுமில்லை. பாபத்திற் கோ இருப்பிடம். புதிய புதிய துக்கத்தைக் கொடுப்பது. இதில் யான் படும் ஆயாஸத்தைத் தாங்களறிய மாட்டீர் களா? யாருக்கு உபகாரத்திற்காக என்னைக் கஷ்டப்படுத்து

கிறீர்? இதில் உமக்கே ஆசைஎனில் உமது ஆசையைப் பூர்த்தி செய்யும் நான் தன்யனே.

907. மோஹமெனும் காட்டில் ஸ்தனமெனும் மலையில் ஆசை எனுங்கிளைகளில் என்மனக்குரங்கு இஷ்டப்படி ஆடி ஓடி அலைகிறது. தாங்கள் கபாலத்தைக் கையிலேந்திய பிக்ஷுவாதலின் இதையும் அடக்கி உம்மிடம் வைத்துக்கொள்ளும்.

908. என் மனமென்பது ஓர் கூடாரம். தைர்யமெனும் ஸ்தம்பத்தில் நற்குணமெனுங் கயிற்றால் கட்டப்பட்டு விசித்ரமாய் நல்ல மார்க்கத்திற்கு உதவுவது இது. இங்கு சற்று வீற்றிருந்து அருள்புரிவீராக. மனமெனுந் திருடனைச் சிக்ஷித்து என்னைக் காத்தருளும்.

909. வேடவேஷம் பூண்ட சிவனே! தாங்கள் அங்குமிங்கும் அலையவேண்டாம். என் மனமெனும் காட்டில் வஸியும். இங்கு மதம் பிடித்த மாத்ஸர்யம் மோஹம் முதலிய மிருகங்க ளிருக்கின்றன. அவைகளைப்பிடித்து வேட்டையாடும்.

910. ஹம்ஸம் தாமரைத் தடாகத்தை நாடுகிறது. சாதகம் மேகத்தையும், கோகபக்ஷி சூர்யனையும், சகோரம் சந்திரனையும் நாடுகின்றன. அதேபோல் என்மனம் பசுபதியை நாடி கைவல்யத்தைப் பெறாதா?

911. ஜலப்ரவாஹம் கரையையும் வழிப்போக்கன் மரநிழலையும் மழையில் நனைந்தவன் வீட்டையும், விருந்தாளீ க்ருஹஸ்தனையும், ஏழை தார்மிக தனிகனையும், இருளிலுள்ளவன் தீபத்தையும், குளிருள்ளவன் அக்னியையும் அடைந்து தன் பயத்தைப் போக்குகின்றனர். ஓ மனமே! எல்லா துக்கத்தையு மகற்றவல்ல பசுபதியின் பாதகமலத்தை நாடு.

912. அழிஞ்சி மரத்தை அதன் விதையும், அயஸ்காந்தக் கல்லை ஊசியும், பதிவ்ரதை தன் கணவனையும், கொடி மரத்தையும், நதி ஸமுத்ரத்தையும், அடைவதுபோல் மனமானது பசுபதியின் பாதார விந்தத்தைத்தழுவுவதே பக்தியாம்.

913. பக்தி எனுந் தாய், ஈச்வரத்யானம் என்ற தொட்டிலில் பக்தன் எனுங் குழந்தையை ஆனந்த பாஷ்பத்துடன் மயிர்க் கூச்சலெனும் நிர்மலப்போர்வையைப் போற்று பகவானது சரிதமெனும் பாலை வாக்கெனும் சங்கால் பூட்டி விபூதி ருத்ராக்ஷமெனும் ரக்ஷையிட்டு வளர்க்கிறாள்.

914. பக்தி எதைத்தான் செய்யாது. வேடனை (கண்ணப்பனை) உயர்ந்த பக்தனுக்கிற்று. அவனது நடையால் தேய்ந்த பாதரக்ஷை பகவானுக்கு ப்ரியமான கூர்ச்சமாயிருந்தது. அவன் வாயால் கொண்டு விட்ட ஜலம் திவ்யாபிஷேகமாயிற்று. அவன் உண்ட மீதி மாம்ஸம் புதிய நிவேதனமாயிருந்தது.

915. யோகிகளது ஹிருதய புண்டரீகத்தில் ஸஞ்சரிக்கும் மிருதுவான தங்கள் பதகமலம் மிகக் கடினமான யமனது மார்பை எப்படி உதைத்தது? கடினமான என் மனமும் அதை த்யானம் செய்கிறது. பகவானே! என் எதிரில் காலைக் காட்டும். வலிபோக கைகளால் பிடிக்கிறேன்.

916. கொஞ்ச காலம் சிவனது பதநளினத்தைப பூஜித்தும் சிலகாலம் த்யான ஸமாதிசெய்தும் கொஞ்சநேரம் நமஸ்காரம் செய்தும் அவர் கதையைக் கேட்டும் அவரழகிய விக்ரஹத்தைப் பார்த்தும் துதித்தும் காலத்தைக் கழிப்பவரே பாக்யசாலி.

917. சிவபூஜைக்கு வேண்டிய ஸாமக்ரிகளைச் சேர்த்துவிட்டேன். ஆனால், பூஜிக்க நான் பன்றியாகவும், பக்ஷியாகவும் ஆகவில்லையே என அஞ்சுகிறேன். உமது அடிமுடியைக் காண ஹரியும் பிரும்மாவும் பன்றியாகவும் பக்ஷியாகவுஞ் சென்று தேடியுங் காணவில்லையன்றோ? யான் காண்பதெப்படி?

918. உலகில் சுகத்தைக் கோருவோர் நல்ல உணவு ஆடை ஆபரணம் வாஹனம் இவைகளை விரும்புவர். உமக்

கோ ஆஹாரம் விஷம். நகையோ பாம்பு. வஸ்த்ரமோ யானைத்தோல். வாஹனமோ காளை. நான் எதைக் கேட்பது? நீர்தான் எதைக் கொடுப்பது? ஆதலால் உம்மது பக்தி ஒன்றைக் கொடும் போதும்.

919. உமது சரிதத்தைக் கேட்டேன். எனது பாபம், தௌர்ப்பாக்யம், துரஹங்காரம், கெட்டவார்த்தை முதலியவைகள் ஒழிந்தன. இனி உமது கடாக்ஷத்தால் என்னைக் கார்த்தருளும்.

920. உமது நாமாவைச் சொல்வதே நாக்கு உம்மைக் காண்பதே கண். உம்மைப் பூஜிப்பவைகளே கைகள். உம்மை நினைப்பவனே கிருதகிருத்யனாவான்.

921. மதமென்பதோர் மதயானை. தைர்ய மெனும் அங்குசத்தால் அதைத்திருப்பி, பக்தியெனும் சங்கிலியால் கட்டி, ஸ்தாணுவினது பதமெனும் கட்டுத் தரியில் கட்டி விடு.

## பொதுவான ஸ்துதிகள்.

922. 1. விஷ்ணுபாதாதி கேசாந்த ஸ்துதி, 2. ஹநுமத் பஞ்சரத்னம், 3. ராம புஜங்க ப்ரயாத ஸ்தோத்ரம், 4. லக்ஷ்மீ ந்ருஸிம்ஹ பஞ்சரத்நம், 5. விஷ்ணு புஜங்க ப்ரயாத ஸ்தோத்ரம், 6. பகவன் மானஸ பூஜா, 7. மீனாக்ஷீ ஸ்தோத்ரம், 8. மீனாக்ஷீ பஞ்சரத்னம். 9. ஜகன்னாதாஷ்டகம். 10. சிவ பஞ்சாக்ஷர நக்ஷத்ரமாலா ஸ்தோத்ரம், 11. அர்த்தநாரீச்வர ஸ்தோத்ரம், 12. சாரதா புஜங்க ப்ரயாதாஷ்டகம், 13. குர்வஷ்டகம், 14. கணேச பஞ்சரத்நம், 15. கணேச புஜங்கம் (9), 16. ஸுப்ரஹ்மண்ய புஜங்கம் (33), 17. சிவ புஜங்கம் (40), 18. சிவபாதாதி கேசாந்த வர்ணநம் (41), 18. ஷை (29), 19. வேதஸார சிவஸ்தோத்ரம் (11), 20. ஸுவர்ணமாலா ஸ்துதி. அ முதல் க்ஷ வரை ஒவ்வொரெழுத்திற்கோர் சுலோகமாக சிவனைக்குறித்து 50 சுலோகங்கள். 22.

22. தசச்லோகி ஸ்துதி. சிவனைப் பெருமைப்படுத்திக் கூறியது. 23. தக்ஷிணாமூர்த்தி வர்ணமாலா ஸ்துதி. மேதா தக்ஷிணாமூர்த்தி மந்திரத்தில் ஓரெழுத்திற்கு ஓர் சுலோகமாக (25), 24. மிருத்யுஞ்ஜய மானஸிக பூஜா ஸ்தோத்ரம் (46), 25. சிவநாமாவள்யஷ்டகம், 26. உமாமஹேச்வர ஸ்தோத்ரம் (13), 27. தேவீ புஜங்க ஸ்தோத்ரம், 28. ஆனந்த லஹரீ, அம்பிகா ஸ்துதி (20), 29. திருபுரஸுந்தரி மாநஸபூஜா ஸ்தோத்ரம் (123), 30 தேவீ சதுஷ்ஷஷ்ட்யுபசார பூஜாஸ்தோத்ரம் (72), 31. திருபுரஸுந்தர்யஷ்டகம், 32. லலிதா பஞ்சரத்னம், 33. கல்யாண வ்ருஷ்டிஸ்தவம், பஞ்சதாசாக்ஷரீ எனும் தேவீ மந்திரத்திலுள்ள ஒவ்வோரெழுத்துக் கொன்றாக இயற்றியவை (16). 34. நவரத்ன மாலிகா தேவீ ஸ்துதி (9), 35. மந்த்ர மாத்ருகா புஷ்பமாலா ஸ்தவம், பஞ்சதசாக்ஷரீ மந்திராதியைக் கொண்ட தேவீ ஸ்துதி (16) 36. கௌரீதசகம், 37. பவானீ புஜங்கம் (17).

குறிப்பு :—இந்த ஸ்தோத்ரங்களில் முன் ஸ்தோத்ரங்களிலிருந்து எடுத்த விஷயங்களே பெரும்பாலும் காணப்படுவதால், பெயரோடு மாத்ரம் நிறுத்தப்பட்டது.

## 72. ஸௌந்தர்ய லஹரீ 100.

923. ஓ பவானி! தாஸனிடத்தில் கடாக்ஷத்தை "பவானீத்வம்" என்று துதிக்க ஆரம்பிப்பதற்குள் ஓ! நம் ஸாயுஜ்யத்தைக் கேட்கிறான் பக்தன் என அதை அளித்து விடுகிறீர்.

924. அமிருதத்தை உண்ட பிரும்மா இந்திரன் முதலிய தேவர்கள் பலவித ஆபத்திற்கு ஆளாகின்றனர். மரணத்தையும் அடைகின்றனர். விஷத்தையே உண்ட நீலகண்டன் பிழைத்திருப்பது உன் தாடங்க மஹிமையாலன்றோ?

925. நீண்ட அருள் நிறைந்த கடாக்ஷத்தின் காந்தியால்

என்னை ஸ்நானம் செய்து வையும். இதனால் உமக்கு ஒன்றும் கஷ்டமில்லை. நான் பாபி என்று என்னை விலக்கலாகாது. காட்டிலும் மாடியிலும் சந்திரகிரணம் ஸமமாகவே விழுகிறதன்றோ?

926. தாயே உனது பால் ஸரஸ்வதீ ப்ரவாஹத்தை உண்டு பண்ணும் கடலெனத் தோற்றுகிறது. இல்லையேல் பிரும்மபுரம் எனும் சீர்காழியில் சிறு த்ராவிட குழந்தைக்கு நீர் பாலளித்தவுடன் அழகிய தேவாரம் பாடும் ஸம்மந்தனாக அது ஆகுமா?

927. ஸரஸ்வதியாய் லக்ஷ்மியாய் பார்வதியாய் இருக்கிறாய் என உன்னைச் சொல்வார்கள். ஆனால் நீ இவர்களுக்கு மேலாய், துரீயையாய் எல்லை இல்லாமஹிமையுள்ள பரப்ரும்மத்தின் மனைவி என நினைக்கிறேன்.

## 73. லக்ஷ்மீ ந்ருஸிம்ஹகருணாரஸ ஸ்தோத்திரம். 17.

928. ஸம்ஸார மென்பது ஓர் கிணர். அதில் துக்க மெனும் பாம்புகள் சூழ்ந்திருக்கின்றன. இவ்விஷ மூர்ச்சையால் பிராணன் போகும் ஸமயத்தில் பயந்த என்னை லக்ஷ்மீந்ருஸிம்ஹ! நீ கைகொடுத்துக் காக்க வேண்டும்.

929. கழுத்தில் கயிற்றைக்கட்டி யம படர்கள் என்னை மிரட்டி இழுக்கிறார்கள். ஏகாகியாய் பரவசனாய் பயந்து நிற்கும் என்னைக் காப்பாயாக.

930. இந்திரியமெனும் பலமுள்ள திருடர்கள் விவேக மெனும் தனத்தை அபஹரித்து என் கண்ணைக்கட்டி மோஹ குழியில் தள்ளிவிட்டனர். ப்ரஹ்லாத நாரத பராசரர் முதலியவர்களைக் காத்த தேவ! எனக்குக் கை கொடும்.

(உபய பாரதி எனும் மண்டனமிச்ரரது மனைவியான ஸரஸ்வதி காம சாஸ்திரத்தில் வாதம் செய்ய, அமருகனை

னும் அரசன் உடலில் பரகாய ப்ரவேசம் செய்திருக்கும் போது ஆசார்யாது உடல் அமருகன் மனைவியால் அக்னியில் இடப்பட்டது. அச்சமயம் ஸ்ரீசங்கரர் இதைப் பாட ஆப த்திலிருந்து ந்ருஸிம்ஹர் கை தூக்கிவிட்டார்.)

## 74. கனகதாரா ஸ்தோத்ரம் (18)

931. மஹா விஷ்ணுவிற்கே மஹிமையை அளிக்கும் லக்ஷ்மியே! இந்த ஏழையினிடத்தில் உனது கருணை எனும் காற்று பாபத்தை யகற்றி ஸ்வர்ணதாரையை வர்ஷிக்கட்டும்.

(ஸ்ரீ சங்கரர் பிரும்மசாரியாயிருக்கும்போது ஓர் ஏழை யின் வீடுசென்று பிக்ஷைகேட்க, அவ்வீட்டுப் பெண்மணி கொடுக்க ஒன்றுமில்லாமல் கலங்கி அழுது, ஓர் நெல்லிக் கனி யை யளித்தாள். உடனே குரு இத்துதியைப்பாட ஸ்வர்ண நெல்லிக்கனியாக அங்கு மழை பொழிந்தது.)

## 75 லலிதா த்ரிசதீ பாஷ்யம். (36)

ஹயக்ரீவர் அகஸ்த்யருக்கு பஞ்சதசாக்ஷரீ என்ற அம்பி கையின் மஹாமந்த்ரத்தில் ஓர் எழுத்திற்கு இருபது நாமா வாகப் பதினைந்தெழுத்திற்கு முன்னூறு நாமாக்களை உபதே சித்தார். தேவியின் பெருமையை விளக்கும் இதற்கு பகவத் பாதாள் பாஷ்யம் செய்தனர்.

## 76. சிவாபராத க்ஷமாபண ஸ்தோத்ரம் (15)

932. கர்மத்தால் மல மூத்ரம் நிறைந்த மாத்ரு குக்ஷி யில் ஓர்புறம் ஜாடராக்னி கொளுத்த யான்பட்ட துக்கம் சொல்லொணாது. மலஜலத்தை மேற்பூசி பசிதாஹமெனக் கூற வாயில்லாது பல்வகை ரோகத்திற் காளாகியபோதும் பரமசிவ! யான் உமது திருவடியை நினைத்தேனில்லை. என் குற்றத்தை மன்னித்து அருள்புரிவீராக.

933. யௌவனத்தில் விஷயமெனும் விஷப் பாம்பு தீண்ட கர்வங்கொண்டு என் மனைவி மக்கள் எனக் குலாவிய போதும், உடல் மெலிந்து மதிகலங்கி, ரோகம் நிறைந்து,

சிந்தை நொந்து தவிக்கும் கிழத்தனத்திலும் நச்வரமான பொரு ருளில் மோஹங்கொண்டேன். சாச்வதமான சிவனடியை நினைத்தேனில்லை.

934. காலையில் முழுகி சிவனை அர்ச்சிக்க கங்காஜலமும், பில்வதளமும், தாமரை மலரும் கொண்டுவந்தேனில்லை. பால், தயிர், தேன், பஞ்சாமிருதங் கொண்டு பகவானுக்கு அபிஷேகஞ் செய்யவில்லை. மலர்கொண்டு அர்ச்சிக்க வில்லை. தூபதீப நைவேத்யங்களால் ஆராதிக்கவில்லை. இக்குற்றத்தை மன்னித்தருளும்.

935. விஹிதமான ஸ்மார்த்த கர்மாக்களையே செய்யவில்லை. ச்ரௌதத்தைப்பற்றி கேழ்க்கவும்வேண்டுமா? தத்வ ஞான வழியைக் கண்ணாலுங் கண்டிலேன். ச்ரவண மநநநிதித்யாஸநம் செய்தறியேன். உம்மை நினைத்து ஒரு காசும் தக்க பாத்திரத்தில் தந்தேனில்லை. லக்ஷக்கணக்காக உமது நாமாவைக்கூறி ஹோமம் செய்யவில்லை. கங்காதீரம் சென்று ருத்ரத்தையும் ஜபிக்கவில்லை.

936. அவதூதனாய் பற்றற்று முக்குணங்களையும் மோஹத்தையும்விட்டு மூக்குநுனியில் கண்ணைவைத்து உமது திருவுருவைக் காணவில்லை. வேதாந்த வேத்யமாய் மங்களமாய் சாந்தமாய் ஆனந்த வடிவமாயுள்ள உமது ரூபத்தைத்யானம் செய்யவில்லை.

937. ஓ மனமே! தனத்தாலும், யானை, குதிரை, முதலிய வாஹனத்தாலும், ராஜ்யத்தினாலுந்தான் யாது பயன்? க்ஷணபங்குரமான இவைகளையும், அற்பப் பயனை அளிக்கும் கர்மா அல்லது இதர தேவர்களையும் விட்டு மோக்ஷ ஸாம்ராஜ்யத்தை அளிக்கவல்ல பரமசிவனது பாதாரவிந்தத்தை நாடு.

938. புரோஹிதம், பேய்பிறப்பு, கிராமக் கணக்கு, அடிமை, மடாதிபதியா யிருத்தல், பொய்ஸாக்ஷி கூறல், பார

ன்னம், பிரும்ம த்வேஷம், துஷ்டரிடம் பற்று, தயையில்லாமை, இவைகள் எப்பிறப்பிலும் தோன்ருது அருள்புரிவீராக

939. க்ஷணக்ஷணமாக ஆயுள் குறைந்துகொண்டே வருகிறது. யௌவனம் அழிகிறது. சென்ற தினம் திரும்பி வருவதில்லை. காலம் ஜகத்தையே விழுங்குகிறது. அலைத்துளிபோல் லக்ஷ்மி சபலை, மின்னல் போன்றது நமது ஜீவிதம். ஆதலின் பரமசிவனை சரணமடைவோம். சம்போ! என்னைக் காத்தருளும்.

940. சிவனே! எனதாத்மாவே நீ, புத்தியே உமை, ப்ராணனே பரிவாரங்கள், காயமே கோயில், எனது விஷயானுபவமே பூஜை, நித்ரையே ஸமாதி, கால்நடையே பிரதக்ஷிணம், பேச்செல்லாம் உனது துதி, என்து செயலெல்லாம் உனது பூஜை என ஏற்றுக்கொள்.

## 77. திருபுரஸுந்தரீ வேதபாத ஸ்தோத்ரம் (110)

(வேத மந்திரத்தை நாலாவது பாதத்தில் வைத்து மற்றவைகளை அதற்கேற்றபடி அமைத்துப் பாடியன.)

941. யாகத்தாலோ, ஜபத்தினுலோ, உக்ரமான தபஸாலோ, கிலேசத்தை யளிக்கும் யோகத்தினுலோ, அடையமுடியாத சாந்தியை நற்புத்திகொண்டு அம்பிகையைத் தேடிப் பெறலாம்.

942. ஓ மனமே! நீ ஏன் சோகக்கடலில் மூழ்கினுய். நீ கரை ஏற ஓர் உபாயம் சொல்கிறேன் கேள். அஃதென்ன? அம்பிகையின் திருவடியைப் பூஜி. அத்திருவடியின் ஸ்வரூபத்தை ஸங்க்ரஹமாகச் சொல்லுகிறேன் கேள், அதுதான் ப்ரணவம்.

943. தரித்ரனுன என் பாபத்தை அகற்றி தனத்தையளி. உன் த்யானம் எனும் தனம் நிரைந்த என்னை வெறுக்கும் பிரம்மத்வேஷிகளை உமது பாணத்தால் கொல்லு.

944. கர்வத்தால் பல அபசாரங்களைச் செய்வேன். ஆயினும் உம் திருவடியைச் சரணமடைந்த என்னை ஓர் குழந்தை என்றெண்ணி தாயான தாங்கள் காத்தருளவேண்டும்.

945. ஸாதகன் மற்ற வாக்கைவிட்டு அம்பிகையின் மந்த்ரத்தைக் கூறவேண்டும். தன்னுடலை ஸ்ரீசக்ரமாக, தன்னைத் தாயாக நினைக்கவேண்டும். தன் மனம் போகுமிடமெல்லாம் தாயின் திருவடியாகவும், தன் தலை வணங்குமிடமெல்லாம் அன்னையின் பாதுகை எனவும் எண்ணவேண்டும்.

## 77. பிரபஞ்ச ஸாரம். 33 படலம் 2403 சுலோகம்.

(இதில் சத்ரு ஜயம் இஷ்டஸித்தி இதற்கு ஸாதகமாக தேவதா மந்த்ர ஜப ஹோமம் முதலியன விஸ்தாரமாக உளது :)

946. சுக்லமும் சோணிதமும் தாய் வயிற்றில் ஒன்றாகச் சேரும் தினத்திலேயே ஆங்குள்ள வாயு ஜல அக்னிகளால் கொதித்துத் தாய் கட்டைவிரலளவு கனமாக ஆய்விடுகிறது. சுக்லம் அதிகமானால் பிள்ளை, சோணித மதிகமானால் பெண், இரண்டும் ஸமமானால் நபும்ஸகம் உண்டாகும். கிட்டம் போன்ற சுக்ல சோணிதம் முதலில் இரண்டு பீஜமாகிறது.

947. முதல் மாதத்தில் பல நாடிகளுண்டாகின்றன. முதல் நாடியே ஸுஷும்னையாம். இடது நாடி இடை. வலது நாடி பிங்கலை. தாயுண்ணும் உணவைக்கொண்டு கர்ப்பம்வளர, தாய் ஹ்ருதயத்திலிருந்து ஓர் நாடி கர்ப்பத்தில் கட்டப்பட்டிருக்கும். ஒன்றரை லக்ஷம் நாடிகள் நமது உடலிலிருக்கின்றன. மூலாதாரத்திலிருந்து கிளம்பி இடை பிங்கலை வழியாக வாயு மூக்கிலிருந்து பனிரண்டங்குலம் வெளியிற் சென்று லயமாகிறது.

948. கர்ப்பத்திலுள்ள சிசுவிற்கு, மனம் தலை கை கால்கள் இவைகளே முதலிலுண்டாகின்றன. இவ்வுடலுக்குப் பசி தாஹம் சோகம் மோஹம் ஜரை மரணம் என் ஆறு அலைக்

ளுண்டாகின்றன. ஜபம் செய்யும்போது, இவ்வுடலில் ரிஷி குருவானதால் தலையிலும், சந்தஸ் அக்ஷரமானதால் வாக்கி லும், தியானம்செய்ய வேண்டியதால் தேவதையை ஹிருத் யத்திலும் கையை வைத்து ஜபம் செய்ய வேண்டும்.

949. பக்தியில்லாமல் பூஜை செய்பவர், தந்தை தாய் குருவை வஞ்சிப்பவர், தானிருக்கும்போது யாசக்ருக்கு இல்லை என்பவர், சிவ விஷ்ணு பூஜை செய்யாதவர், தன் பார்யையை நிந்திப்பவர், உலகையும் வேதத்தையும் வெறுப் பவர், தகாதவரிடம் தானம் வாங்குபவர், ஆகிய இவர்களுக் குப் புத்ரன் உண்டாக மாட்டான்.

## 78. ஸ்ரீபகவத்கீதா பாஷ்யம்

(பாரத யுத்தத்தில் ஸ்ரீ கிருஷ்ணன் அர்ஜுனனுக்கு உப தேசித்த 18 அத்யாயமுள்ள கீதைக்கு ஸ்ரீசங்கர பாஷ்யம்.)

### 1 விஷாத யோகம் (47)

950. நமது நன்மையை நாடிய நாராயணன் மரீசி மூலமாக ப்ரவிருத்தி தர்மத்தையும் ஸநகாதி மூலம் நிவிர்த்தி தர்மத்தையும் விருத்தி செய்தார். நேராக ஸ்வர்க்க மோக்ஷங் களை அளிப்பதே தர்மம். வைதிக தர்மத்தை அனுஷ்டிக்கும் பிராமணனை ரக்ஷித்தால் தர்மத்தை ரக்ஷித்ததாகும். இதற்காக வே ஸ்ரீகிருஷ்ணவதாரம். ப்ரவிருத்தி என்பது கர்மா. நிவிர்த்தி என்பது ஞானம்.

951. குணமுள்ள பெரியோர் ஏற்று அனுஷ்டிக்கும் தர்மமே விருத்தியாகும். ஸ்வர்க்கத்தைக் கொடுப்பதாயினும் ஈசனிடத்தில் அர்ப்பணம் செய்தால் வர்ணாச்ரம தர்மம் மன தைச் சுத்தமாக்கும். பின்னர் ஞானோதயமாகும்.

952. ஸத்குலம் அழிந்தால் குல தர்மம் அழியும். அதர்மம் அதிகமானால் குல ஸ்த்ரீகள் கெடுவார்கள். அவர் கள் கெட்டால் வர்ண தர்மமழிந்து வர்ண ஸாங்கர்யம் ஏற்

படும். அதனுல் பித்ரு தேவர் பிண்டமின்றி பரிதபிப்பர். தர்மத்தை அழிக்கக் காரணமானவன் பல காலம் நரகத்தை அடைவான்.

## 2 ஸாங்க்ய யோகம். (72)

953. ஸுகம் போய் விடுகிறதே என்ற எண்ணத்தால் தோன்றுவது மோஹம். துக்கம் வருகிறதே என்ற எண்ணத்தால் உதிப்பது சோகம். இவ்விரண்டும் தோன்றின் ஸ்வதர்மத்தை விடுவதும் பரதர்மத்தை ஏற்பதும் இயற்கை. சோக மோஹமுள்ள அர்ஜுனன் யுத்தம் செய்யமாட்டேன் பிக்ஷை எடுத்துப் பிழைக்கிறேனென்ருன். சோகமோஹத்தை ஒழி.

954. பீஷ்மர் துரோணர் முதலியவர்களைக் கொல்வது நியாயமா? க்ஷத்ரியனுக்கு யுத்தம் ஸ்வதர்மமாதலின் நியாயமே. அன்றியும் அவர்களது உடல் அழியுமேயன்றி அவர்கள் அழிவதில்லை. நம்முடலில் ஆதியிலிருந்த பால்யம் அழிந்தது. அதற்கு அழுதோமா? யௌவனம் வந்து போயிற்று, துக்கித்தோமா? அதேபோல் அழியா ஜீவனுக்கு அழிவுள்ள உடல் வந்து போகிறது. இதற்கென்ன துக்கம்? கிழிந்த துணியை எறிந்து புதுத் துணியைத் தரிக்கவில்லையா?

955. ப்ரத்யக்ஷமாகத்தோன்றும் ஸுக துக்கங்களை என் செய்வது? ஸுகமோ துக்கமோ சாச்வதமானதல்ல. உஷ்ண காலத்தில் ஸுகமான சைத்யம், சீதகாலத்தில் துக்கமாகிறது. மதுமாம்ஸம் ஒருவனுக்கு துக்கமாகவும் அப்ரியமாகவும் தோன்றும்.மற்றொருவனுக்கு ப்ரியமாகவும் ஸுகமாகவும், தோன்றும். ஆதலால் அநித்யமான சீதோஷ்ண ஸுக துக்கங்களைப் பொறுத்தல் வேண்டும்.

956. ஒரே விஷயம் பலமுறை வேதாந்தத்தில் கூறப்படுவதேன்? ஆத்மதத்துவத்தை அறிவது ஸுலபமல்ல. பலமுறை கூறினும் மனதில் பிடிபடாது. ஆதலால் வெவ்வேறு

வகையாக ஒரே விஷயம் கூறப்படின் ஒரு முறையாவது நம் மனதில் பதியாதா என்பது வேதமாதாவின் அவா.

957. பிறந்தவன் இறப்பது எப்படி ஸத்யமோ அதே போல் ப்ரும்மத்தை அறியாதவன் இறந்து, நிச்சயமாகப் பிறந்தே தீருவான். பிறப்பிறப்பு ஸஹஜமாயிருக்க, இறந்தவனைக் குறித்து வருந்துவதில் பயனென்ன? நாம் பிறப்பதற்கு முன்னும் இறந்த பிறகும் வ்யக்தமாகக் காணப்படுவதில்லை. இடையில் கொஞ்சகாலம் தோன்றி முன்போலவே மறைகிறோம். இதற்கு வருந்துவதேன்?

958. க்ஷத்ரியனுக்கு யுத்தம் ஸ்வதர்மம். ப்ராம்மணனுக்கு யாகாதி ஸ்வதர்மம். யாகத்தில் பசு வதம் வேதங் கூறுவதால் எப்படி வதமில்லையோ, பாபமில்லையோ, அதேபோல் க்ஷத்ரியனுக்கு யுத்தம் என்பது தானாகத்திறந்த ஸ்வர்க்க வாசற்படியாம். ஸ்வதர்மத்தை விடுபவனுக்கு பாபம் வரும். அபகீர்த்தியும் வரும்.

959. இறந்தாலும் இறக்கலாம்; நற்கீர்த்தியுள்ளவன் அபகீர்த்தியைத் தேடலாகாது. ஸ்வதர்மத்திலீடுபட்டு இறந்தால் ஸ்வர்க்கம். இருந்தாலும் ஸுகம். ஸ்வதர்மத்தாலுண்டாகும் ஸுகத்தையோ, துக்கத்தையோ, லாபத்தையோ, நஷ்டத்தையோ கவனிக்காதே.

960. மோக்ஷத்திற்கு ஸாதனம், பலனைக் கோராது பகவதர்ப்பணமாக ஸ்வதர்மத்தைச் செய்வது. இது பூர்த்தியாகவில்லையே! பாதியில் நின்றுவிட்டதே! என்றஞ்சாதே. நீ ஸ்வல்பம் அனுஷ்டித்தாலும் அது உன்னைப் பெரிய ஸம்ஸார துக்கத்திலிருந்து காக்கும்.

961. மோக்ஷம் வேண்டுமென்பவன் நிச்சயமாக ஒரே புத்தியைப் ப்ரும்மத்தினிடம் செலுத்தவேண்டும். காம்ய கர்மாக்களைச் செய்து ஸ்வர்க்காதி ஸுகத்தை விரும்புவோர் ஓர் நிச்சய புத்தியில்லாதவர். அவர் புத்தி, இதைவிட அந்த

ஸுகம் மேல், அதைவிட மற்றொன்று மேல் என ஓயாமல் ஒழியாமல் அலைந்து திரியும்.

962. கர்ம காண்டங்களில் எங்கெந்த ஸுகம் கூறப்பட்டுள்ளதோ அவைகளை ஞானி ஞானத்தால் பெற்று சாச்வதமாக அநுபவிக்கிறான். சிறு குளத்தில் எவ்வளவு ஸ்நான பானம் செய்கிறோமோ, அதைவிட அதிகமாகப் பெரிய ப்ரவாஹத்தில் செய்யமுடியுமா? ஆதலின் பலன் வேண்டுமெனக் கோராமல் கர்மாவைச் செய். கர்ம பயன் கிட்டினும் இல்லாவிடினும் ஸமமாயிரு. இதே யோகம் எனப்படும்.

963. ஸமபுத்தி எனும் யோகமுள்ளோர் கர்ம பலத்தைக் கனவிலும் கோராது ஜநநமரண பந்தத்திலிருந்து விடுபடுகின்றனர். மோஹமகன்றால்தான் வைராக்ய முண்டாகும். வைராக்யம் வந்தால்தான் ஸமபுத்தி வரும்.

964. மனதிலுள்ள ஆசையை விட்டு துக்கத்தில் வெறுப்பும் ஸுகத்தில் விருப்புமில்லாமல் ஆமைபோல் விஷயங்களிலிருந்து இந்திரியங்களை ஒடுக்கி, ஆசை பயம் கோபம் முதலியவைகளைத் துறந்தவன் ஸன்யாஸி யாவான். தவத்தினால் கண் காதுகளை அடக்கி விஷயங்களை விடலாம். அதிலுள்ள பற்று அகலுவதுதான் ச்ரமம். அதுவும் ஆத்ம தர்சனமானால் அகலும்.

965. நாம் முயற்சித்தாலுங்கூட பலமுள்ள இந்திரியங்கள் மனதை பலாத்காரமாக இழுத்துவிடும். அவைகளைக் கடவுள் விஷயமாகச் செலுத்தி மனதை வசமாக்கின் ஞானம் வருவது கஷ்டமல்ல. வாயு தோணியை அடித்துச் செல்வது போல் மனது புத்தியை இழுத்துச் செல்கிறது.

966. முதலில் ஓர் விஷயத்தை நினைக்கிறோம். அதில் பற்று உண்டாகிறது, பிறகு அதை அடைய ஆசை உண்டாகிறது, அது பூர்த்தியாகாவிடில் கோபம் வருகிறது, கோபத்தால் மோஹம், மோஹத்தால் நல்ல விஷயம் மறக்கிறது, அத

னுல் புத்தி அழிகிறது, அதனுல் நமக்கு நாசமுண்டாகிறது. ஆதலின் பகவானை நினை. மற்றதை நினையாதே.

967. ஒன்றிலும் பற்றில்லாமல் இந்திரியங்கள் வேலையைச் செய்தால் புத்தி தெளிந்திருக்கும். புத்தி தெளிந்தால் துக்கம் ஒழியும். புத்தி தெளியாவிடின் ஆத்ம ஞானம் வராது. அதில்லாதவனுக்கு சாந்தியில்லை. சாந்தியில்லாதவனுக்கு ஸுகமேது? ஆசையையும் அஹங்காரத்தையும் விட்டவனுக்கே ஸுகம்.

968. ஸாமான்ய மனிதர் எந்த விஷயத்தை அறியாமல் இருள் சூழ்ந்த இரவில் தூங்குவதுபோல் இருக்கின்றனரோ, அந்த பிரும்ம விஷயத்தை நன்கறிந்து ஞானி பகல்போல் விழித்திருக்கிறுன். எதில் ஜனங்கள் பகல்போல் ப்ரகாசமாக விழித்து வியவஹாரங்கள் செய்கின்றனரோ அந்த லௌகிக வியவஹாரங்களில் ஞானி இரவென்றெண்ணி ஒன்றுமறியாது உறங்குகிறுன்.

969. ஸமுத்திரத்தில் நதிகள் விழுந்து மறைவது போல் அசஞ்சலமான எவனிடத்தில் ஆசைகள் வந்துவிழுந்து மடிகின்றனவோ அவனே சாந்தியை யடைவான். விஷயாசை கொண்டவன் ஒருபோதும் சாந்தியடையான்.

## 3. கர்ம யோகம். 43.

970. கர்மாவைவிட ஞானம் மேலெனில் கோரமான கர்மாவில் என்னை ஏன் தூண்டுகிறீர் என அர்ஜுனன் கேள்வி. கர்மாவிற்கேற்றவர் சிலர். ஞானத்திற்கேற்றவர் சிலர். கேவலம் கர்மாவைச் செய்யாமலிருப்பதாலேயே ஒருவன் முக்தி பெறமுடியாது. கேவல ஸன்யாஸத்தாலும் ஸித்தி பெறுதலரிது. கர்மா பாபத்தை அகற்றும். பிறகு ஞானம் பெறக்கூடும்.

971. எவனும் ஒரு நிமிஷமேனும் ஏதேனும் ஓர் கர்

மாவைச் செய்யாமலிருப்பதில்லை. ப்ரகிருதியால் தூண்டப் பட்டு கர்மாவைச் செய்தபடியே இருக்கிறான். கை கால் முத லியவைகளைக் கட்டி ஓரிடத்தே உட்காருபவன், மற்ற இந்திரி யமும் மனமும் கர்மாவைச்செய்வதால் வேஷக்காரனே அன்றி அவன் உண்மையாகக் கர்மாவை விட்டவனல்ல.

972. மனதால்மற்ற இந்திரியங்களை அடக்கி பலத்தில் பற்றில்லாமல் வாக்கு, கை, கால் முதலானவைகளால் கர் மாவைச் செய்பவன் மேலானவன். ஆதலின் உனக்கு சாஸ் திரங்கூறிய கர்மாவைச் செய் ; விடாதே. அதைச் செய் யாவிடின் உனது உடல் எங்ஙனம் நிலைக்கும்?

973. விஷ்ணுவே யக்ஞ மெனப்படுவர். அந்த பகவ தர்ப்பணமாகச் செய்யுங்கர்மா பந்தத்தைஅளிக்காது. மற்றது பந்தத்தை உண்டு பண்ணும். ஆதலின் பற்றற்று கர்மாவைச் செய். பிரம்மா ப்ரஜைகளுடன் யக்ஞத்தையும் படைத்து "இது உங்களுக்குக் காமதேனு,இதனால் தேவர்களைப் பூஜித்து அவர்மூலம் வேண்டியதைப் பெறு" என்றார். தேவருக்கு நாமும் நமக்கு தேவரும் பரஸ்பரம் உணவளித்து முடிவில் நாம் மோக்ஷம்பெற வேண்டும்.

974. தேவார்ப்பணம் செய்யாமல் அவரளித்த உண வை உட்கொள்பவன் திருடனாவான். அவர்களுக்கு நிவேத னம் செய்த மிகுதியை உண்டால் ஸகல பாபமும் அகலும். தனக்காக பாகம் செய்து புஜிப்பவன் புஜிப்பது உணவல்ல. அது பாபமே.

975. ப்ராணிகள் ஜீவிப்பது அன்னத்தால், அன்னம் மழையால் உண்டாகிறது, மழை யக்ஞத்தால், யக்ஞம் கர்மா வால், கர்மா வேதத்தால், வேதம் பிரும்மத்தால் உண்டுபண் ணப்பட்டது. இது ஓர் சக்ரம்போல் சுழன்று வருகிறது. இதைத் தழுவாதவன் பாபி. அவன் பிறந்து வாழ்தல் வீணே.

976. கடமை எனக் கர்மாவைச் செய்து பகவதர்ப்

பணம் செய். இப்படிச் செய்து சித்தபரிபாகத்தால் ஞானத்தை அடைந்து ஜநகாதிகள் மோக்ஷம்பெற்றனர். ப்ரும்ம ஸாக்ஷாத்காரமாகி க்ருதார்த்தனுக ஆனுல் கூட, கர்மாவை விடாதே. ஏன்? நீ மேலானவன் ஆதலின் உன்னைப் பார்த்து ஞானமற்ற ஸாமான்ய உலகத்தவர்கூட கர்மாவை விட்டு விடுவர். அவர் நன்மைக்காகவாவது கர்மாவைச் செய்.

977. கர்மாவினுல் (க்ருஷ்ணனுன) எனக்கு ஆவதென்ன? போவதுதான் என்ன? ஆயினும் சோம்பலற்று நான் கர்மாவைச் செய்வதைப் பார்? செய்யாவிடின் என்னைப் பார்த்து எல்லோரும் அதை விட்டு விடுவர். உலகம் அழிய நானே காரணமாவேன். அஞ்ஞானி செய்வதுபோல் ஞானியுங்கூட கர்மாவைச் செய்ய வேண்டும். கொஞ்சம் அச்ரத்தையாக ஞானி செய்தால்கூட அவிவேகி "கர்மா உபயோகமில்லையோ" என்று புத்தி கெட்டு ஞானமும் கர்மாவுமில்லாமல் அழிவான். அவன் புத்தியை பேதிக்காதே.

978. முக்குணங்களின் ஸம அவஸ்தையான ப்ரக்ருதி செய்யும் வேலையை மூடன் நான் செய்கிறேன் என்கிறுன். உண்மை உணர்ந்தவன் தனக்கு யாதொரு ஸம்பந்தமுமில்லை என்றிருக்கிறுன். ஆதலின் முன்னவன் துக்கத்தையும் பின்னவன் சுகத்தையுமடைகிறுன்.

979. பற்றைவிட்டு பகவதர்ப்பணமாகக் கர்மாவைச் செய். இது என் மதம். ச்ரத்தையுடன் இதைச் செய்பவர் கர்மபாசமற்றவர் ஆவர். அவிவேகி இதை அனுஷ்டிக்க மாட்டான். ஞானியாக ஆனுலும்கூட, மனிதன் தன் பூர்வ கர்ம வாஸனைக்கேற்றபடியே தான் நல்ல கர்மாவையோ கெட்ட கர்மாவையோ செய்வான். அவனை யார் தடுப்பது?

980. ராகம் த்வேஷம் என்ற இவ்விரண்டே இந்திரியங்களைத் தூண்டி ஸத்கர்மா அல்லது அஸத் கர்மாக்களைச் செய்யச் சொல்கின்றது. வழியில் திருடனிருப்பதுபோல், ஸத்

கதியை அடையும் வழியில் இவை குறுக்கே நிற்கின்றன... அதற்கு வசமாகாமல் புருஷப்ரயத்தனத்தால் வாஸனைகளையும் ராக த்வேஷங்களையும் ஜயி.

981. புண்யம் செய்து பரதர்மத்தை நன்றாக அநுஷ்டித்தாய். அதைவிட நீ கொஞ்சம் குறைவாக அநுஷ்டித்தாலும் உனக்கு சாஸ்திரங்கூறிய ஸ்வதர்மமே சிறந்தது. உன் தர்மத்தைச் செய்து அதனால் நீ இறந்தாலும்கூட ச்லாக்யமே. பரதர்மம் நரகத்தையே அளிக்கும். ஆதலால் ஸ்வதர்மத்தை விடாதே. பரதர்மத்தைத் தொடாதே.

982. இஷ்டமில்லாவிடினும் வேலைக்காரன், அரசன் ஆணை என்றால் அதைச் செய்தே தீரவேண்டும் அல்லவா? இதே போல் நமக்கிஷ்டமில்லாவிடினும் நம்மைப் பலாத்காரமாகப் பாபத்தை ஒருவன் செய்விக்கிறான். அவன் யார்? ரஜோகுணத்தாலுண்டானவன். அவன் பெருவயிறன். மஹா பாபி "காமன் கோபன்" என்ற வைரி அவன். புகை அக்னியையும், மலம் கண்ணாடியையும், கர்ப்பப்பை கர்ப்பத்தையும் மறைப்பதுபோல் இக்காமன் ஞானத்தை மூடுகிறான்.

983. இந்திரியம் மநஸ் புத்தி ஆகிய இவ்விடங்களில் அக்காமம் தங்கி, ஞாநத்தைச் சூழ்ந்து, ஜீவனை மயக்குகிறது. ஆதலால் இதன் ஆச்ரயமான இந்திரியங்களை முதலில் அடக்கு. இந்திரியங்களைவிட மனமும் மனதைவிட புத்தியும் புத்தியை விட ஜீவனும் சிறந்தது. அந்த ஆத்மாவைச் சுத்தமான மனதாலறிந்து சத்ருவான காமனை ஜயி.

## 4. கர்ம யோகம். 42.

984. யோகபலத்துடன் கூடிய க்ஷத்ரியர் உலகை நன்கு காப்பாற்றக்கூடும் என்றெண்ணி இந்த ஞானகர்மயோகத்தை ஸூர்யனுக்குச் சொன்னேன். அவர் மனுவுக்கும், மனு இக்ஷ்வாகுவுக்கும் சொல்லி பரம்பரையாக இந்த வித்யை, உலகில்

பரவியது. ஆனால் துர்பலமானவர்களை அடைந்து இது மறைந்தது. நண்பனும் பக்தனுமா யிருப்பதால் ரஹஸ்ய மான இதை உனக்கு உபதேசித்தேன் என்றார் கிருஷ்ணன்.

985. வஸுதேவர் குமாரரான தாங்கள் இப்போதுண் டானவர். ஸூர்யன் உலக ஸ்ருஷ்டியின் ஆரம்பத்தில் உண் டானான். அவருக்கு நீர் ஆதியில் உபதேசித்தது எப்படி? உனக்கும் எனக்கும் எண்ணிறந்த ஜன்மங்கள் உண்டு. அவை களை யானறிவேன். பிறப்பு இறப்பு அற்றவனானாலும் நானே எல்லாவற்றிற்கும் ஈசனாயிருந்தும் என் மாயையைக்கொண்டு, தர்மம் வாடி அதர்மம் ஓங்கும்போது ஸாதுக்களைக் காக்கவும் துஷ்டர்களை அடக்கவும் தர்ம ஸ்தாபனம் செய்யவும் யுகந் தோறும் நான் பிறக்கிறேன்.

986. இப்படி என்பிறப்பின் உண்மையறிந்து ஆசை பயம் கோபம் முதலியவைகளை விட்டு என்னையே ஆச்ரயித்து அநேகர், ஞான தபஸால் சுத்தர்களாகி, மோக்ஷமடைந்த னர். யார் எந்த எண்ணத்துடன் என்னை உபாஸிக்கின்ற னரோ அப்படியே அவர்களுக்கு அந்தபலத்தை அளிக்கி றேன். எந்த வழியாகச் சென்றாலும் என்னிடந்தான் எல் லோரும் வருகின்றனர்.

987. கோரியபலனை அளிப்பதற்குத் தாங்கள் காத் திருக்க, ஏன் எல்லோரும் மோக்ஷம் பெறலாகாது? இந்திராதி தேவர்களைக்குறித்துக் கர்மாவைச் செய்தால், அது சீக்கிரம் ஸ்வர்க்காதிபலத்தைக் கொடுக்கிறது. அதையே விரும்புகின் றனர். பலகாலங்கழித்து மோக்ஷத்தை அளிப்பதால் என்னை வேண்டுவதில்லை.

988. வர்ணாச்ரம தர்மத்தை அநுஷ்டிப்போர் எத னால் உமது வழியைப் பின்பற்றியவராவர்? நானே நாலுவர்ண ங்களையும் படைத்தவன். ஜன்மாந்தரீய ஸத்வகுணம் பிரதான மானவனைப் பிராமணனைப் படைத்து, சமதமாதி குணங்க-

-ளேயும், யக்ஞாதி கர்மாக்களேயும் விதித்தேன். ஸத்வ உபஸர் ஜன ரஜோகுணப்ரதானமானவனை க்ஷத்ரியனாக அமைத்து செளர்யம் தேஜஸ் முதலிய குணங்களேயும் பாலநம் *முதலிய கர்மாவையும் விதித்தேன். தம உபஸர்ஜன ரஜஸ் ப்ரதா னமானவனை வைச்யனுக்கி க்ருஷி முதலியவைகளேயும் விதித் தேன். ரஜஸ் உபஸர்ஜன தமஸ் ப்ரதானமானவனைச் சூத்ர னுக்கி சுச்ருஷை முதலிய கர்மாவையும் விதித்தேன். ஆனால் உண்மையாக, செய்வது என் தொழிலல்ல, அது மாயையின் வேலையே.

989. நான் என்ற அஹங்காரமற்றுச் செய்கிற கர்மா நம்மைத் தீண்டாது. கர்மாவின் நற்பலமும் வேண்டாமென உணர்ந்து முமுக்ஷுக்கள்கூட கர்மாவைச் செய்தனர். ஆத லின் நீயும் முன்னோர் செய்துவந்த கர்மாவைச் செய். கர்மா என்பது எது? என அறியாமல் மேதாவிகள்கூட மோஹிப் பார்கள்; ஆதலால் கர்ம ரஹஸ்யத்தைச் சொல்கிறேன் கேள்.

990. கை கால்களே அசைத்தல் கர்மா என்றும் அசை வில்லாமை அகர்மா என்றும் எண்ணுதே. சாஸ்திரத்தில் விதிக்கப்பட்டது கர்மா. தடுக்கப்பட்டது விகர்மா. ஒன்றும் செய்யாமலிருத்தல் அகர்மா. இம்மூன்றையும் நன்கு அறிய வேண்டும். கர்மகதி வெகு ஸூக்ஷ்மமானது. பற்றற்று ஒரு வன் செய்யும் கர்மா, பயனையளிக்காததால் கர்மா அல்ல அது. மனதை வியாபாரம் செய்யவிட்டு கை கால்களே ஒருவன் அசைக்காமலிருந்தாலும் அது கர்மாவே யாகும். இதன் உண் மையை அறிபவன் எல்லா கர்மாவையும் செய்தவனாவான். பலத்தில் பற்றைவிட்டு, நித்ய த்ருப்தனாக காம ஸங்கல்பங் களில்லாமல் ஒருவன் கர்மாவைச் செய்தாலும் ஞானாக்னி அக்கர்ம பந்தத்தைத் தஹித்துவிடுவதால் அப் பண்டிதன் கர்மாவைச் செய்யாதவன்போல்வே பாசமற்றவன்.

991. சரீரம் அழியாமலிருப்பதற்காக மாத்திரம் ஞானி

பிக்ஷாடனம் செய்வான். உலகத்தவர் கண்ணில் அவன் கர்மாவைச் செய்பவன் போல் காணப்பட்டாலும் அவன் உண்மையாக கர்த்தாவல்ல. அதிலும், தானாக வந்ததைக்கொண்டு ஸந்தோஷமடைந்து, சீதோஷ்ணாதிகளை மதியாமலிருப்பவனைக் கர்மா என்ன செய்யும்?

992. ஞானமுள்ளவன் யக்ஞாதிகர்மாவைச் செய்தாலும் யக்ஞமும், ஹவிஸ்ஸும், ஹோமமும், செய்பவனும், அக்னியும், இவைகளால் உண்டாகும் பயனும், எல்லாம் ப்ருஹ்மமென்றே நினைப்பான். ஆதலின் லோகஸங்க்ரஹத்திற்காகச் செய்யும் கர்மா அவனை எவ்வகையிலும் பந்தப்படுத்தாது.

993. கர்மாவில் பற்றுடையோர் தேவயாகம் செய்கின்றனர், ஞானிகள் ப்ரஹ்மாக்னியில் "தான் நிருபாதிகனான ஆத்மா" என்ற எண்ணமான யக்ஞத்தைச் செய்கின்றனர். சிலர் அடக்கமெனும் அக்னியில் இந்திரியங்களையும், சிலர் இந்திரியாக்னியில் சப்தாதி விஷயங்களையும், சிலர் ஆத்மாக்னியில் இந்திரிய வியாபாரங்களையும், ப்ராண வியாபாரங்களையும், ஹோமம் செய்கின்றனர்.

994. யக்ஞம் பலவகைப்படும். ஸத்பாத்ரத்தில் தானம் செய்வது த்ரவ்யயாகம். தபஸ்செய்வது தபோயக்ஞம். ப்ராணாயாமாதியோகம் செய்வது யோக யக்ஞம். நியமமாக வேதாத்யயநம் செய்வது ஸ்வாத்யாய யக்ஞம். சாஸ்த்ரார்த்தங்களை உணர்வது ஞான யக்ஞம். இவ்வெல்லா யாகங்களும் பாபத்தை அகற்றும். யக்ஞம்செய்து விஹிதமான அன்னத்தை புஜிப்போர் முமுக்ஷுவாயிருந்தால் ப்ருஹ்மலோகம் செல்வர்.

995. யக்ஞமில்லாதவனுக்கு இவ்வுலகே இல்லை எனில் மற்றது ஏது? த்ரவ்ய யக்ஞத்தைவிட ஞான யக்ஞம் சிறந்தது. அந்த ஞானத்தைத் தத்வமுணர்ந்த குருவை அண்டி, வணக்கமாக நமஸ்கரித்து சுச்ரூஷை செய்து ஸந்தேஹங்

களைக் கேட்டுத் தெரிந்துகொள். அதை அறிந்தால் மோஹம் அருகில் அணுகாது. உன்னிடத்தே அகில பூதங்களையும் காண்பாய்.

996. மஹாபாபியானாலும் ஞானம் எனும் ஓடம் கிடைத்தால் அதைக்கொண்டு கரை ஏறலாம். ஸமித்துக்களை அக்னி எரிப்பதுபோல் ஸர்வ கர்மாக்களையும் ஞானக்னி தஹித்து விடும். ஞானத்தைப் பெற, கர்மயோகம், ஸமாதி, ச்ரத்தை, இந்திரிய நிக்ரஹம் இவை ஸாதநங்களாகும்.

997. அக்ஞன், குருவார்த்தையில் ச்ரத்தை இல்லாதவன், ஸம்சயாத்மா ஆகிய இவர்கள் கெடுவர். ஸம்சயாத்மாவிற்கு இந்த லோகமே இல்லை; ஸுகமுமில்லை. ஆதலால் அஞ்ஞானத்தால் வந்த ஸந்தேஹத்தை ஞானமெனும் கத்தியால் அறுத்து நிஷ்காம்யமாக கர்மாவைச் செய்.

## 5. ஸந்யாஸ யோகம். 27.

998. கர்ம ஸன்யாஸம், கர்ம யோகம் ஆகிய இவ்விரண்டில் சிறந்தது எது? இரண்டும் மோக்ஷத்தை அளிக்க வல்லதே. ஆயினும் கர்மயோகம் மிகச் சிறந்ததே. ஆசையும் த்வேஷமும் இல்லாமல் ஸுக துக்கங்களை, ஸமமாக எண்ணி கர்மாவைச் செய்பவன், ஸன்யாஸியே ஆவான். ஸன்யாஸம் கர்ம யோகம் இதில் ஒன்றை நன்றாக அவலம்பித்தாலும் இரண்டின் பயனையும் அநுபவிப்பான்.

999. இரண்டையும் வேறாக எண்ணுபவன் விஷயமறியாத பாலன், அவன் ஸன்யாஸத்தைப் பெறுவது சுலபமல்ல. ஈச்வரார்ப்பண புத்தியால் கர்மாவைச் செய்பவன் விரைவில் ஞானத்தைப் பெறுவான். கர்மயோகி சுத்த ஸத்வனாய் தேஹேந்திரியங்களை ஜயித்து ஞானத்தைப் பெற்று தன்னைப்போல் உலகம் நல்வழியிற் செல்வதற்காக கர்மாவைச் செய்வான். அவனைப் பந்தம் அணுகாது.

1000. பார்ப்பது, கேட்பது, முகருவது, தொடுவது, புஜிப்பது, போவது, தூங்குவது முதலிய வியாபாரங்கள் ஆத்மாவைச் சார்ந்தவைகளல்ல. இவை தேஹேந்திரியாதி வியாபாரங்கள் என்றெண்ணி, பரமாத்மாவின் ஆக்ஞையான கர்மாவைப் பற்றற்று முக்கரணங்களாலும் செய்பவர் ஞானியாவர். ஜலத்திலேயே இருந்தாலும் தாமரை இலை ஜல ஸம்பந்தமில்லாமல் இருப்பதுபோல், கர்மாவைச் செய்தாலும் கர்மலேசம் அவரை அண்டாது.

1001. கர்மபலத்தில் ஆசை இல்லையேல் பந்தமில்லை, ஆசை வைத்தால் பந்தமுண்டு. கண்கள், மூக்கு, காதுகள், வாய், ஆக தலையில் ஏழு த்வாரங்களும், மலஜலத்வாரம் இரண்டுமாக ஒன்பது த்வாரமுள்ள நமது சரீரம் ஓர் பட்டணமாம். இதில், மனதால் ஸர்வ கர்மாக்களையும்விட்டு ஜிதேந்திரியன் ஸுகமாக வஸிப்பான்.

1002. பகவான் நீ இதைச் செய் என்று சொல்வதில்லை கர்மாவைப் படைப்பதுமில்லை, கர்ம பலத்தை யளிப்பதுமில்லை; ஒருவன் பாபத்தை யகற்றுவது ஒருவனுக்குப் புண்யத்தைக் கொடுப்பதுமில்லை. ஸ்வபாவமாக இவை நடக்கின்றன. அஞ்ஞானத்தால் சிலர், பகவான் இதைச் செய்வதாக ஏமாறுகின்றனர். ஞானத்தால் அஞ்ஞானத்தை ஒழித்தவருக்கு ஸூர்யனைப்போல் தத்துவம் விளங்கும்.

1003. ப்ருஹ்மத்தினிடமே புத்தியை வைப்பது, அதே ஆத்மா என்ற எண்ணம், ப்ருஹ்மத்தினிடமே ப்ரவேசித்தல், அதே மேலான தென்றெண்ணல், ஆகிய இந்த வியாபாரமுடையவரே, பாபத்தை நீக்கி திரும்பா நிலையைப் பெறுவர். வித்யையும் விநயமுமுள்ள ப்ராம்மணனிடத்திலும் ரஜோகுணமுள்ள கோவினிடமும், தமோகுணமுள்ள யானை, நாய் சண்டாளன் இவர்களிடமும் ஒரே மாதிரி ப்ருஹ்மத்தைக் காண்பவனே பண்டிதன் ஆவான்.

1004. யோக்யதையுள்ளவர்களையும், இல்லாதவர்களையும் ஸமமாகப் பூஜித்தல் பாபமன்றோ ? ஸம்ஸாரி அப்படிச் செய்தால் பாபமே ஆகும், ஞானி அப்படிச் செய்தால் தோஷமில்லை. ஏன்? ப்ருஹ்மம் குற்றமற்றது. அது எங்கும் ஸமமாக இருக்கிறது. அந்த ப்ருஹ்மத்தினிடம் அவன் மனம், லயித்திருப்பதால் இவன் தோஷமற்றவன் ஆவான், ஞானி ப்ரியத்தைக்கண்டு ஸந்தோஷிப்பதில்லை. அப்ரியத்தைக் கண்டு வருந்துவதும் இல்லை.

1005. விஷய ஸுகமனைத்தும் துக்கத்தையே அளிக்கும். அது க்ஷணம் தோன்றி விரைவில் மறைகிறது. ஆதலின் அதில் ஞானி ஆசைகொள்வதில்லை. குறைவற்ற ஆநந்தத்தை அளிக்கும் ப்ருஹ்மத்தினிடம் ரமிப்பான். இஷ்டமான வஸ்து ஸமீபத்தில் வந்துவிட்டால் மயிர்க்கூச்சல்,கண்ணும் மூக்கும் மலர்தல், மனதை மயக்குதல் முதலியவைஉண்டாகும். இவை காமத்தின் வேகமாம். ப்ரதிகூல வஸ்துவைக் கண்டாலும் கேட்டாலும் நினைத்தாலும் உடல் நடுக்கம், வேர்வை, உதட்டைக் கடித்தல், கண் சிவத்தல் முதலியவை உண்டாகும். இவை கோப வேகம் எனப்படும். இவைகளைப் பொறுத்து இவை தோன்றாமல் செய்பவனே சுகத்தை அடைவான்.

1006, தன்னுள்ளே தங்கித் தானாக நின்ற ஆத்மாவினிடம் பேரன்பு கொண்டவன், ஸம்சயங்களை ஒழித்து ஸகல ப்ராணிகளுக்கும் ஹிதனாக இருப்பான். காம க்ரோதங்களைவிட்டு ப்ருஹ்மாநந்தத்தைப் பெறுவான்.விஷயங்களை மறந்து இருபுருவங்களிடையே கண்ணைவைத்து, ப்ராணாபானங்களை ஸமமாக மூக்கினிடையே ஸஞ்சரிக்கும்படி செய்து ப்ருஹ்மத்தை த்யானம் செய்பவன் முக்தனே ஆவான்.

## 6 த்யாந யோகம். 47.

1007. பலத்தில் ஆசைவைக்காமல் கர்மாவைச் செய்கிறவன் ஸன்யாஸியும் யோகியும் கர்மியுமாவான். யோகத்தை அடைய ஆசையுள்ளவனுக்குக் கர்மா ஸாதனமாகும். யோகிக்குக் கர்மாவைவிட்டு த்யானம் செய்தலே ஸாதநமாகும். ஸகல ஆசைகளையும் ஸங்கல்பங்களையும் விட்டவனே யோகாரூடன் எனப்படுவன்.

1008. ஸம்ஸாரஸாகரத்தில் முழுகிய ஆத்மாவை நாமே கரை ஏற்றவேண்டும். கீழே தள்ளலாகாது. நமக்கு நாமே சத்ருவும் மித்ரனும் ஆவோம். இந்திரியங்களை ஜயித்தால் நமக்கு நாம் மித்ரனுவோம். ஜயிக்காவிடில் சத்ருவாவோம். ஜிதேந்திரியனுக்கு ஆத்மா ப்ரத்யக்ஷமாகிறது. ஆத்மாவை தரிசித்தவன் ஸுகதுக்கங்களையும் மாந அவமானங்களையும் ஸமமாக எண்ணுவான்.

1009. சாஸ்திரங்கூறியபடி தத்துவத்தை அறிவது ஞானம் ஆகும். அதை அநுஷ்டானத்தில் கொண்டுவருவது விஞ்ஞானமாகும். இவைகளைப் பெற்ற யோகி, மண் கட்டியையும் ஸ்வர்ணத்தையும் ஸமமாக நினைப்பான். ப்ரத்யுபகாரத்தை எதிர் பாராமல் உபகரிக்கும் ஸுஹ்ருத், மித்ரன், சத்ரு, உதாஸீநன், மத்யஸ்தன், தனக்குப் பிடிக்காதவன், பந்து, ஸாது, பாபி இவர்களிடத்தில் ஸமமாயிருக்கும் யோகியே மிகச் சிறந்தவன் ஆவான்.

1010. ஸன்யாஸாச்ரமத்தைப் பெறு. ஏகாந்தமாயும் சுசியாயுமுள்ள இடத்தில் மனதை அடக்கி உட்காரு. அதிக உயரமும் பள்ளமும் இல்லாத ஸ்திரமான ஆஸனத்தில் தர்ப்பைமேல் அஜிநத்தையும் அதன்மேல் வஸ்திரத்தையும்போட்டு அதில் உட்கார்ந்து மனதை ஏகாக்ரமாகச் செய், இந்திரிய மனோ வியாபாரங்களை அடக்கி ஆத்ம சுத்திக்காக யோகாப்

யாஸம் செய். அப்போது உடல் கழுத்து தலை இவைகளை ஸமமாக வைத்து சலிக்காமல் மற்றதைப் பாராமல், நுனி மூக்கையே பார்க்க வேண்டும்.

1011. இப்படி மனதை அடக்கியவனுக்குப் பயனென்பது ஏது? குருவுக்குப் பணிவிடை செய். மனோவிருத்தியை அடக்கு. பரமனிடத்தே மனதைவை. பரமனைவிட உயர்ந்த பொருளில்லை என்று நினை. த்யானத்தில் அமரு. பரமாத்மாவை அடைவதென்ற மோக்ஷானந்தத்தைப் பெறுவாய்.

1012. மிதமிஞ்சி உண்பவனும் மிதமிஞ்சி உறங்குபவனும் யோகஸித்தியைப் பெறமுடியாது. ஒன்றுமே புஜிக்காதவனும் கொஞ்சமாவது தூங்காதவனும் யோகத்தைப் பெறுன். ஆதலால் ஆஹாரம் தூக்கம் வேலை முதலியவைகளில் மிதமாயிரு. கறி காய்களுடன்கூடிய அன்னத்தால் அரை வயிற்றையும் தீர்த்தத்தால் கால்வயிற்றையும் நிரப்பி வாயுஸஞ்சாரத்திற்காக கால் பாகத்தைக் காலியாய் வைத்திரு.

1013. மற்ற விஷயங்களிடம் செல்லவிடாமல் மனதை அடக்கிப் பரமனிடத்திலேயே வைத்தவன் யுக்தன் எனப்படுவான். காற்றில்லா விடத்திலுள்ள தீபசிகையைப் போல், மனம் பரமனைவிட்டு அசையாமலிருந்தால் அப்போது நன்கு ஆத்மாவைத் தர்சிக்கலாம். பேரானந்தத்தைப் பெறலாம். மோக்ஷ ஸுகத்தை இந்திரியங்களால் அறியமுடியாது. அச்சுகத்தைப்பெற்றுவிட்டால் ஆத்மாவினிடமிருந்து நழுவி பிறப்பு இறப்புகளைப் பெறவேண்டாம்.

1014. ஆத்ம லாபத்தைவிட உயர்ந்த லாபம் வேறில்லை. அதைப் பெற்றவனைப் பலமான துக்கமும்கூட சலிக்கும்படி செய்ய முடியாது. துக்கலேசமில்லாத அந்த ஆநந்தத்தைப் பெறவேண்டுமானால், மனம் தெளிய வேண்டும். ஸங்கல்பத்தால் பற்பல ஆசைகள் மனதில் உண்டாகும். அவைகளைப் புத்திபலத்தால் அடக்க வேண்டும். கிஞ்சித்கிஞ்

சித்தாக, விஷயத்தில் ஓடும் மனதை ஆத்மாவினிடத்திலே செலுத்தி மற்றதை மறக்க வேண்டும்.

1015. மனதை ஜயித்து ஆத்ம ஸந்தோஷத்தைப் பெற்றவன் ஸகல உலகிலும் தானிருப்பதாகவும், தன்னுள்ளே உலகிருப்பதாகவும் எங்கும் ஏக உருவாய் ஆத்மா இருப்பதைப் பார்ப்பான். எவன், எங்கும் பரமனையும் பரமனையே எல்லாமாகவும் பார்க்கிறானோ அவன் எப்பொழுதும் ஆத்மாநந்தத்தைப் பெறுவான். தனக்கிஷ்டமானதே பிறருக்கும் இஷ்டமானது, தனக்குப் பிரியமில்லாததே மற்றவருக்கும் பிரியமில்லாதது என்று நினைப்பான் ஞானி.

1016. மனம் சஞ்சலமானது. சரீர இந்திரியங்களைச் சிதற அடிக்கும். அது நல்ல பலமுள்ளது. வாயுவைப்போல் கட்ட முடியாதது என்பது உண்மையே. ஆனால் ப்ரதி தினம் கிஞ்சித்கிஞ்சித்தாகப் பகவானை நினைத்து அப்யாஸம் செய். போகவஸ்துவில் உள்ள தோஷத்தை நினைவூட்டு. அதில் வைராக்யத்தையும் ஊட்டினால் மனதை அடக்குவது கஷ்டமான கார்யமல்ல.

1017. யோகத்தில் சிரத்தையுடைய ஒருவன் யோகத்திலிருந்து மனம் நழுவினால், கர்ம யோகம் ஆக இரண்டுமில்லாமல் அழிவானோ? அவன் கதி யாது? அவன் அழியான். நற்கர்மாவைச் செய்தவன் ஒருநாளும் துர்க்கதியை அடைவதில்லை. புண்ய கர்மாவைச் செய்ததற் குரிய புண்ய லோகங்களை அநேக நாள் அநுபவித்துச் சுத்தமான அரசன் குலத்திலோ அல்லது வாஸனைக்கேற்றபடி தரித்ரனான யோகியின் வம்சத்திலோ பிறப்பான். இப்பிறப்பு கிடைப்பது பரம துர்லபமானது.

1018. விட்ட குறையானால் அடுத்த ஜன்மாவில் இவன் வேண்டாவிடினும் பூர்வ வாஸனையால் யோகம் தானே கைகூடும். ஆத்மாவை அறிய ஆவல்கொண்டு கொஞ்சம்

முயற்சி செய்தவன்கூட, கர்மத்தால் கிடைக்கும் உயர்ந்த ஸுகத்தைப் பெறுவான். அதிக முயற்சி செய்து நித்ய கர்மாவை நிஷ்காம்யமாகச் செய்து பாபத்தை அகற்று. இங்ஙனம் அநேக ஜன்மங்களில் சேர்ந்த புண்ய ராசியால் ஞானம் உதயமாகும்.

1019. தபஸ்விகளைக் காட்டிலும், சாஸ்த்ர ஞானம் பெற்றவனைக் காட்டிலும், கர்மிகளைக் காட்டிலும்கூட யோகி சிறந்தவன் ஆவான். ஆதலால் ஞானத்தைப் பெற முயற்சி செய். ருத்ரன் ஆதித்யன் முதலியவர்களை த்யானம் செய்பவரைவிட வாஸுதேவனை த்யானம் செய்து ச்ரத்தையுடன் ஸேவிப்பவன் பகவானுக்கு மிகப்ரியமானவன்.

## 7 ஞான விஞ்ஞான யோகம். 30.

1020. ஆத்மாவை அறிய ஆசை கொண்டால், அதனிடமே பற்றுவை. அதையே ஸாதநமாகக் கொள். அதை அறிந்தபின் அறியத்தக்கது வேறொன்றுமில்லை. இந்த ஸித்தி பெற ஆயிரத்தில் ஒருவரே முயற்சிப்பர். முயற்சிசெய்யும் ஸித்தரில் ஒருவரே ஆத்மாவை நன்கு உணர்பவர் ஆவர்.

1021. பகவானுக்கு இரண்டு ப்ரகிருதிகள் உண்டு. பஞ்சபூதங்களின் ஸூக்ஷ்மமான தன்மாத்ரைகள் ஐந்து, மநதிற்குக் காரணமான அஹங்காரம் ஒன்று, அஹங்காரத்திற்குக் காரணமான மஹத்தத்வம் ஒன்று, அவித்யையுடன் கூடிய அவ்யக்தம் ஒன்று, ஆக இவ்வெட்டும் ஸம்ஸாரத்தை விளைவிக்கும் ப்ரகிருதி ஆகும். இது நிகிருஷ்டமான ப்ரகிருதியாம். உலகைத் தரிக்கும் ஜீவ வடிவமான சுத்த ப்ரகிருதி மற்றொன்று.

1022. இரண்டு ப்ரகிருதி ரூபமான பகவானிடமிருந்தே உலகம் தோன்றி அவரிடமே ஒடுங்குகிறது. ஒவ்வொரு வஸ்துவும் நூலில் மணி கோர்க்கப்பட்டிருப்பது

போல் பகவானிடத்தில் அமைந்திருக்கிறது. அவரைத்தவிர வேறு வஸ்து ஏது? ஆதலால் அவரை மறவாதே! உபாஸி.

1023. ஜலத்தின் ரஸம், சந்திர ஸூர்யர்களின் ஒளி, வேதத்தின் ப்ரணவம், ஆகாயத்தின் சப்தம், புருஷரின் பௌருஷம், பூமியின் நல் வாஸனை, அக்னியின் தேஜஸ், பிராணிகளின் ஜீவனம், தபஸ்விகளின் தபஸ், புத்திமானின் புத்தி, தேஜஸ்வியின் தேஜஸ், பலவானின் தேஹத்தைக் காப்பதற்குரிய பலம், ப்ராணிகளிடத்திலிருக்கும் தர்மவிரோதமில்லாத ஆசை, ஆகிய இவைகள் பகவத் ஸ்வரூபமாம்.

1024. எல்லா பூதங்களுக்கும் ஆதி விதையாக இருக்கிறார் பகவான். அவனிடமிருந்தே ஸாத்விகமானதும் ராஜஸமானதும் தாமஸமானதுமான பதார்த்தங்கள் தோன்றுகின்றன. ஆனால் ஸம்ஸாரிகளைப்போல் பகவான் அவைகளுக்கு வசமானவரல்ல. இம்மூக்குணங்களால் மோஹமடைந்திருக்கும் இவ்வுலகம் மூக்குணங்களுக்கு மேலாக இருக்கும் பரமாத்மாவை அறிவதில்லை.

1025. மாயை என்பது பகவானிடமிருந்து இயற்கையாகத் தோன்றி அநாதியாயிருக்கிறது. அதை வெல்ல எவராலும் முடியாது. பகவானையே சரணமடைந்தால், ஸகல ஜகத்தையும் மயக்கும் இந்த மாயையை ஸுலபமாக ஜயிக்கலாம். அந்த மாயையால் மதி மயங்கிய சிலர் ஹிம்ஸைசெய்வது,பொய் சொல்வது முதலிய அஸுரகுணத்தைப் பெற்று பகவானை மறக்கின்றனர். இத்தகையோர் பாபி ஆவர். நரரில் அதமர் ஆவர்.

1026. திருடன் புலி வியாதி முதலியவைகளிடமிருந்து வரும் ஆபத்தை அகற்ற சிலரும், பகவத் ஸ்வரூபத்தின் தத்துவத்தை அறிய சிலரும், தனம், புத்ரன், முதலியவைகளை அடைய ஆசைகொண்ட சிலரும் மோக்ஷத்தை விரும்பி சிலருமாக இந்நாலுவகையிலும் பகவானைப் பக்தர்

ஸேவிக்கின்றனர். இவர்களில் ஞானியே சிறந்தவனாவான். அவனுக்கு ஸ்ரீபகவானும் பகவானுக்கு அந்த ஞானியும் பிரியமானவராக இருக்கின்றனர்.

1027. ஒருவன் அநேக பிறவிகளில், ஞானம் வருவதற்குரிய ஸாதனங்களைச் செய்து, முடிவில் பகவானை வந்தடைகிறான். "ஆத்மாவே எல்லாம்" என அறியும் அந்த மஹாத்மாவைக் காண்பது அரிது. ஜன்மாந்தரத்திலுண்டான ஸம்ஸார வாஸனையால் புத்ரன், செல்வம் முதலியன வேண்டுமென கோரி எல்லோரும் மற்றதேவர்களைப் பூஜிப்பார்கள், ஞானத்தை அளிக்கும் பகவானை ஆச்ரயிப்பதில்லை.

1028. எவர் எவர் எந்த எந்த பலனைக் கோரி எந்த தேவதையை ச்ரத்தையுடன் பூஜித்தாலும் பகவானே அந்த ச்ரத்தையை ஸ்திரமாகச் செய்து பலனையும் கொடுக்கிறார். ஆனால் அந்த பலம் சீக்ரமாக அழிந்துவிடும். அழிவில்லா ஸுகமான மோக்ஷத்தை விரும்புவோர் ஆத்மாவை த்யானம் செய்யவேண்டும்.

1029. யோக மாயையால் மோஹத்தை அடைந்தவர் பகவத் ஸ்வரூபத்தை நன்கு அறிவதில்லை. பகவானும் எல்லோருக்கும் ப்ரகாசமாகத் தோன்றுவதில்லை. பகவான் உலகத்தில் நடந்ததும் நடக்கிறதும் நடக்கப் போகிறதுமான ஸகல விஷயங்களையும் நன்றாக அறிவார். ஆசையாலும் த்வேஷத்தாலும் த்வந்த்வமெனும் சீதோஷ்ணம் சுகதுக்கம் முதலியவைகள் உண்டாகின்றன. மோஹமடைந்தவர் ஆத்மாவைக் காண்பது அரிது ஆகும்.

1030. எவருடைய புண்யம் பழுத்து, பாபம் அகலுகிறதோ, அவரை த்வந்த்வம் அணுகாது. அவர் பகவானை அடைவர். ஜனன மரணங்கள் அவனுக்கில்லை. பிருஹ்மம் கர்மா முதலிய எல்லாவற்றையும் நன்கு அறி, அத்யாத்மம் அதிபூதம் அதிதைவதம் அதியக்ஞம் இந்தஸ்வரூபமாயிருப்ப

வன் பகவான் என்று எண்ணு. மரணகாலத்திலும் பகவானையே நினை. அவரை அடைவாய்.

## 8. தாரகப்ரஹ்ம யோகம். 28

1031. அழிவில்லாமலிருப்பது ஆத்மா. அது நம்முடலில் ப்ரத்யகாத்மாவாக இருக்கிறது, என்று உணர்தல் அத்யாத்மம் எனப்படும். பூதங்களை உற்பத்தி செய்வது என்பது கர்மா என்ற விஸர்க்கமாகும். அழிவுள்ள பிராணிகளைப்பற்றியது அத்யாத்மமாகும். ஆதித்யனுக்குள்ளே இருக்கும் ஹிரண்யகர்ப்பனைப்பற்றிய விஷயம் அதிதைவதமாகும். யக்ஞ வடிவமான விஷ்ணுவைப்பற்றியது அதியக்ஞமாம். இவைகளெல்லாவற்றையும் தேஹத்திலேயே காணலாம்.

1032. அந்த்யகாலத்தில் ஒருவன் எதை நினைத்து உடலை விடுகிருனே அதையே புண்ய பாபத்திற்கேற்றபடி அடைகிருன். பகவானை நினைத்தால் அவரை அடையலாம். ஆதலால் கடைசி காலத்திற்கு நினைவு வரும்படி, எப்போதும் பகவானையே நினை. மனதை ஓர் நிலையில் நிறுத்த அப்யாஸம் செய். சாஸ்த்ராசார்யர்களின் வாக்கை த்யானம்செய். பரம புருஷனை அடைவாய்.

1033. மரண காலத்தில் மனதை அசஞ்சலமாக ஹ்ருதய புண்டரீகத்தில் வசப்படுத்திவை. மேல்நோக்கிச்செல்லும் நாடி வழியாக ப்ராணனை இரண்டு புருவங்களுக்கிடையே வைத்து கவியாய் புராணனாய் ஸர்வஜகத்தையும் ஆள்பவனாய் அணுவாய் சூர்யனைப்போல் ப்ரகாசமாயுள்ள ப்ரும்மத்தைத் த்யானம் செய். அவனையே அடைவாய்.

1034. வேதார்த்தத்தை உணர்ந்தவர் கூறும் அக்ஷரம் என்பதும், வைராக்யமுள்ள ஸன்யாஸிகள் அடைவதும் குரு சுச்ரூஷைசெய்து ப்ரும்மசாரிகள் அடைய ஆவல்கொள்வதும், ஒரே பொருள் ஆகும். அதே ப்ரணவம் எனப்படும்.

உடலை விடும்போது இதை நினைத்து உச்சரிப்பவன் உயர்ந்த கதியை அடைவான். அதற்கு இந்திரியங்களை அடக்கி மனதை ஹ்ருதயத்தில் வைத்து யோகாப்யாஸம் செய்யவேண்டும்.

1035. வேறு ஒன்றையும் எண்ணாமல் பகவானையே எப்போதும் நினைக்கும் யோகி, ஸுலபமாக பரமனை அடைவான். அதை அடைந்தவனுக்கு துக்கம் நிறைந்த பிறப்பு மறுபடி கிடையாது. மற்ற ப்ரஹ்மலோகம் வரையிலுள்ள எல்லாவற்றிற்கும் மறுபிறப்பு உண்டு. நமக்கு இரண்டு ஆயிரம் யுகம் என்பது ப்ரஹ்மாவுக்கு ஓர் தினமாகும். இப்படிக் கால அளவுள்ளதாயிருப்பதால் ப்ரஹ்மலோகம் வரை எல்லாம் அழிகின்றது.

1036. ப்ரஹ்மா தூங்கி எழுந்திருக்கும்போது ஜகத் உண்டாகிறது. அவர் தூங்கும்போது லயிக்கிறது. முன் கல்பத்திலிருந்ததுபோல் அசை பொருளும் அசையாப் பொருளும் நிறைந்த இவ்வுலகம் தோன்றித் தோன்றி அழிந்துவருகிறது. இதில் அழியாமல் அநாதியாய் சிறந்ததாய் விளங்குவது ஒன்றுண்டு. அதே ஆத்மாவாம். அதே உயர்ந்த கதியாகும். அதை அடைந்தவர் மறுபடி பூமிக்குத் திரும்புவதில்லை.

1037. ப்ரஹ்மோபாஸகன் இறந்தவுடன் அக்னி ஜ்யோதிஸ் அஹர்தேவதை சுக்லபக்ஷ தேவதை உத்தராயண தேவதை இவர்களை க்ரமமாகத் தாண்டி ப்ரஹ்மலோகஞ்சென்று ப்ரஹ்மாவுடன் முக்தி பெறுகிறான். திரும்புவதில்லை. கர்மாவைச் செய்தவன் இறந்ததும் தூமதேவதை ராத்ரி தேவதை க்ருஷ்ணபக்ஷ தேவதை இவர்களை க்ரமமாகக் கடந்து சந்த்ரலோகஞ் சென்று ஸுகத்தை அநுபவித்து பூமிக்குத் திரும்புகிறான்.

1038. அநாதியான இவ்விரண்டு வழிகளை அறிந்த யோகி மோஹத்தை அடையமாட்டான். ஆதலால் யோகத்தை மறவாதே. கீழ் சொன்ன யோகத்தை அநுஷ்டித்தால், நன்

ளுக அர்த்தத்துடன் வேதத்தை அத்யயநம் செய்வதாலும் நன்ருக யாகத்தை அநுஷ்டிப்பதாலும் நன்கு தவம் செய்வதாலும் தானம் செய்வதாலும் எந்த புண்யம் வருமோ அதைவிட அதிக பலனை அநுபவிப்பாய்.

## 9. ராஜவித்யா ராஜகுஹ்ய யோகம். 34

1039. ஞான சாஸ்த்ரம் வித்யைகளில் சிறந்ததாகும். அதி ரஹஸ்யமானது. சுத்தமானது. அநுஷ்டிக்க வெகு ஸுகமானது. தேஹத்தையே ஆத்மா என்று எண்ணுபவர் நாஸ்திகரும் பாபியும் அஸுரரும் ஆவர். அன்றியும் அவர் பசு பக்ஷிகளாகப்பிறப்பர். நரகத்தையே அநுபவிப்பர். ஆதலால் ஆத்ம ஸ்ரூவபத்தை நன்கு உணர முயற்சி செய்.

1040. உலகில் ஆத்மா இல்லாத இடம் இல்லை. ஆனால் அது மறைந்திருப்பதால் எல்லோரும் அதை அறிவதில்லை. ஆத்மா எங்கும் இருப்பதால்தான், ஒவ்வொரு ப்ராணியும், நான் நான் என்று சொல்கிறது. ஆகாசம்போல் எதிலும் பற்றில்லாமல் இருக்கிறது ஆத்ம ஸ்வரூபம். ஆகாசத்தில் வாயு ஸஞ்சரிப்பதுபோல் அதனிடம் உலகம் தோன்றி மறைகிறது.

1041. ஸகல ப்ராணிகளும் பகவானது அபராப்ரக்ருதியில் லயமாகி, கல்பந்தோறும் மறுபடியும் உண்டாகின்றன. இவ்வுலகிற்கு அவர் கர்த்தாவானாலும் உதாஸீனனைப்போலிருப்பதால் இவ்வுலகைப் படைக்கும் கர்மாவினால் அவருக்கு யாதொரு லாபமும் நஷ்டமுமில்லை. அவரது தர்சந மாத்ரத்தால் மாயையே நேர்முகமாக உலகைப்படைக்கிறது.

1047. மனிதர்கள் தங்களுக்குள்ளே ஜீவனுய் விளங்கும் பரமாத்மாவை மதிப்பதில்லை. உடலையே ஆத்மாவாக எண்ணுபவர் அஸுரகுணமுள்ளவர் ஆவர். அவர் செயலும் அறிவும் பயனற்றவைகளாம். ஆத்மாவை அறிபவர் தேவ

குணமுள்ளவர் ஆவர். வேறிடத்தில் மனதைச்செலுத்தாமல், அவர்கள் பகவானையே பஜிப்பார்கள். அஸுரகுணத்தை விட்டு தேவகுணத்தைக் கொள்வாயாக

1043. எப்போதும் ஆத்மாவைக் கீர்த்தநம் செய்து சமதமாதிகளால் சிலர் அதை அடைய முயற்சிப்பார்கள். பக்தியுடன் சிலர் ஹ்ருதய கமலத்திலுள்ள அவரை நமஸ்கரித்து உபாஸிப்பார்கள். இவர்கள் த்ருடவிருதர்கள் எனப் படுவார்கள். சிலர் ஆத்மாவை ஞானயக்ஞத்தால் ஒன்றாகவும் இலர் பலவாகவும் உபாஸிப்பார்கள். ஏதாவதொன்றை நீ கைப்பற்றி ஸுகம் பெறு.

1044. பகவானே ச்ரௌதகர்மாவாகவும் ஸ்மார்த்த கர்மாகவாவும் பித்ருக்களுக்கு அளிக்கும் அன்னமாகவும் எல்லோரும் உண்ணும் உணவாகவும் மந்த்ரமாகவும் ஆஜ்யமாகவும் அக்னியாகவும் ஹோமமாகவும் இருக்கிறார் உலகிற்குத் தந்தை தாயாக அவரே இருக்கிறார். அறியத்தக்கவராகவும் ப்ரணவமாயும் ரிக்யஜுஸ் ஸாமமாகவும் கர்ம பலமாகவும் ஸாக்ஷியாகவும் நண்பனாகவு மிருப்பவர் அவரே ஆவர்.

1045. ஸூர்யனாக இருந்து சில கிரணங்களால் காய்வதும், சில கிரணங்களால் மழை பெய்வதும், அம்மழை ஜலத்தைச் சில கிரணங்களால் இழுத்து, எட்டு மாதம் மழையாகச் சில கிரணங்களால் விடுவதும் பகவானே ஆவர். இப்படி தத்வத்தை அறிந்து உபாஸிப்பவன் முக்திபெறுவான்.

1046. யக்ஞ மார்க்கத்தை அவலம்பித்துத் தன் பாபத்தையகற்றி ஸோமபானம் செய்யும் ஸாதுக்கள், பூமியில் எவருக்கும் கிட்டாத விசாலமான ஸ்வர்க்க ஸுகத்தை அநுபவிக்கின்றனர். புண்யம் செலவான பிறகு பூமியில் வந்து பிறப்பர் அவர். போகத்தில் ஆசைகொண்டோருக்கு இக்கதிதான் கிடைக்கும்.

1047. தன் குடும்பயோக க்ஷேமத்தையும் மனைவி மக்

களையும் தன் உடலையுங் கூட கவனியாமல் பகவானையே த்யானம்செய்து வருபவரது யோகக்ஷேமத்தை அவர் கவனித்துக்கொள்கிறார். பரமாத்ம வடிவமான க்ருஷ்ணனை விட்டுஇதர தேவதைகளைப் பூஜிப்பவர்களுங் கூட வழி தவறி அவரையே பூஜிப்பவர் ஆவர்.

1048. எல்லா வஸ்து வடிவமாகவும் பகவான் இருந்தாலும் அவரது ஸ்வரூபத்தை அஞ்ஞானிகள் அறிவதில்லை. தேவர் பிக்ருக்கள் விநாயகர் மாத்ருகணம் பகவான் ஆகிய இவர்களைக் குறித்துப் பூஜை செய்வோர் இவர்களை க்ரமமாக அடைவர். ஆனல் பகவானை அர்ச்சிப்பது மிக ஸுலபம். பத்ரம், புஷ்பம், பழம், ஜலம் இப்படிப்பட்ட வஸ்துக்களைாம் அன்புடனளித்தால், பரம ஸந்தோஷத்துடன் ஏற்று பகவான் அருள் புரிவார்.

1049. எவ்வேலையைச் செய்தாலும் எதை உண்டாலும் எதை ஹோமம் செய்தாலும் எதைத் தானம் செய்தாலும் தவம் செய்தாலும் அவைகளை பகவானுக்கு அர்ப்பணம் செய்யவேண்டும். அப்படிச் செய்வதால் அக்கர்மாவினல் உண்டாகும் பந்தம் உன்னை பாதிக்காது. கர்ம பலத்யாகம் செய்ததால் முக்தியையும் பெறுவாய்.

1050. இதனல் பகவான் பக்தனிடம் அன்பும் இதரரிடம் த்வேஷமும் உள்ளவர் என்று எண்ணுதே. அவருக்கு வேண்டியவர் வேண்டாதவர் என்பவர் இல்லை. எல்லோரிடமும் அவர் ஸமமாகவே இருக்கிறார். ஆயினும் காரணமின்றி ஸ்வபாவமாகவே பக்தரிடத்தில் பரமனும் பரமனிடத்தில் பக்தரும் அமர்ந்திருக்கிறார்கள்.

1051. ஒருவன் மிக்க துராசார முள்ளவனக இருந்தாலும் ஏகாந்தமாக பகவானிடமே அன்பு செலுத்தினல் அவன் ஸாதுவாக ஆவான். எப்படி? அவன் கொண்ட தீர்மானம் நல்லது அல்லவா? துராசாரத்தையும் விட்டு அவன்

பகவானே கதி என்ற நல்ல முடிவிற்கு வந்ததால் தர்மாத்மாவாக ஆவான். அவனுக்கு சாந்தி உண்டாகும். அத்தகைய பகவத் பக்தன் ஒரு நாளும் நாசமடைய மாட்டான் என் ஸத்தியமாக ப்ரதிக்ஞை செய்.

1052. புண்ய பாபத்திற் கேற்றபடி நமக்கு பூமியில் ஜன்மா கிடைக்கிறது. ஸ்வல்பமாக பாபம் செய்தால் பெண்ணாகவும், வைச்யராகவும், சூத்ராாகவும் பிறவி கிடைக்கிறது. அத்தகையோரும் பகவானை ஆச்ரயித்தால் உயர்ந்த கதியைப் பெறுவார் என்றால் புண்ய ஜன்மாக்களான ப்ராஹ்மணர்களையும் ராஜரிஷிகளையும் பற்றி கேட்க வேண்டுமா? அநித்யஸுகமான உலகைவிடு. நித்ய ஸுகமான பகவானை நாடு.

1053. உள்ளத்தில் எப்போதும் பகவானை நினை. அவரிடம் அன்பைச் செலுத்து. அவரையே நாடி யக்ஞம் செய். அவரையே வணங்கு. நாமடையத்தக்க உயர்ந்த கதியாயும் ஆத்ம வடிவமாயுமுள்ள பகவானையே அடைவாய்.

## 10. விபூதி யோகம். 42

1054. தேவரும் ரிஷியும் அறியாத தனது மஹிமையை ஸ்ரீ கிருஷ்ணன் தானாகவே, இதைக் கேட்பதில் பரம ஸந்தோஷமுள்ள அர்ஜுனனுக்கு, அவன் நன்மையை நாடி உபதேசித்தார். அதை அறிந்தால் நீயும் நன்மை பெறுவாய். பகவான் எல்லா வஸ்துக்களுக்கும் ஆதிகாரணமாக இருக்கிறார். அவர் அநாதி என்பதை அறிந்தால் போதும். உனது பாபம் அகலும்.

1055. ஸூக்ஷ்ம பொருளை அறியத்தக்க புத்தி, ஆத்மஞானம், மோஹமில்லாமை, அடித்தாலும் கோபம் வருமல் பொறுத்தல், தான் கண்ட ஆத்ம ஸ்வரூபத்தை அப்படியே கூறும் ஸத்யம், பாஹ்யேந்திரியங்களை அடக்குதல், மனதை அடக்குதல், ஸுகம் துக்கம் உண்டாதல், அழிதல், பயம்

இல்லாமை, அஹிம்ஸை, ஸமமான சித்தம், கிடைத்ததைக் கொண்டு ஸந்தோஷம், இந்திரியங்களை அடக்கி சரீரத்தை க்லேசப்படுத்தல், யதாசக்தி தானம் செய்தல், கீர்த்தி அகீர்த்தி முதலியவைகள் அவரவர் கர்மாவிற் கேற்றபடி பகவானிடமிருந்தே உண்டாகின்றன.

1056. ப்ருகு முதலிய ஸப்த ரிஷிகளும், நாலு மநுக்களும் உலகைப்படைப்பதற்காக, பகவானால் மனதினாலேயே ஸ்ருஷ்டிக்கப்பட்டனர். இவர்கள் எப்போதும் பகவானையே த்யானம் செய்கிறார்கள். இப்படி பகவானது விபூதியையும், அவர் மூலமாகவே உலகெலாம் தோன்றியது என்றும் அறிவோர், அசஞ்சலமான ஞானத்தைப் பெறுவார்.

1057. பகவானிடமிருந்தே உலகந் தோன்றிற்று. பிழைத்திருப்பது, கர்மபலத்தை அநுபவிப்பது, முதலிய எல்லாம் அவன் அருளாலேயே நடத்தப்படுகிறது என்று அவனிடமே மனதையும் ஸகல இந்திரியங்களையும் செலுத்தி ஒருவருக்கொருவர் பகவத் ஸ்வரூபத்தைச் சொல்லி போதித்துக்கொண்டு ஞானிகள் பரம ஸந்தோஷமடைவார்கள்.

1058. இப்படி ஓயாமல் பகவத் ஸ்வரூபத்தில் ஈடுபட்டு அன்புடன் அவரை ஸேவிப்போருக்குத் தன்னை வந்து அடைவதற்கு ஸாதநமான புத்தியோகத்தைப் பகவான் அளிக்கிறார். அவர்களிடம் தயையால் அஞ்ஞானத்தால் உண்டாகும் இருளை, பக்தி தெளிவு என்ற எண்ணெயைக்கொண்டு பகவ த்யானமெனும் காற்றினால் தூண்டி ஸன்யாஸம் எனும் வத்தியைக்கொண்டு, வைராக்யமெனும் பாத்ரத்தில் விஷயத்திலிருந்து திரும்புதல் முதலிய அதிகக் காற்றில்லாமல் உள்ளே ஞான தீபத்தால் அகற்றுகிறார்.

1059. பரமாத்மாவே க்ருஷ்ணனாக அவதரித்தார் என வஸிஷ்டர் முதலிய ரிஷிகளும் நாரதரும் கூறுகிறார்கள். கீதையில் பகவானும் இதையே ஆமோதிக்கிறார். ஆதலால் பகவத்

ஸ்வரூபத்தை எங்கெங்கு எப்படி காணலாம்? உபாஸிக்கலாம்? எங்கெங்கு அவரது விபூதி தங்கி உள்ளது? என் பகவத் குணத்தைக் கேட்டு, போதும் என் த்ருப்திகொள்ளாத அர்ஜுனன் மேலும் கேட்டான்.

1060. பகவானே, முடிவில்லாத தன் மஹிமையை சொல்லமுடியாதது என்றும், ஆயினும் ப்ரதானமானதைச் சொல்கிறேன் என்றும் சொன்னார். ஸர்வ ப்ராணிகளுடைய ஹ்ருதயகமலத்தில் இருப்பவன் என்று பகவானை உபாஸிக்கலாம். அல்லது ப்ராணிகளுக்கு ஆதியாயும் மத்யமமாயும் அந்தமாயும்உள்ளவன் என உபாஸிக்கலாம். பனிரண்டு ஆதித்யர்களில் விஷ்ணு எனும் ஆதித்யனாய் ப்ரகாச வஸ்துக்களுக்குள் ஸூர்யனாய் மருத்துக்களில் மரீசியாய் நக்ஷத்ரங்களுள் சந்த்ரனாயிருக்கிறார் பகவான்.

1061. வேதங்களில் ஸாமவேதம், தேவரில் இந்த்ரன், இந்திரியங்களுள் மனது, ப்ராணிகளில் சைதன்யம், ருத்ரரில் சங்கரன், யக்ஷராக்ஷஸரில் குபேரன், வஸுக்களில் பாவகன், மலைகளில் மேரு, புரோஹிதரில் ப்ருஹஸ்பதி, ஸேநாபதிகளில் ஸுப்ரஹ்மண்யன், ஸரஸ்ஸுகளில் ஸமுத்ரம், ரிஷிகளில் ப்ருகு, வாக்குகளில் ப்ரணவம், யக்ஞங்களில் ஜபயக்ஞம், ஸ்தாவரங்களில் ஹிமாலயம், என்பவை பகவத் ஸ்வரூபமாகும்.

1062. மரங்களுள் அரசமரம், தேவரிஷிகளில் நாரதர், கந்தர்வரில் சித்ரரதன், ஸித்தரில் கபிலர், குதிரையில் உச்சைச்ரவஸ், யானையில் ஐராவதம், நரரில் அரசன், ஆயுதத்தில் வஜ்ரம், பசுவில் காமதேனு, ஸ்ருஷ்டிப்பதில் மன்மதன், ஸர்ப்பங்களுக்குள் வாஸுகி, பித்ருக்களில் அர்யமா, ஸம்யமிகளுக்குள் யமன், தைத்யரில் ப்ரஹ்லாதன், எண்ணிக்கையில் காலம், மிருகத்தில் மிருகேந்த்ரன், பக்ஷிகளில் கருடனாயிருப்பது பகவான்.

1063. சுத்தம் செய்வதில் பவனன், வில்லாளியில்

சாமன், மீனில் முதலை, நதியில் கங்கை, ஸ்ருஷ்டியில் ஆதி மத்ய அந்தம், வித்யையில் வேதாந்த வித்யை, சர்ச்சையில் வாதம், எழுத்தில் அகாரம், ஸமாஸத்தில் த்வந்த்வஸமாஸம், காலனுக்கு காலன், கர்ம பல தாதா, இவைகளும் பகவானே யாம். மிருத்யு க்ஷேமம் கீர்த்தி ஸ்ரீ ஸ்திரிகளின் வாக்கு, நினைவு, மேதை, தைர்யம் பொறுமை இவைகளும் பகவத் ஸ்வரூபமே ஆகும்.

1064. ஸாமாவில் பிருஹத்ஸாம, சந்தஸில் காயத்ரீ மாதத்தில் மார்கழி மாதம், ருதுக்களில் வஸந்த ருது, சொக்கட்டான் ஆட்டம், தேஜஸ்விகளில் தேஜஸ், ஜயம், முயற்சி ஸாத்விகரில் ஸத்வ குணம், வ்ருஷ்ணிகளில் வாஸுதேவன், பாண்டவரில் அர்ஜுனன், முனிகளில் வியாஸர், கவிகளில் உசநஸ், அடக்கி ஆள்பவரில் சிக்ஷை, ஜயிக்க ஆசைகொண்டவரில் நீதி, ரஹஸ்யத்தில் மௌநம், க்ஞானிகளில் ஞானம் இவை பகவத் ஸ்வரூபமாகும்.

1065. ஸமஸ்த பூதங்களுக்கும் பீஜம் அவரே ஆவர். சராசர வஸ்துக்களில் அந்த பகவானில்லாத வஸ்துவே கிடையாது. பகவானது மஹிமைக்கு அளவே இல்லை. இது வரை சொன்னது உத்தேசமாகவும் ஸ்தூலமாகவும் கூறப் பட்டது. சுருங்கச் சொல்வதாயின் உத்ஸாஹ சக்தியுடன் விசேஷ வைபவமுள்ள ஒவ்வொரு பொருளும் பகவானது அம்சத்தால் தோன்றியவை. தனித்தனியாக சொல்வதேன்? இவ்வுலகெலாம் ஓரம்சத்தால் வியாபித்திருக்கிறார் அவர்.

## 11 விச்வரூபதர்சந யோகம். 55

1066. பகவானது விபூதியைக் கேட்டு கண்ணால் அதைக் காண வேண்டும் என்று ஆவல் கொண்டான் அர்ஜுனன். ஆயிரக்கணக்காய் பலவர்ணங்களுடன்கூடிய தன் ஸ்வரூபத்தில்இதுவரை எவருங்காணாத வஸு ருத்ராதித்யர் அச்

விரீ முதலிய பலஆச்சர்யத்தைப் பார். ஆனுல் இந்தக் கண்ணுல் அந்தக் காணமுடியாது என்று திவ்யக் கண்ணை அளித்து விச்வரூபத்தைக் காண்பித்தார் பகவான்.

1067. அநேகம் முகங்களும் கண்களுமிருந்தன. அநேக ஆச்சரியத்தைக் கண்டான். அழகிய ஆபரணம், ஆயு தம், மாலை, வஸ்த்ரம், கந்தம் இவைகளுள்ளதும், முடிவில்லா மல் எங்கும் முகமாகவும் கோடிஸூர்யப்ரகாசமாகவும் விள ங்கிய விசால ரூபத்தைக் கண்டான் பாண்டவன். ஆநந்தபர வசனுய் மயிர்க்கூச்சலுண்டாக பகவானை நமஸ்கரித்து, க்ரு தாஞ்ஜலிபுடனுக எழுந்து துதித்தான்.

1068. தேவஜாதி, சராசர பூதங்கள், மும்மூர்த்திகள், ரிஷிகள், வாஸுகி முதலிய ஸர்ப்பங்கள், ஆகிய இவைகளை யும், அநேகம் கைகளுடனும் முகங்களுடனும் கண்களுட னும் கூடிய அடி முடி இடை இல்லாத பகவத் ரூபத்தைத் தர்சித்தான். சக்ரம் கதை கிரீடம் முதலியவைகளை அணிந்து கண்ணுல் பார்க்கமுடியாத தேஜோராசியாகக்காணப்பட்டது.

1069. அந்த வடிவமே அக்ஷரம் எனப்படும். வேதாந்தி களால் அறியத்தக்கதும் உலகிற்குக் காரணமானதும், சாச் வதமானதும்,அளவில்லாத வீர்யமுள்ளதும்,சந்த்ர ஸூர்யர் களைக் கண்ணுய் உடையதும், ப்ரகாசமான அக்னியையே வாயாய் உடையதும், தன் தேஜஸால் உலகை ப்ரகாசப்படுத் துவதும், ஆகாசத்திலும் திக்குகளிலும் வியாபித்து நிற்ப தும் அந்த ஸ்வரூபம் ஆகும்.

1070. பூபாரத்தைக் குறைப்பதற்கு பகவானுக்கு ஸஹாயமாக வந்த சில தேவர், பகவானிடத்தில் ப்ரவேசிப்ப தையும், சிலர் அஞ்சலிபந்தத்துடன் துதிப்பதையும், உல கிற்கு மங்களம் உண்டாகட்டும் என ரிஷிகூட்டமும் ஸித் தர் கூட்டமும் துதிப்பதையும், ருத்ர ஆதித்யர் வஸுஸாத் யர் விச்வே தேவர்களும், அச்வினீ மருத்து பித்ருக்கள் கந்

தர்வர், யக்ஷர், அஸுரர், ஸித்தர் முதலியவர்களும் ஆச்சர்ய த்துடன் பகவானைப் பார்ப்பதையும் தர்சித்தான்.

1071. பயங்கரமான அநேக கோரப்பல்களுடன் கூடிய அநேக முகங்களையும், விசாலமான எண்ணிறந்த வயிறு வாய் கண் முதலியவைகளையும், நீண்ட கைகால்களையுங் கண்டு ஸமஸ்த ப்ராணிகளும் பயந்து ஓடின. ஆகாயத்தையும் பூமியையும் வியாபித்திருப்பதும் திறந்து விசாலமாயும் பிரகாசமாயுமுள்ள வாயைப் பார்த்து நடுங்கி அர்ஜுநன் தைர்யத்தை இழந்தான்.

1072. ப்ரளயாக்னிபோல் பயங்கரமாயிருக்கும் பற்களைப் பார்த்து திக்கு தெரியாமல் மதிகலங்கி தேவ! தயைபுரியும் எனக்கூறி வேண்டினான். துர்யோதனுதிகள் தன் சேனையுடன் பீஷ்ம த்ரோண கர்ணுதிகளுடனும் பயங்கரமான உமது வாயில் வேகமாக நுழைகின்றனர். சிலரது தலை உமது பற்களில் ஒட்டிக்கொண்டிருக்கிறது. நதிஜலம் ஸமுத்ரத்தில் வேகமாய் விழுவதுபோலவும், வெட்டுக்கிளி நெருப்பில் விழுவதுபோலவும் பலர் தாம் நாசமாவதற்காக தங்கள் வாயில் வந்து விழுகின்றனர்.

1073. உமது தேஜஸ் உலகெலாம் பரவி நிற்கிறது. ஜ்வலிக்கும் முகங்களால் விதியால் மாண்டவர்களை விழுங்குகிறீர். நீர் யார்? எதற்காக இந்த ரூபமெடுத்தீர்? என்ன செய்யப்போகிறீர்? என ப்ரார்த்தித்தான் அர்ஜுனன். நான் காலன். உன்னைத்தவிர, எதிர்சேனையிலுள்ள எல்லோரையும் ஸம்ஹாரம் செய்யப் போகிறேன். அதற்காக இந்த உருவமெடுத்தேன். நீ பெயருக்கு மாத்திரந்தான் இருக்கிறாய். நானே அவர்களை முன்னமேயே கொன்று விட்டேன். எழுந்திரு! ஜயி! கீர்த்தியைப் பெறு! ராஜ்யத்தை ஆள்! என்றார் பரமாத்மா.

1074. தநுர்வேதாசார்யனை துரோணர், ஸ்வச்சந்த மரணத்தை வரமாகப் பெற்றுப் பரசுராமரிடமும் தோல்வி

அடையாத பீஷ்மர், "என் பிள்ளைத்தலையை எவன் அறுத்துக் கீழே தள்ளுகிறானோ அவன் தலை வெடிக்க வேண்டு"மென்று வரம் பெற்றவருடைய பிள்ளையான ஜயத்ரதன், எதிரியைக்கொல்ல இந்திரனிடம் சக்தி ஆயுதத்தைப்பெற்ற கர்ணன், இவர்களைப் பகவான் அருளின்றி அர்ஜுனனால் ஜயிக்க முடியாதன்றோ? கவலைப்படாதே! எழுந்திரு! ஜயி! என அருளினார் கிருஷ்ணன்.

1075. பகவானது மஹிமையைக் கண்டு சிலர் ஸந்தோஷப்படுவதும், சிலர் நமஸ்கரிப்பதும், சிலர் துதிப்பதும் நியாயம் என்றே கூறவேண்டும். ப்ரஹ்மாவுக்கும் ஆதி கர்த்தாவாய் அக்ஷரனாய் பரமாத்மாவாயுள்ள அவரை ஏன் நமஸ்கரிக்க மாட்டார்கள்? அநந்த வீர்யனாயிருப்பவனும், அமிதபராக்ரம முள்ளவனாயிருப்பவனும் எல்லாமாய் எக்காலத்திலுமுள்ளவராயுமுள்ள உம்மை நானும் பணிகிறேன் என்றான் அர்ஜுனன்.

1076. உமது மஹிமையை உணராமல் தோழன் என்றெண்ணி, ஹே கிருஷ்ண! யாதவ! தோழ! என்று தவறுதலாய் அழைத்ததையும், விளையாட்டு படுக்கை போஜனம் முதலிய காலங்களில் பரிஹாஸார்த்தமாக அவமதித்ததையும், மன்னித்துவிடு. நீ உலகுக்குத் தந்தை தாய் குருவாக இருக்கிறாய். உனக்கு ஈடானவனே மூவுலகிலும் இல்லை என்றால் அதிகமானவன் இருப்பானா? ஆதலால் நமஸ்கரித்து, வணங்கி உம்மை வேண்டுகிறேன். மைந்தனது குற்றத்தைத் தந்தைபோல் என் குற்றத்தை க்ஷமித்துவிடும்.

1077. முன்பின் பாராத இந்த உருவைக்கண்டு என் மனம் நடுங்குகிறது. ஆதலால் இவ்வாயிரங் கைகளுள்ள உருவை மாற்றி, நான்குகையுடன் சங்கம் சக்ரம் கதை கிரீடம் முதலியவைகளுடன்கூடிய முன்னுருவத்தையே தயைசெய்து காட்டும் என்றான் பக்தன். இதை உன்னைத் தவிர ஒரு

வரும் கண்டதில்லை. வேதாத்யயநத்தாலோ, துலாபுருஷதாநத்தாலோ, கர்மாவாலோ, உக்ரமான தபஸாலோ, உன்னைத் தவிர வேறு எவராலும் பூமியில் இந்த ரூபம் காணத்தகாதது, என்றார் கிருஷ்ணன்.

1078. கோரமான இதைக் கண்டு உன் மனங் கலங்க வேண்டாம். பகவான் அன்புடன் முன்னுருவையே தர்சி என்று பழைய ரூபத்தைக் காட்டினார். அதைப் பார்த்து கொஞ்சம் ஆச்வாஸம் அடைந்து அவனும் பழைய நிலைக்கு வந்தான். அந்த விச்வரூபத்தைத் தர்சிக்க தேவர்களும் காத்திருக்கின்றனர்.

1079. அநன்யமான பக்தியைத் தவிர மற்ற புண்யத்தால் இந்த ரூபத்தைத் தர்சிக்கமுடியாது. ஆதலால் கீதா சாஸ்திரத்தின் அதிரஹஸ்யமும் ஸாரமுமான இந்த உபதேசத்தைக் கைவிடாதே. பகவானுக்காகவே கர்மாவைச் செய். அவனையே யஜமானனாகவும் உயர்கதியாகவும் எண். அவனிடமே பக்தியைச் செய். தநம், புத்ரன், மித்ரன், களத்ரம், பந்து ஆகிய இவர்களிடம் அன்பை வைக்காதே. எவரிடத்திலும் த்வேஷத்தை வைக்காதே. பகவானை நிச்சயமாகத் தர்சிப்பாய்.

## 12. பக்தியோகம் 20.

1080. பக்தியால் விச்வரூபத்தைத் தர்சித்து உபாஸிப்பவர் சிறந்தவரா? ஸன்யாஸ மூலமாய் உபநிஷத் கூறுகிறபடி அகண்டமான ப்ரஹ்மத்தை உபாஸிப்பவர் சிறந்தவரா? எனில் பகவானிடத்தில் மனதை வைத்து எப்போதும் உபாஸிப்பவர் சிறந்தவரே ஆவர். எங்குமுள்ள அக்ஷரமாக பகவானை த்யாநம் செய்து, இந்திரியங்களை அடக்கி உபாஸிப்பவர் அவனையே அடைந்து தன்மயமாகிறார்.

1081. பக்தியால் பகவானை உபாஸிப்பதும் ச்ரமமே

ஆகும். ஆனாலும், அகண்ட ஸ்வரூபம் மனதிற்குப் பிடிபடாது, ஆதலால் அக்ஷர ஸ்வரூபத்தை உபாஸிப்போர் அதிக ச்ரமத்தை அடைவர். ஸகல கர்மாக்களேயும் பகவதர்ப்பணம்செய்து, பகவானிடமே மனதைச் செலுத்தி உபாஸிப்பவரைப் பகவான் விரைவில் ஸம்ஸார ஸாகரத்திலிருந்து தூக்கிவிடுகிறார். ஆதலால் அவரிடமே மனதை வை. நிச்சயமாக அவரை நம்பு. மோக்ஷம் அடைவாய்.

1082. மனதை அடக்கி த்யாநம் செய்வது ச்ரமமாகத்தான் இருக்கும். ஆயினும் ப்ரதிதிநம் கொஞ்சம் கொஞ்சமாக அப்யாஸம் செய். அதுவும் முடியாவிடில், பகவானே உத்தேசித்தே கர்மாவை ப்ரதாநமாகச் செய். அதையும் செய்ய முடியாவிட்டால் நீ செய்யும் கர்மாவின் பலத்தையாவது பகவதர்ப்பணம் செய்.

1083. விவேக பூர்வமான அப்யாஸத்தைவிட ஞானம் சிறந்ததாகும். அதைவிட ஞானத்தோடுகூடிய த்யானம் சிறந்ததாகும். அதைவிட கர்ம பலத்தை த்யாகம்செய்வது சிறந்ததாகும். ஏனெனில் த்யாகத்தால் உடனே சாந்தி பிறக்கும். இது கர்மபல த்யாகத்தை ஸ்துதிப்பதற்காகக் கூறியது. பக்தன் எவரையும் த்வேஷிக்கமாட்டான். கருணை நிரைந்தவனு யிருப்பான். அவனிடம் மமதை அஹங்காரங்கள் இராது. அவன் ஸுக துக்கங்களேப் பொறுப்பான்.

1084. உடல் அழியாமலிருப்பதற்கு மாத்திரம் வேண்டிய பொருள் கிடைத்தாலும் அதுகிடைக்காவிட்டாலும் ஸந்தோஷமாயிருப்பவனும், இந்திரியங்களே அடக்கி பகவானே ஸத்யவஸ்து என நிச்சயங்கொள்பவனும். அவரிடமே மனதை வைப்பான். இவனே பகவானுக்கு மிக ப்ரியமான பக்தன். இவனைக் கண்டு உலகம் அஞ்சாது. இவன் உலகைக் கண்டஞ்சான். கோபத்தையும் ஸந்தோஷத்தையும்விடுவான்.

1085. சரீரத்திற்கும் இந்திரியங்களுக்கும் வேண்டிய

பொருளில் பக்தன் ஆசைகொள்ளான். உள்ளும் புறமும் சுசியா யிருப்பான். உதாஸீனனுய், பயமற்றவனுய், இஹபர சுகத்தைக் கொடுக்கும் எக்காரியத்தையும் செய்யாதவனுய் இருப்பான். சத்ரு மித்ரரிடமும், மாநாவமாநத்திலும், சீதோஷ்ணத்திலும் ஸுகதுக்கத்திலும் ஸமமாகவே இருப்பான்.

1086. ஒருவன் நிந்தித்தாலும், தன்னைத் துதித்தாலும் ஸமமாயிருப்பான். மௌனமாயிருப்பான். சரீர ரக்ஷணத்திற்குக் கிடைத்ததைக் கொண்டு ஸந்தோஷ மடைவான். தனக்கென வீட்டை விரும்பான். பரமார்த்த விஷயத்தில் புத்தியைச் செலுத்துவான். இது பக்த லக்ஷணம். இக்குணமுள்ளவர் பரமனிடத்தில் பக்திகொண்டவர் ஆவர். அவர் முக்தியடைவது ஸத்யம்.

## 13. ப்ரகிருதி புருஷ விவேக யோகம். 34

1087. இந்த உடல் அழிவதாலும் கர்ம பலம் எனும் பலத்தை விளைவிப்பதாலும் க்ஷேத்ரம் என்று சொல்லப்படுகிறது. இதன் உண்மையை அறிந்தவன் க்ஷேத்ரக்ஞன் ஆவான். ஒவ்வொரு சரீரத்திலும் க்ஷேத்ரக்ஞனு யிருக்கிறுர் பகவான். க்ஷேத்ரக்ஷேத்ரக்ஞர்களை நன்கு உணர்ந்தால் ஆத்மாவை அறிந்ததாகும். இந்த ஞானம் ரிஷிகளாலும், வேதத்தாலும் போற்றப்பட்டிருக்கிறது.

1088. மஹா பூதங்கள், அஹங்காரம், புத்தி, மாயை, பத்து இந்திரியங்கள், மனது, சப்தாதி ஐந்து விஷயங்கள், இச்சை, த்வேஷம், ஸுகம், துக்கம், தேஹேந்திரியக் கூட்டம், சைதன்யம், தைர்யம், ஆகிய இவைகள் அறியத்தக்கதாயிருப்பதாலும், கர்ம பலத்திற்குக் காரணமாக இருப்பதாலும் க்ஷேத்ரம் என்றழைக்கப்படும்.

1089. தன்னை உயர்ந்தவனுக எண்ணுமை, தான் செய்யும் தர்மத்தைப் ப்ரகடனம் செய்துக்கொள்ளாமை, அஹிம்ஸை,

பொறுமை, கபடமில்லாமை, ஆசார்யர் பணிவிடை, தேஹ சுத்தி, ஸ்திரமாயிருத்தல், மனதுடன் சரீரத்தைஅடக்குதல், விஷயங்களில் ஆசை இல்லாமை, அஹங்காரமில்லாமை, பிறப்பு இறப்பு ஜரை வியாதி துக்கம் இவைகளில்உள்ள தோஷங்களை அறிதல், ஆகிய இவைகள் ஞானத்தின் அம்சமாகும்.

1090. வேறெங்கும் மனதைச் செலுத்தாமல் பரமனிடத்திலேயே பக்தியைச் செய்தல், ஏகாந்தமான இடத்தில் வஸித்தல், ஜனக்கூட்டத்தில் வெறுப்பு, எப்போதும் வேதாந்த விசாரம் செய்தல், தத்வஞானத்தை அநுபவிக்க முயற்சித்தல், இவைகளும் ஞானமே ஆகும். மற்றவை அஞ்ஞானமாகும். ஆத்மாவை நன்குஅறியவேண்டும். உலகெலாம் அது நிறைந்திருப்பதால், பிராணிகளது கை கால்களைக்கொண்டு ஆயிரம் கை ஆயிரங் கால் கொண்டது ஆத்மா என ச்ருதி கூறுகிறது. சுத்த சைதன்ய ஸ்வரூபமாதலால் ஆத்மா அவயவமில்லாதது என்றும் வேதம் சொல்லுகிறது.

1091. உள்ளும் புறமும் எங்கும் ஆத்ம ஸ்வரூபம் பரவி இருந்தாலும், ஸூக்ஷ்மமானதால், அஞ்ஞானிகளுக்கு ஆயிரம் ஆண்டுகள் ஆனாலும் வெகு தூரத்திலேயேதான் ஆத்மா இருக்கும். ஞானிக்கு ஹ்ருதயத்தின் அருகிலேயே இருக்கும். ஆகாசம்போல் அகண்டமாக இருந்தாலும் ஒவ்வொரு ப்ராணிகளிடமும் துண்டு துண்டாகக் காணப்படுகிறது. கார்யமற்றதாக இருந்தாலும் ஆத்மா உலகைப்படைத்துப் பரிபாலித்துத் தன்னிடத்தே சுருக்கிக்கொள்கிறது.

1092. அஞ்ஞானம் அகன்றால்தான் ஆத்ம ஜ்யோதிஸ்ஸை அறியலாம். எல்லோர் உள்ளத்திலும் அது இருந்தாலும் சமதமாதிகளுடன் ஆத்ம விசாரம் செய்வோருக்கே ப்ரகாசமாய் விளங்குகிறது. பரமாத்மாவின் இரண்டு வகையான ப்ரக்ருதியை அறிந்தோர் ஸுகம் பெறுவர். கார்யம் காரணம் கர்த்தா முதலியவைகளுக்குக் காரணமாயிருப்பது ப்ரக்ருதி

ஆகும். ஸுக துக்க அநுபவத்திற்குக் காரணமாக இருப்பது புருஷன் என்று அறி.

1093. ப்ரகிருதியை ஆச்ரயித்துப் புருஷன் ஸுக துக்கங்களை அநுபவிக்கிறான். நற்குணத்தில் பற்றுகொண்டு நற்கருமம் புரிந்தால் தேவாதி ஜன்மாவை அடைகிறான். தீய குணங்கொண்டு தீய காரியம் செய்திடில் பசு பக்ஷிகளாகப் பிறப்பான். நம் உடலில் உள்ளவன் ஸாக்ஷியாய் கர்மாவை ஆமோதிப்பவனாய் உடலை தரிப்பவனாய் கர்ம பலனை அநுபவிப்பவனாய் ஆத்மாவாய் இருக்கிறான் என நினைப்பவன் எக்கர்மாவைச் செய்து எப்படி இருந்தாலும் முக்தனாவான்.

1094. த்யானத்தினாலும் ஸாங்க்ய யோகத்தாலும் ஈச்வரார்ப்பண புத்தியால் செய்யும் கர்ம யோகத்தாலும், இவைகளை அறியாதவன் தெரிந்தவரிடம் கேட்டு அப்படி உபாஸனை செய்வதாலும் ஸம்ஸாரம் எனும் ம்ருத்யுவைத் தாண்டலாம். உலகில் தோன்றும் பொருளெல்லாம் க்ஷேத்ர க்ஷேத்ரஞ்ஞர்களின் சேர்க்கையால் உண்டாகின்றன. அப்பொருள்கள் அழிந்தாலும் ஆங்குள்ள ஆத்மா அழிவதில்லை. இதை அறிபவனே கண்ணுள்ளவன். பார்ப்பவன் ஆவான்.

1095. எங்கும் ஆத்ம ஸ்வரூபம் ஸமமாகவே இருக்கிறது என்றுஉணர்ந்தவன் ஆத்மஹிம்ஸை செய்யமாட்டான், உயர்கதியை அடைவான். பகவானது மாயையால் ஸர்வ கர்மாக்களும் நடக்கின்றன. ஆத்மா கர்த்தாவல்ல என்று நினைப்பவனே ஞானி ஆவான். அநாதியாய் நிர்க்குணமாயிருப்பதால், ஆத்மா அழிவில்லாமலிருக்கிறது. உடலில் இருந்தாலும் கர்ம ஸம்பந்தமில்லாமலிருக்கிறது அது.

1096. ஆகாசம் ஸூக்ஷ்மமாக இருப்பதால் எங்கும் இருந்தாலும் எப்படி கண்ணில் படுவதில்லையோ எதிலும் ஸம்பந்திப்பதில்லையோ அப்படியே தேஹம் முழுவதிலும் இருந்தாலும் ஆத்மா காணப்படுவதில்லை. ஒரே ஸூர்யன் தன்

கிரணத்தால் உலகெலாம் ப்ரகாசப்படுத்துவதுபோல் ஆத்மா க்ஷேத்ரத்தை ப்ரகாசப்படுத்துகிறான் என்ற தத்துவத்தை உணர்வோர் முக்தியைப் பெறுவர்.

## 14. குணத்ரய விபாக யோகம் 27.

1097. பகவானது மாயையே ஜகத்திற்குக் காரணம். அதில் பகவானது அம்சத்தால் ஹிரண்ய கர்ப்பன் தோன்றினான். அவனிடமிருந்தே விஸ்தாரமான உலகம் உதித்தது. மாயை தாய், பகவான் தந்தை என்றறி. முக்குணங்களும் சேர்ந்து நம் தேஹத்தில் ஆத்மாவை அடக்கி வைத்திருக்கின்றன. உண்மையில் ஆத்மா எதற்கும் அடங்கினவரல்ல.

1098. ஸத்வ குணம் ஸ்படிகம்போல் பிரகாசமானது. உபத்ரவத்தைக் கொடுக்காதது. ஆனால் நான் ஸுகீ, ஞானீ என்ற எண்ணத்தால் இது ஆத்மாவைப் பந்தப்படுத்துகிறது. நாம் அடையாத புதிய பொருளில் உண்டாகும் ஆசை த்ருஷ்ணை எனப்படும். அடைந்ததில் உண்டாகும் ஆசை ஆஸங்கமாம். இவ்விரண்டையும் உண்டுபண்ணுவது ரஜோகுணம். அது சிவப்பானது. இது கர்மாவில் வைக்கும் பற்றினால் ஆத்மாவைப் பந்தப்படுத்துகிறது. அஞ்ஞானத்தால் உண்டாகி மோஹத்தை அளிப்பது தமோகுணம், தவறுதல் சோம்பல், தூக்கம் இவைகளால் பந்தப்படுத்துகிறது.

1099. ஸத்வம், ரஜஸ் தமஸ்களை அடக்கி ஸுகத்தைக் கொடுக்கும். ரஜஸ், ஸத்வ தமஸ்களை அடக்கி கர்மாவை உண்டுபண்ணும். தமஸ், ஸத்வ ரஜஸ்களை அடக்கித் தவறுதலை உண்டுபண்ணும். இவ்வுடலில் ஸர்வத்வாரங்களிலும் புத்தி ப்ரகாசமாக இருந்தால் ஸத்வ விருத்தி என்று அறி. பாரத்ரவ்யத்தில் ஆசை, ஸாமான்ய சரீர சேஷ்டை, வேலை செய்யல், ஹர்ஷ ராகாதிகளில் ப்ரவிருத்தி, ஸாமான்ய வஸ்துவிலும் ஆசை ஆகிய இவைகள் ரஜோவிருத்தியின் லக்ஷணம்.

அவிவேகம், சோம்பல், தவறுதல், மோஹம், இவைகள் இருந்தால் தமோவிருத்தி, என்று உணர். ஸத்வத்தை விருத்திசெய்.

1100. ஸத்வம் விருத்தியானபொழுது ஒருவன் இறந்தால் தத்வவித்துகள் அடையக்கூடிய உத்தமலோகத்தை அடைவான். ரஜோவிருத்தியில் இறந்தால் கர்மடர் வம்சத்தில் பிறப்பான். தமோவிருத்தியில் இறந்தால் மிருகஜாதியில் பிறப்பான். இம்முக்குணங்களே கர்த்தா. ஆத்மா கர்த்தா அல்ல என்று உணர்வோர், இக்குணங்களைக் கடந்து ஜநநமரண துக்கங்களை அகற்றி, மோக்ஷஸுகத்தைப் பெறுவார்.

1101. இக்குணங்களைக் கடந்தவன் எப்படி இருப்பான்? என்ன செய்வான்? முக்குணங்களுடைய வியாபாரத்தைக் கண்டு வெறுக்கமாட்டான். அந்த வியாபாரமில்லை என ஸந்தோஷப்படவும் மாட்டான். உதாஸீநனைப் போல் இருப்பான். இக்குணத்தைக் கண்டு சலிக்கமாட்டான். ஸுகம் துக்கம், ஸ்வர்ணம் ஓடு, ப்ரியம் அப்ரியம், நிந்தை ஸ்துதி ஆகிய இவைகளை ஸமமாக எண்ணுவான்.

1102. மாநம் வந்தாலும் அவமானம் வந்தாலும் மாறுதலின்றிஇருப்பான். மித்ரர்களிடமும் சத்ருக்களிடமும் ஸமமாக இருப்பான். ஒரு கார்யத்தையும் ஆரம்பிக்க மாட்டான். மோக்ஷம் ஸநாதந தர்மம் ஏகாந்த ஸுகம் ஆகிய இவைகளுக்கு இருப்பிடமான கிருஷ்ணனிடத்தில், வேறெங்கும் செல்லாத ஏகாந்த பக்தியைச் செய்வான், அவனே குணங்களைக்கடந்தவன். அவன் ப்ரஹ்மத்துடன் ஐக்யமாவான்.

## 15 புருஷோத்தம யோகம். 20

1103. ஸம்ஸாரம் என்பது ஓர் மரம். அதன் வேர் மாயை. அது மேலே இருக்கிறது. கிளைகள் மஹதஹங்காராதிகள். அவை கீழேஇருக்கின்றன. அது நாளை இருக்காதது ஆதலால் அச்வத்தம் எனப்படும். ரிக் யஜுஸ் ஸாமம் என்பன இதன்

இலைகளாம். இதை அறிந்தவன் வேத அர்த்தத்தை அறிந்தவன் ஆவான். மநுஷ்யலோகம் முதல் ப்ருஹ்மலோகம் வரை இதன் கிளைகள் பரவி இருக்கின்றன. குணங்களால் பெருத்து, விஷயங்களைத் தளிர்களாக உடையவை அவை. கர்மாவாகிய வேர்கள் கீழும் பரவி யிருக்கின்றன.

1104. இதன் உருவம் கண்ணில் தோன்றாது. இது எங்கிருந்து எப்போது உண்டானது என அறியமுடியாதது. பலமாக வேரூன்றிய இதைப்பற்றில்லாமை எனும் த்ருடமான கத்தியால் அறுத்து எவரிடமிருந்து இது உண்டானதோ அந்த ஆதி புருஷனைத்தேட வேண்டும். அவனிடம் சென்றால் மறுபிறப்பில்லை. மாநம் மோஹம் ஸங்கம் ஆசை த்வந்த்வம் இவைகளை விட்டு ஆத்ம நிஷ்டையிலிருந்து அழியாப் பதத்தைப்பெறு.

1105. சந்த்ரனும் ஸூர்யனும் அக்நியும் அப்பதவியை ப்ரகாசப்படுத்த முடிவதில்லை. அந்த பகவானது ஸ்தானத்தை அடைந்தோர் திரும்புவதில்லை. பகவானது அம்சமே ஜீவலோகம். அது மனதையும் இந்திரியங்களையும் பற்றி காரியங்களைச் செய்கிறதுமாகும். அது கிளம்பும்போது இவைகளை இழுத்துக்கொண்டு கிளம்புகிறது.

1106. மனதின் மூலமாக பஞ்சேந்திரியங்களைக் கொண்டு ஜீவன் கார்யங்களை நடத்துகிறான். அவன் கிளம்பும்போதும் தேஹத்தில் இருக்கும்போதும், உண்ணும்போதும், குணங்களுடன் கூடியபோதும் அவனை மூடர் அறிவதில்லை. ஞானி அறிவான். யோகிகள் பெரும் முயற்சியால் அவனை தன்னுள்ளே காண்கின்றனர். சாஸ்திரோபதேசமும் ஆசார்ய உபதேசமும் இல்லாதவரும் விவேகமில்லாதவரும் இதைக் காண்பதில்லை.

1107. ஸூர்யன் சந்திரன் அக்னி ஆகிய இவர்கள் பகவானிடமிருந்து ஒளியைப்பெற்று உலகைப் ப்ரகாசப்

படுத்துகின்றனர். பூமியில் புகுந்து பிராணிகளைப் பலத்தால் தாங்குவதும், சந்திரனாக இருந்து ஒஷதிகளை வளர்ப்பதும் ஆத்மாவே. நமது உடலில் அக்னியாக இருந்து பிராணபானன்களுடன் சேர்ந்து கடித்துத் தின்பது, சாப்பிடுவது, உறிஞ்சுவது, நக்கி புஜிப்பது, என்ற நால்வகை உணவையும், பக்குவமாக்குவதும் பகவானே ஆவர்.

1108. எல்லோருடைய உள்ளத்திலுமிருந்து புண்ய பாபத்திற்கு ஏற்றபடி நினைவு ஞானம், இவ்விரண்டுமில்லாமை இவைகளைக் கொடுத்து வேதவித்தாயும் வேதாந்த சாஸ்திரத்தைச் செய்பவனாகவும் வேதத்தினால் அறியத் தக்கவனாயும் இருப்பது ஆத்மா. அழியக்கூடிய பூதங்கள் க்ஷரமாகும். அழியாத கூடஸ்தன் அக்ஷரனாவான். இவ்விரண்டு பேருமில்லாமல் புருஷோத்தமன் என்ற பெயருடன் கூடியவன் ஆத்மா.

1109. ஸம்ஸார விருக்ஷமான க்ஷரத்தை விடவும் இதற்கு விதையாயுள்ள அக்ஷரத்தை விடவும் இவ்வுபாதிகள் இல்லாததால் தனியாக உள்ளது புருஷோத்தம ஸ்வரூபம். இதில் ஏமாறாமல் ப்ரஹ்மோபாஸநம் செய்பவன் மோக்ஷம் பெறுவான். ஆதலால் ஸூக்ஷ்மமான இதை நன்கு உணர்ந்து ஸுகம் பெறு.

## 16. தைவாஸுர ஸம்பத் விபாக யோகம். 24

1110. அஞ்சாமை, சித்தசுத்தி, ஆத்ம ஸ்வரூபத்தை அறியமுயற்சி, யதாசக்தி அன்னதி தாநம், இந்திரியங்களையும் மனதையும் அடக்குதல், அக்நிஹோத்ராதி தேவ பூஜை, வேதாத்யயநம், அஹிம்ஸை, அப்ரியத்தையும் பொய்யையும் சொல்லாமை, கோபமில்லாமை, ஸந்யாஸம், மனச்சாந்தி, கோள் சொல்லாமை, தயை, விஷயங்களைக் கண்டவுடன் அதில் பரபரப்பில்லாமை, க்ரூரமில்லாமை, வெட்கம், பயமின்றி வாய் கைகால்களை அசைக்காமலிருத்தல், பெருந்தன்

மை, கோபமே உதிக்காமலிருத்தல், உடல் சோர்ந்தாலும் மனந்தளராமை, உடலில் அழுக்கில்லாமை, மனதில் மலமில்லாமை, த்ரோஹமில்லாமை, தன்னை உயர்ந்தவனாக நினையாமை, ஆகிய இவைகள் தைவ ஸம்பத்தாம். உயர் கதி அடைவோருக்கே இவை தோன்றும்.

1111. தான் தர்ம சீலன் என வெளியிடல், வித்யாதிகளால் தன்னை மேலானவனாக எண்ணுதல், கோபம், கடினமாகப் பேசுதல், அவிவேகம், இவை அஸுர ஸம்பத்துக்களாம். தைவ ஸம்பத்துள்ளவன் மோக்ஷம் பெறுவான். அஸுர ஸம்பத்து உள்ளவன் பந்தத்தை அடைவான். ஆதலால் தைவஸம்பத்தை நீ நாடு.

1112. அஸுர ஸம்பத்துள்ளோர், தன் தன் க்ஷேமத்திற்காக எதைச் செய்வது ? எதை விடுவது ? என்றுகூட அறியமாட்டார். செளசம், ஆசாரம், ஸத்யம் இவைகள் அவரிடம் இராது. "பொய்யான உலகமிது. தர்மம் அதர்மம் ஈச்வரன் இவைகளுமில்லை. ஸ்த்ரீ புருஷாது சேர்க்கையால் உலகம் உண்டாகிறது. வேறு காரணமில்லை" என்று எண்ணி தாங்களும் கெட்டு உலகையும் கெடுப்பார். அவர்கள் க்ரூர குணமுள்ளவர்கள்.

1113. சாகும் வரை பூர்த்திசெய்யமுடியாத ஆசையில் ஆவல்கொண்டு தம்பம் மானம் மதம் உடையவர்களாய் புத்தி இல்லாமல் அசுசியான விருதங்களைக் கடைப்பிடித்து, அஸன்மார்க்கத்தை அவலம்பிப்பார். எல்லையில்லாமல் எண்ணமிட்டு காமபோகத்தில் ஆசைகொண்டு இவ்வுலக ஸுகமே புருஷார்த்தம் என எண்ணுவர். ஆசாபாசத்தால் கட்டுப்பட்டு காம க்ரோதங்களுக்கு அடிமையாகி ஸுகபோகத்திற்காக அக்ரமமாய்ப் பணத்தை ஸம்பாதிப்பார்கள்.

1114. அஸுரகுணமுள்ளவன் இதை அடைந்தேன், அதை அடையப் போகிறேன், இது இருக்கிறது, அதுவும்

வரப்போகிறது, இந்த சத்ருவைக் கொன்றேன், அவனையும் கொன்று விடுகிறேன், நான்தான் யஜமானன், நல்ல அநுபவி, ஸுகி, எல்லா செல்வமும் எனக்கே உளது, தநம் நற்குலம் இவைகளிருக்கின்றன, எனக்கு ஈடு எவன்? யாகம் செய்வேன், தாநம் செய்வேன், ஸந்தோஷம் அடைவேன், என மோஹித்திருப்பான்.

1115. மற்றும் பலமோஹத்தால் காமத்தில் ஈடுபட்டு நரகம் அடைவர். அவர் தன்னைத்தானே போற்றித் தநமதத்தால் சாஸ்த்ர விதியை உதரித்தள்ளி தம்பமாக யாகத்தையும் செய்வர். துர்க்குணங்களைக் கடைப்பிடித்து, பிறர் உடலிலுள்ள பரமாத்மாவை அஸூயையால் த்வேஷிப்பர், நிந்திப்பர். இப்படி க்ரூரகுணமுடையோர் நரகத்தை அநுபவித்து அஸுர ஜாதியில் பிறப்பர். அதனால் பகவானை அடையாமல் மேலும் மேலும் அதோகதியை யடைவர். ஆதலால் அஸுரகுணத்தைவிடு.

1116. காமம், கோபம், லோபம் என மூன்றும் நரகத்திற்குச் செல்லும் மூன்று வாயற்படிகளாம். ஆதலால் அதைவிடு. இதை விட்டவன் ஆத்ம ச்ரேயஸ்ஸைத்தேடி உயர் கதியைப் பெறுவான். சாஸ்த்ரவிதியை விட்டுத் தன் இஷ்டப்படி செய்தால், ஸித்தி, ஸுகம், நற்கதி இவைகள் கிடைக்காது. ஆதலால் எதை விடுவது? எதைச் செய்வது? என்பதில் சாஸ்த்ரமே உனக்கு பிரமாணமாகும். ஆதலால் அதில் கூறியபடி கர்மாவைச் செய்.

## 17. ச்ரத்தாத்ரய விபாகயோகம். 28

1117. சாஸ்த்ர விதியை அறியாமல் அதை விட்டு விட்டு ச்ரத்தையுடன் தேவர்களைப் பூஜிப்பவர் கதி என்ன? அவன் ச்ரத்தைக் கேற்ற பலனைப் பெறுவான். ஸாத்விக ச்ரத்தை ராஜஸ ச்ரத்தை தாமஸ ச்ரத்தை என மூன்று ச்ரத்-

தைகள் உண்டு. இவை மனதின் பரிபாகத்திற்கு ஏற்றபடி உண்டாகும். ஜீவன் ச்ரத்தை வடிவமாகவே இருக்கிறான்.

1118. ஸாத்விகர் தேவர்களையும், ராஜஸர் யக்ஷராக்ஷஸர்களையும், தாமஸர் பூத ப்ரேத கணங்களையும் பூஜிப்பர். சாஸ்த்ரத்தில் இல்லாத தபஸை, ஆசையால், தம்பமும் அஹங்காரமு முள்ளோர் செய்வர். அவர் சரீரத்திலுள்ள இந்திரியங்களையும் பகவானையும் கஷ்டப்படுத்துவர். அது ஆஸுர தபஸ்.

1119. ஸாத்விக ஆஹாரமானது ஆயுஸ், பலம், ஆரோக்யம், ஸுகம் ப்ரீதி இவைகளை விருத்தி செய்கிறது. அது ரஸமுள்ளதாகவும் எண்ணை கலந்ததாகவும் இருக்கும். உடலில் வெகு காலம் தங்கும். சாஸ்த்ர விஹிதமானதால் மனதிற்குப் பிடித்ததாகவும் இருக்கும். மிக்க காரம் புளிப்பு உப்பு உஷ்ணம் தீக்ஷ்ணம் ரூக்ஷம் கொளுத்தல் முதலிய குணம் உள்ளது ராஜஸ ஆஹாரம். இதன் பலன் துக்கம் சோகம் வியாதி இவைகளாம், கொஞ்சம் பக்வமானதும், ரஸமானதும், துர்க்கந்தமுள்ளதும், பழையதும்,ஒருவர் சாப்பிட்டு மிகுந்ததும், தேவார்ஹ மில்லாததுமான அன்னம் தமஸ் ஆஹாரமாகும்.

1120. பயனை விரும்பாமல் சாஸ்திர விதிப்படி தர்மம் என்று செய்யப்படும் கர்மா ஸாத்விக கர்மாவாகும். பயனைவிரும்பி,தம்பத்திற்காகச் செய்யப்படுவது ராஜஸமாம். சாஸ்திர விதிக்கு விபரீதமாகவும் அன்னதானம் செய்யாமலும் மந்த்ரஹீனமாயும் தக்ஷிணை கொடாமலும் ச்ரத்தை இல்லாமலும் செய்யப்படும் கர்மா தாமஸமாகும்.

1121. தேவர்,த்விஜர்,குரு,வித்வான் இவர்களைப் பூஜிப்பதும், சௌசமும், கபடமில்லாமையும் ப்ரஹ்ம சர்யமும், அஹிம்ஸையும், சரீரத்தால் செய்யத்தக்க தபஸாகும். பிறருக்கு வருத்தத்தை உண்டுபண்ணாததும் ஸத்யமானதும் ப்ரிய

மானதும் ஹிதமானதுமான வாக்யமும், வேதாத்யயநமும், வாக்கினல் செய்யப்படும் தபஸாகும். மனது தெளிந்திருத்தல், முகவிலாஸத்தால் அறியத்தக்க நன்மனம், மனதையும் அடக்கிய மௌனம், மனதை வெளியிற் செல்லாமற் தடுத்தல், கபடமில்லாமை இவை மனதால் செய்யப்படும் தபஸ்.

1122. பயனை அபேக்ஷியாமல் முக்கரணங்களாலும் ச்ரத்தையுடன் செய்யப்படுவது ஸாத்விக தபஸாகும். தன்னை நல்லவன் என்று கூறி எல்லோரும் பூஜிக்கவேண்டும் என்பதற்காகச் செய்யப்படுவது ராஜஸமாம். அதனாலுண்டாகும் பயன் அழிவுள்ளது. மூடத்தனத்தால் ஒன்றை நிச்சயித்து தன்னையே மிகவும் பீடித்துக்கொண்டு பிறரைக் கெடுப்பதற்காகவாவது செய்யப்படும் தப்ஸ் தாமஸமாம்.

1123. கொடுக்கவேண்டும் என எண்ணி முன் தனக்கு எந்த உபகாரமும் செய்யாதவரிடத்தில், இனி செய்வதாயிருந்தாலும், அவ்வுபகாரத்தை அபேக்ஷிக்காமல், புண்ய க்ஷேத்ரத்தில் ஸங்க்ராந்தி முதலிய காலத்தில் தானம்செய்வது ஸாத்விகமாகும். உபகாரத்தை எதிர்பார்த்துபலத்தை விரும்பி, வருத்தத்துடன் செய்யும் தானம் ராஜஸமாம். அசுத்தமான இடத்தில், அகாலத்தில், அபாத்ரமான மூடன், திருடன், முதலியவர்களிடம், நல்வார்த்தை மரியாதை இல்லாமலும் ஸத்பாத்ரத்தை அவமதித்தும் செய்யும் தானம் தாமஸமாம்.

1124. "ப்ரணவம்" "அது" "ஸத்," என ப்ரஹ்மத்திற்கு மூன்று பெயருண்டு. அவைகளால் ப்ராஹ்மணர், வேதம், யக்ஞம், முதலியவைகள் படைக்கப்பட்டன. ஆதலால் ப்ரணவத்தை உச்சரித்தே சாஸ்த்ரோக்தமான கர்மாக்களை ஆரம்பிக்கவேண்டும். மோக்ஷத்தை விரும்புவோர் பலத்தை விரும்பாமல் "அது" என்று கூறி, தனக்கு சாஸ்த்ரம் விதித்த கர்மாக்களையும் தானத்தையும் செய்யவேண்டும்.

1125. புத்ரன் இல்லை என்று கூறாமல் உண்டாகும்

என்றும், அஸத் என்றும் சொல்லாமல், ஸாது ஆவான் என்றும், சொல்லவேண்டும். இதுபோல் நல்ல விவாஹாதி கார்யங்களிலும் ஸத் என்றே சொல்லவேண்டும். யக்ஞம் தானம் தபஸ் இதன் நிலை ஆகிய இவைகளை ஸத் என்றே சொல்கிறார்கள். இவைகளில் ஏதேனும் குறையிருந்தாலும் ப்ரஹ்மத்தின் மூன்று பெயரையும் சொன்னவுடன் அக்குறை நிவர்த்தியாகிவிடும். ச்ரத்தை இல்லாமல் செய்யும் ஹோமம், தானம், தபஸ், பூஜைமுதலியன அஸத் எனப்படும். அவைகளுக்கு இங்கும் பயனில்லை மறு உலகிலும் பயனில்லை. ஆதலால் ச்ரத்தையுடன் கர்மாவைச் செய்.

## 18. மோக்ஷயோகம் 78.

1126. ஸன்யாஸமென்றால் என்ன? காம்ய கர்மாவை விடுவதும் நித்ய கர்மாவைச் செய்வதுமாம். த்யாகம் என்றால் என்ன? நித்ய நைமித்திகாதி கர்மாக்களின் பலனை விடுவதாம். எல்லா கர்மாக்களையும் விடவேண்டும் என்று சிலரும், யஜ்ஞம், தானம், தபஸ் இவைகளை விடக்கூடாது என சிலரும் சொல்கின்றனர். இதன் உண்மையைக் கேள். த்யாகம், ஸாத்விகம் ராஜஸம் தாமஸம், என மூவ்வகைப்படும்.

1127. யாகம் தானம் தபஸ் ஆகிய இம்மூன்றும் மனிதர்களுக்குப் பாவநமானது. அவைகளை ஒருநாளும் விடக்கூடாது. இவைகளால் உண்டாகும் பலத்தில் ஆசையைவிட்டு இவைகளைக் கட்டாயம்செய்யவேண்டும் என்பது எனது நிச்சயமான மதம் என்று பகவான் கூறுகிறார். நித்ய கர்மாவை ஒரு நாளும் விடமுடியாது. மோஹத்தினால் அதை விட்டால் அது தாமஸ த்யாகமாம். கஷ்டமாயிருக்கிறது காயக்லேசம் செய்யவேண்டி யிருக்கிறது என்ற பயத்தால் விடுவது ராஜஸ த்யாகமாகும். இதனாலும் மோக்ஷம் உண்டாகாது.

1128. கடமை என்று பயனில் ஆசை இல்லாமல் செய்யப்படும் நித்ய கர்மாவிற்கே, ஸாத்விக் த்யாகம் என்று பெயர் உண்டு. இதைச் செய்பவன் ஜன்மாவைக் கொடுக்குமென காம்ய கர்மாவை வெறுக்க மாட்டான். சித்தசுத்தி துவாரா ஞானத்தை அளிக்குமென் நித்ய கர்மாவில் பற்று வைக்கவும் மாட்டான். ஆத்ம ஞானத்தைப் பெறுவான். ஸகலஸம்சயங்களும் அகலும்.

1129. தேஹத்தையே ஆத்மாவாக எண்ணுபவனுக்கு ஸகல கர்மாக்களையும் விட முடியாது. கர்மபலத்தை விடலாம். அதே த்யாகமாகும். த்யாகம் செய்யாதவனுக்கு கர்மாவின் பலம் வந்தேதீரும். அநிஷ்ட பலமெனும் செடி கொடி பசு பக்ஷி முதலிய ஜன்மாவும் இஷ்டபலமான தேவ ஜன்மாவும் மிச்ரபலமெனும் மநுஷ்ய ஜன்மாவும் கிடைக்கும். த்யாகிகளுக்கு எந்த ஜன்மாவும் கிடைக்காது.

1130. ஒவ்வொரு கார்ய ஸித்திக்கும் ஐந்து காரணங்கள் உள. இடம், செய்பவன், அக்காரியத்திற்குரிய தனிக் காரணம், பல உபகார்யங்கள், தைவம் என்பனவாம். நியாயமோ அந்யாயமோ மூக்கரணங்களாலும் செய்யும் எந்த கார்யத்திற்கும் இவ்வைந்து காரணங்கள் உண்டு. இது இப்படி இருக்க ஆத்மாவையே கர்த்தா என்று நினைப்பவன் துர்மதி ஆவான் அன்றோ?

1131. எவன் புத்தி நான் என்கிற எண்ணமில்லாமல் இருக்கிறதோ, இதைச் செய்தேன், இதனால் இந்த பாபம் என்ற எண்ணம் எவனுக்கு இல்லையோ, அவன் ஸகல ப்ராணிகளையும் கொன்றாலுங்கூட கொலைக்காரன் ஆகமாட்டான்; அவனை அப்பாபம் அணுகாது. அறிபவன் அறிவு அறியத் தக்கது என்று இம்மூன்றும் கர்மாவைச் செய்யத் தூண்டுகிறது. செய்பவன் செய்கை கர்மா இம்மூன்றும் கர்ம ஸங்க்ரஹமாம்.

1132. ப்ராணிகளில் பற்பல ஜாதிகள் இருந்தாலும் அவைகளில் உள்ள ஆத்மா ஒன்றே என்ற அறிவு ஸாத்விகமாம். ஒவ்வொரு ப்ராணியினிடமும் ஒவ்வோர் ஆத்மாஎன்ற அறிவு ராஜஸமாம். ஒரு மண் அல்லது உலோகத்தால் செய்த விக்ரஹத்தில் இதுதான் ப்ருஹ்மம்; இதைவிட வேறில்லை என உண்மை அறியாத அல்ப எண்ணம் தாமஸமாம்.

1133. பற்றுதலும் பலாபேக்ஷையும் இல்லாமல் ராகத்வேஷத்தைவிட்டு செய்யும் நித்யகர்மா ஸாத்விகமாகும். பலத்தில் ஆசைகொண்டு அஹங்காரத்துடன் அதிக ச்ரமப்பட்டு செய்யும் கர்மா ராஜஸமாம். பின்னால் வருவது என்னவென்பதையும், அஹிம்ஸையையும், சக்தி தனக்குக் குறைவு என்பதையும் கவனியாமல் மோஹத்தால் ஆரம்பிக்கும் கர்மா தாமஸமாகும்.

1134. பற்றையும் அஹங்காரத்தையும்விட்டு தைர்யத்துடனும் உத்ஸாஹத்துடனும் ஸித்தி ஏற்பட்டாலும் இல்லாவிடினும் மாறுதலில்லாமலிருப்பவன் ஸாத்விக கர்த்தாவாவான். ராகம், கர்மபலத்தில் ஆசை, லோபம், ஹிம்ஸை, அசுசி, ஹர்ஷம், சோகம், ஆகிய இக்குணமுள்ளவன் ராஜஸ கர்த்தா ஆவான். ஏகாக்ரபுத்தி இல்லாதவன், ஸாமான்ய புத்தி, கர்வம், பிறரைக் கெடுத்தல், ஸதா கவலை, மந்தஸ்வபாவம் இவைகள் உள்ளவன் தாமஸ கர்த்தா எனப்படுவான்.

1135. பந்தகாரணம், மோக்ஷகாரணம், விஹிதம், பயம், அபயம், பந்தம், மோக்ஷம், இவைகளை அறிவது ஸாத்விக புத்தியாம். தர்மாதர்மத்தையும், கார்யாகார்யத்தையும், சாஸ்திரம் சொன்னபடி நிர்ணயம் இல்லாமல் எண்ணுவது ராஜஸ புத்தியாகும். அதர்மத்தை தர்மம்என்றும், தர்மத்தை அதர்மமெனவும்விபரீதமாகஎண்ணுவது தாமஸபுத்தியாகும்.

1136. மநஸ், ப்ராணன், இந்திரியம் ஆகிய இவைகளின் வ்யாபாரத்தை சாஸ்த்ர விதிமாறாமல் காப்பது ஸாத்விக

தைர்யமாகும். பலனை விரும்பி தர்மார்த்த காமங்களைக் காப்பது ராஜஸ தைர்யமாம். தூக்கம், பயம், சோகம், துக்கம், மதம் இவைகளைவிடாமல் ரக்ஷிப்பது தாமஸ தைர்யமாகும்.

1137. ஆரம்பத்தில் விஷம்போல் கஷ்டமாயிருக்கும்; முடிவில் அமிருதம்போல் தெளிவான இன்பத்தை அளிக்கும். இது ஸாத்விக ஸுகமாம். விஷய இந்திரியங்களுடைய ஸம்பந்தத்தால் ஆரம்பத்தில் அமிருதம் போலிருக்கும்; முடிவில் விஷத்தைப்போல் அநுபவிக்கத்தக்கதாக இருக்கும். இது ராஜஸ ஸுகமாம். ஆரம்பத்திலும் முடிவிலும், ஸுகம் போல் மோஹத்தை உண்டுபண்ணுவதும், நித்ரை சோம்பல் தவறுதல் இவைகளால் உண்டாவதும் தாமஸ ஸுகமாகும்.

1138. இம்முக்குணம் இல்லாதபொருள் பூமியிலும் ஆகாசத்திலும் தேவர்களிடமும் மனிதர்களிடமும் இடையாது. இம்முக்குணங்களால் உண்டாகும் ஸம்ஸார பந்தம் அழிய வேண்டுமானால் காமனையைவிட்டு தன் தன் வர்ண ஆச்ரம தர்மத்தைத் தவறாமல் அநுஷ்டிக்கவேண்டும். நான்கு வர்ணங்களுக்கும் ப்ராகிருதியின் குணங்களால் கர்மங்கள் பிரிக்கப்பட்டிருக்கின்றன.

1139. சமம், தபஸ், சௌசம், பொறுமை, கபடமில்லாமை, சாஸ்த்ர ஞானம், அநுபவஞானம், ஆஸ்திகதை இவை ப்ராஹ்மண தர்மமாகும். சௌர்யம், தேஜஸ், தைர்யம் யுத்தத்தில் புறங்காட்டி ஓடாமை, தானம், ப்ரபுசக்தி, இவை க்ஷத்ரிய தர்மமாகும். பயிர், கோரக்ஷணம், வியாபாரம், இவை வைச்ய தர்மமாகும். பணிவிடைசெய்வது சூத்ர தர்மமாகும். அவனவன் கர்மாவைச் செய்து வந்தால் ஸித்தி பெறலாம்.

1140. எவனிடமிருந்து ஸகல வ்யாபாரமும் உண்டானதோ அவனை ஸ்வதர்மத்தால் பூஜிப்பதுதான் உசிதமாகும். குணமில்லாவிடினும் ஸ்வதர்மமே சிறந்ததாம். விஷத்திலுண்டான புழுவை அவ்விஷம் ஒன்றும் செய்யாது

ஸ்வபாவத்தில் நமக்குண்டான கர்மாவைச் செய்தால் எந்த தோஷமும் அணுகாது. புண்யம் வரும்.

1141. அந்தந்த வர்ணத்தவனுக்கு உடன்பிறந்த ஸ்வதர்மத்தில் ஏதேனும் தோஷமிருந்தாலுங்கூட, அதைவிடக்கூடாது. ஏன்? அக்னியைப் புகை சூழ்ந்திருப்பதுபோல் ஒவ்வொரு கார்யத்திலும் ஏதேனும் ஓர் தோஷமுமிருக்கும். ஆதலால் புத்ர மித்ராதிகளிடம் ஆஸக்தி வைக்காமல் ஜிதேந்திரியனாய் ஆசையைவிட்டு, ஸ்வதர்மத்தைச் செய். மோக்ஷம் பெறுவது ஸுலபமாகும்.

1142. சுத்த புத்தியுடன் தைர்யமாக மனதை அடக்கி சப்தாதி விஷயங்களையும் ராகத்வேஷங்களையும் உதறித்தள்ளு. ஏகாந்தமான இடத்தில் உட்கார்ந்து அல்பாஹாரம் செய்து சரீரத்தையும் வாக்கையும் மனதையும் அடக்கி வைராக்யத்தைக் கைப்பிடி. த்யானம் செய். அஹங்காரம், கர்ம பலம், கர்வம், காம க்ரோதம், பாஹ்யசரீர ஸாதநவஸ்து, இவைகளை விடு. சாந்தனாக ஆத்மாவை உபாஸி.

1143. எங்கும் பகவத் ஸ்வரூபத்தைக்கண்டு, விருப்பு, வெறுப்புகளைவிட்டு தெளிந்த மனதுடன் பரமாத்மாவினிடம் பக்தி கொள்பவன் பக்தியால் ஆத்ம ஸ்வரூபத்தை நன்கு உணர்ந்து அதில் ப்ரவேசிக்கிறான். பகவானை ஆச்ரயித்து உபாஸிப்பவர்கள், நிஷித்த கர்மாவைச் செய்தால்கூட அதைப் பகவான் அகற்றி சாச்வத பதத்தை அளிக்கிறார். ஆதலால் ஸகல கர்மாக்களையும் மனதால் பகவதர்ப்பணம் செய்து அவரையே த்யானம் செய்.

1144. பகவானை மனதில் வைத்தோர், எந்த கஷ்டத்தையும் லக்ஷ்யம் செய்ய மாட்டார். தன்னைப் பண்டிதன் என நினைத்து பகவானுடைய கட்டளையான சாஸ்த்ரங்களை அலக்ஷ்யம் செய்வோர் அழிவர். அவர் மாயையால் அஹங்காரம் கொள்வர். ப்ரகிருதியே நம்மை ஆட்டி வைக்கிறது. ஸ்வ

கர்மாவால் பத்தப்பட்டவன் ஒன்றையும் செய்வதில்லை என்று தீர்மானித்தாலும் மோஹத்தால் பரவசமாக அதைச் செய்தே தீருவான்.

1145. ஒவ்வொருவருடைய ஹ்ருதயத்திலும் பரமாத்மா உட்கார்ந்துகொண்டு மாயையால் ப்ரமிக்கும்படி செய்து யந்த்ரத்தில் ஏறியவரைப்போல் நம்மை ஆட்டி வைக்கிறார். அவரையே ஸர்வாத்மநா சரணம் அடை. அவர் அருளால் சாந்தியை அடைந்து சாச்வத பதவியைப் பெறுவாய். ரஹஸ்யமான சாஸ்திரார்த்தங்களைக் குரு முகமாகக் கேட்டு உனக்குள்ளே விசாரித்து உனக்கேற்றதைக் கைப்பற்று.

1146. மனதில் பகவானையே நினை. அவரைக் கருதி யக்ஞம் செய். அவரை நமஸ்கரி. அவரையே அடைவாய் என்பது ஸத்யம். தர்மாதர்மமான ஸகல கார்யங்களையும் விட்டு ஒன்றான பரமாத்மாவைச் சரணமடை. அவர் ஸகல பாபங்களிலிருந்தும் உன்னை விடுவிப்பார். துக்கப்படாதே. இதைத் தபஸும், பக்தியும், கேட்க ஆசையும் இல்லாதவனுக்கும், பகவானிடம் அஸூயை உள்ளவனுக்கும், சொல்லக் கூடாது. பரம பக்தனுக்கு ஹிதமாக, இதை க்ருஷ்ணன் ரஹஸ்யமெனக் கூறினார்.

1147. பரமனிடத்தில் பக்திகொண்டு இந்த கீதா சாஸ்திரத்தின் அர்த்தத்தை பக்தர்களிடம் சொல்பவனும், பகவானை அடைவான். இவனைவிட பகவானுக்கு மிக மிக ப்ரியமான கார்யத்தைச்செய்பவன் வேறு எவருமில்லை. உண்டாகப்போவதுமில்லை. கீதையைப்படித்தால் ஞானயக்ஞம் செய்ததுபோலாம். ச்ரத்தையுடன் கேட்பவனும் புண்யலோகத்தை அடைவான்.

1148. இதைக்கேட்ட அர்ஜுனனுக்கு மோஹம் அகன்றது. க்ஞாநம் வந்தது. ஸந்தேஹம் அகன்றது. பகவான் சொற்படி நடப்பதாகத் தீர்மானித்தான். அத்புதமான

இதை ஸஞ்ஜயர் கேட்டு வ்யாஸர் அருளால் ஸாக்ஷாத்தாக அநுபவித்து ஸந்தோஷித்தார். யோகேச்வரரான க்ருஷ்ணனும் காண்டீவியும் உள்ளவிடத்தில் ஸ்ரீ, ஜயம், ஐச்வர்யம், நீதி இவை நிச்சயமாக உண்டு.

## 79. ஈசாவாஸ்ய உபநிஷத் பாஷ்யம்.

(இது சுக்ல யஜுர்வேதத்தைச் சார்ந்த உபநிஷத்.)

1149. நமக்கு ஆத்மா தான் தனமாக இருப்பவர். அவிவேகிக்கு தூரத்திலும் விவேகிக்கு அருகிலும் உள்ளவர். உலக தனத்தில் ஆசையிருந்தாலும் நூறுண்டு ஜீவிக்க விரும்பினாலும் விஹிதமான கர்மாக்களைச் செய்து ஈசனிடம் அதை அர்ப்பணம் செய். அக்கர்மா உன்னைக் கட்டுப்படுத்தாது. மோக்ஷத்தில் ஆசை இருந்தால் ஸன்யாஸம் செய்துகொண்டு வேதாந்த விசாரம் செய்.

1150. அக்னி அல்லது ஹிரண்யகர்ப்பன் முதலியவர்களை உபாஸித்தால், அர்ச்சிராதி மார்க்கத்தால் பிரும்ம லோகத்திற்குச் செல்வாய். இது ஸகுணோபாஸனையின் பயனாகும். அந்த பிரும்மாவுடன்கூட உனக்கும் முக்திகிடைக்கும்.

## 80. கேனோபனிஷத் பாஷ்யம்.

(தலவகார சாகோபநிஷத்.)

1151. ஒரு கார்யம் பூர்த்தியாகும் வரையில் தைவபக்தி எல்லோருக்குமிருக்கும். கார்யமாய் விட்டால், தானே அதை ஸாதித்ததாக நினைப்பதும் சொல்வதும் ஸஹஜமாக இருக்கிறது. இது தேவர்களுக்குமுண்டு. அஸுரர்களைத் தாங்களே ஜயித்ததாக தேவர்கள் எண்ணினார்கள். அவர்கள் கர்வத்தை நீக்கவேண்டும் என்று எண்ணி,ப்ருஹ்மம் அழகியதும் அபூர்வமுமாயுமுள்ள ரூபத்துடன் தேவர் எதிரில் தோன்றி நின்றது.

1152. அக்னி அதை என்ன வென்றறிய அருகே சென்றார். அந்த யக்ஷம், நீ யார்? உனக்கென்ன யோக்யதை? எனக் கேட்டது. நான் உலகை எல்லாம் கொளுத்தும் சக்தியுள்ள அக்னி என்றது அது. ஆனால் இதைக்கொளுத்து என ஓர் துரும்பை எதிரில் போட்டது யக்ஷம். அக்னி பூர்ண ப்ரயத்னம் செய்தும் அதைக் கொளுத்த முடியாமல் வெட்கத்துடன் திரும்பியது. இப்படியே வாயுவும் சென்று அவமானத்துடன் திரும்பினார். பிறகு இந்திரன் வந்தான். யக்ஷன் மறைந்தது. இந்திரன் கர்வமடங்கிற்று. சிந்தை கலங்கி நின்றான் அவன். ஸாக்ஷாத் உமாதேவி மின்னல் கொடிபோல் இவன் எதிரே தோன்றி யக்ஷஸ்வரூபத்தை விளக்கினாள்.

1153. ஞானம் வந்தபின் கர்மாவைச் செய்ய வேண்டியதில்லை. நதியைத் தாண்டியபின் தோணியைத் தூக்கிச் செல்பவனுண்டோ? ஆனால் அவஸரப்பட்டு சோம்பேரித்தனத்தால் கர்மாவை விடாதே. மஹாபாதகம் நேரும். சரீரத்தை யாகத்தால் ப்ருஹ்ம மயமாகச்செய். சித்தசுத்தியை அது அளிக்கும். கர்மா ஸம்ஸ்கார ரூபமானது. விளாங்காயானது பழுக்கப்பழுக்க ஓடு வேறு பழம் வேறாகப் பிறிவதுபோல் பரிபாகம் வரவர உடலாசை, கர்மா முதலியவை தானே உன்னை விட்டகலும்.

1154. உபநிஷத் என்றால் என்ன பொருள்? உப, நி, இவ்விரண்டும் உபஸர்க்கமெனப்படும். இவை தாதுவின் பொருளை ஒரு வகையாக, விசேஷமாகச் செய்யும். ஸத் என்பது தாது. இதற்கு சிதற அடிப்பது, ஹிம்ஸிப்பது, நாசமாக்குவது, எனப்பொருள் உண்டு. உப தன் ஸமீபத்தில் வந்து, தன்னிஷ்டனாக இருப்பவனுக்கு, நி, நிச்சயமாக ஸம்ஸாரபீஜமான மாயையை, ஸத், நாசமாக்குவது என் அதன் பொருளாம். அது ஞானம் அல்லது பரமாத்மா என்தற்கும். இந்த விளக்கும் வேதபாகத்திற்கும் உபநிஷத் என்றே பெயருண்டானது.

## 81. காடகோபநிஷத் பாஷ்யம்.

1155. வாஜச்ரவஸ் என்ற ஒருவர் ஓர் யாகம் செய்து எல்லாப் பொருள்களையுந் தானம் செய்தார். அவரது புத்ரன் நசிகேதர் ஆவர். அவருக்கு ஆஸ்திக புத்தி உண்டானது. கிழப்பசுக்களைத் தானம் செய்தால் தந்தைக்கு நற்கதி கிடைக்காதே என்றெண்ணி, என்னை யாருக்குக் கொடுக்கப் போகிறீர்கள் எனக் கேட்டான். மும்முறை கேட்கவே கோபங்கொண்ட தந்தை யமனுக்கு உன்னைக் கொடுக்கிறே னென்றார். நல்ல பொருளையே தானஞ் செய்.

1156. இவன் யமன்வீடுசென்று மூன்றிரவு உபவாஸமிருந்தான். அதிதி என்பவன் அக்னி ஸ்வரூபம்ஆவான். அவனை ஆராதிக்காவிட்டால் நமது புண்யம் புத்ரமித்ரகளத்ராதிகள் பசுக்கள் மற்ற ஸொத்துக்கள் ஆகிய எல்லாம் அழியும். ஆதலால் யமன் இவருக்கு மூன்று உபவாஸத்திற்கு ப்ராய்ச்சித்தமாக மூன்று வரமளிப்பதாகக் கூறினான். தந்தை கோபமகன்றுத் தன்னை ஏற்க வேண்டுமென முதல்வரம் வேண்டினான் நசிகேதன்.

1157. அதைப்பெற்று அவன், ஸ்வர்க்கம் சென்று ஸுகமாக மனக்கவலையற்றிருக்கும்படி ஓர் அக்னியை உபதேசியும்; இதே இரண்டாம் வரம் என்றான். இவனது புத்தி சாலித்தனத்தைக்கண்டு ஸந்தோஷித்த யமன் நாலாவதுவரம் நானே தருகிறேன். அந்த வரத்தால் இந்த அக்னி உன் பெயரால் நாசிகேதாக்னி என ப்ரஸித்தமாயிருக்கட்டு மென்றார்.

1158. மனிதனிறந்த பிறகு ஜீவனிருக்கிறதென்று சிலரும், இல்லையெனச் சிலரும் சொல்வதால், அதன் உண்மையைச் சொல்லும் ; இதுவே மூன்றாவதுவரம் என்றான் நசிகேதன். இது பெரிய விஷயம் முன்னர் தேவர்களும் இந்த விஷயத்தில் ச்ரமப்பட்டனர். கஷ்டமான இது வேண்டாம்.

அநேக ஆண்டு ஜீவித்து எண்ணிறந்த செல்வங்களை அனுபவி. மனிதர்களுக்குக் கிடைக்காத செல்வங்களைத் தருகிறேன். என்றார் யமன். போகத்தில் ஆசை உள்ளளவும் ஞானத்திற்கு அர்ஹனல்ல.நச்வரமான இவைகள் எனக்கு வேண்டாம். ஞானத்தையே உபதேசியும் என்றானவன்.

1159. நித்ய ஸுகம் அல்பஸுகம் என இரண்டு ஸுகமுண்டு. இதைப் பகுத்தறிவது கஷ்டமாகும். ஜலமும் பாலுங் கலந்தாற்போல் அது ஒன்றாக இருக்கும். ஹம்ஸம் போன்ற விவேகியே இதைப்பிரித்து அறிவான். நித்ய ஸுகம் மோக்ஷமாம். மற்றது ஸம்ஸாரமாம். இவ்வுலகைத் தவிர பரலோகமில்லை என்று சொல்பவன் அடிக்கடி இறந்து பிறந்து யமன் வசமாகிறான்.

1160. ப்ரணவத்தையே பிரும்மமென யமன் நசிகேதனுக்கு உபதேசித்து, இந்த ஸ்வரூபத்தை, அநேக வேதங்களைக் கற்பதாலும், கிரந்தத்தைக்கேட்டு வியாக்யானிகள் செய்யும் கூர்மையான புத்தியாலும், பலமுறை ச்ரவணம் செய்வதாலும், அறியமுடியாது. இதை அடைய வேண்டுமென்ற தீவ்ரவேகத்துடன் எவன் ஆவல் கொள்கிறானோ அவனே அதை அடைவான். வேதம் நிஷேதித்த கர்மாவைச் செய்கிறவன் ஒருநாளும் அதை அடையான்.

1161. பரமபதம் செல்பவனுக்கு வழி நீண்டதாக இருக்கிறது. வழியைத் தாண்டி வேகமாகச் செல்ல, ஜீவனுக்கு உடலெனும் தேர், இந்திரியங்களெனும் குதிரை பூட்டி, மனமெனும் கடிவாளமேந்தி, புத்தியெனும் ஸாரதியுடன் ஸஜ்ஜமாக இருக்கிறது. யஜமானன் ஏமார்ந்தால் துஷ்டக் குதிரைகள் குமார்க்கத்திற்கிழுத்துச்சென்று ரதத்தையுங் கீழே தள்ளி, இவனையுங் கெடுத்து விடும்.

1162. வாக்கை மனதிலடக்கு, மனதை ஆத்மாவினிடம் அடக்கு. ஆத்மாவை அடையும் வழி கத்தி முனை

போல் தீக்ஷ்ணமானது. ஆனதால் தூங்காதே. எழுந்திரு. ஸத்குருவை அடை. ஆத்மாவை அறி. பேரானந்தத்தைப் பெறுவாய். அவித்யை உன்னருகே வாராது.

1163. கர்ப்பத்தைக் கர்ப்பிணிகள் தனது ஆஹாரத்தால் வளர்ப்பதுபோல், ரித்விக்குகள் அக்னியாகவும், யோகிகள் ஆத்மாவாகவும் எண்ணி உலக வாஸனையைவிட்டு ஆத்மாவை விருத்திசெய்கின்றனர். அது எல்லோருடைய ஹ்ருதய குஹையிலிருந்தாலும் ப்ரகாசமாகத் தெரிவதில்லை. புகையில்லாத அக்னிபோல் அங்குஷ்டமாத்ரமாய் ஆத்மா விளங்குகிறது. மலையில் பெய்த மழை சிதறித் தனித்தனியாக ஓடுவதுபோல் ஒன்றான ஆத்மா ஒவ்வொரு உடலிலும் பிரிந்திருக்கிறது.

1164. சரீரமென்பதோர் பட்டணமாகும். இதற்கு பதினொரு வாசற்படிகள் உண்டு. கண் த்வாரம் இரண்டு, காது இரண்டு, மூக்கு இரண்டு, வாய், ஜலத்வாரம் ஒன்று, மலத்வாரம் ஒன்று, நாபி ஒன்று, தலையில் ஓர் த்வாரமுள்ளது. ஆக பதினொன்று த்வாரங்களாகும். இங்கு ஸ்வதந்திரனை யஜமானன் ஒருவனிருக்கிறான். அவனே ஆத்மா எனப்படுவான். மேலே அடக்கி யாளும் அரசனில்லாவிடில் பிறருக்குழைக்கும் வேலைக்காரர் பலர் ஒன்று கூடி ஒரே வீட்டில் ஒரே கார்யத்தைக் செய்யமாட்டார்.

1165. ஸம்ஸாரமென்பதோர் அச்வத்த மரமாகும். அது வாழைபோல் ஸாரமில்லாதது. அழியத்தக்கது. ஆதலால் மரம்போன்றது என்றனர். அது அவித்யை, காமம், கர்மா என்ற விதையாலுண்டானது. ஹிரண்யகர்ப்பனே முளையாம். ச்ருதி ஸ்மிருதி நியாயவித்யோபதேசம் இவைகள் இலைகளாம். யக்ஞம் தானம் தபஸ் இவை புஷ்பங்கள். ஸுக துக்கமே பழமாகும். திருஷ்ணை எனும் ஜலத்தால் வளர்ந்த பந்தம் என்பதே வேர். இது ஞானக்கத்தியால் வெட்டத்தக்கது—

1166. கண்ணுடியில் நம் பிரதிபிம்பத்தைப் பார்ப்பது போல் இவ்வுலகில் ஆத்மாவை தர்சிக்கலாம். ஸ்வர்க்காதிகளிலும் அதைக் காண்பதரிது. ப்ருஹ்மலோகஞ் சென்றால் வெயிலில் நிழலைப்போல் ஸ்பஷ்டமாக ஆத்மாவை அங்கு தர்சிக்கலாகும். ஆதலால் உபாஸனையால் ப்ருஹ்மலோகம் செல்லவோ, ஞானத்தால் இங்கு தர்சிக்கவோ, முயற்சி செய். அது உருவற்றதா யிருப்பதால் அதைக் கண்ணுல் காண முடியாது.

1167. பஞ்ச கோசங்களால் சூழப்பட்டிருக்கிறது ஆத்மா. (பஞ்ச லோஹத்தை உருக்கி) விக்ரஹம் வார்ப்பவன், மண்ணுல் ஓர் விக்ரஹம் செய்து அதற்குள் அதைவார்ப்பான். முதலில் பார்ப்பவனுக்கு மண்தான் விக்ரஹமெனத் தோற்றும். ஈர்க்குச்சிக்குமேல் ஓர் உரையிருக்கும். அதே முதலில் ஈர்க்குபோல் தோற்றும். உரையைக் கிழித்து ஈர்க்கை எடுப்பதுபோல், மண்ணை உடைத்து விக்ரஹத்தைக் காண்பதுபோல், விவேகி ஆத்மாவைக் கோசத்திற்குமேலாகக் காண்பான்.

1168. நமது ஹிருதய கமலத்திலிருந்து நூற்றொரு முக்ய நாடிகள்ஓடுகின்றன. அதனிடையில் ஸுஷும்னை என்றோர் நாடி இருக்கிறது. மரண காலத்தில் மனதையடக்கி இவ்வழியில் ஜீவனைச் சேர்த்துவிட்டால் ஆதித்ய மண்டல வழியாக ப்ருஹ்மலோகம் செல்வாய்.

## 82. ப்ரச்னோபநிஷத் பாஷ்யம் 6. ப்ரச்நம்

1169. ஸுகேசர், ஸத்யகாமர், ஸௌர்யாயணீ, ஆச்வலாயநர், பார்க்கவர், கபந்தீ, ஆகிய இவர்கள் ப்ருஹ்மஸ்வரூபத்தை உணர ஆவல்கொண்டு பிப்பலாதரை அணுகினார்கள். அவர், நீங்கள் தபஸ்விகள்தான், ஆயினும் ஓராண்டு சிரத்தையுடன் குருபணிவிடை செய்து பின்னர் இஷ்டமான

கேள்விகளைக் கேளுங்கள் என்றார். வேதாந்த வித்யை வேண்டுமானால் ஸர்வக்ஞான ஸத்குருவை ஆச்ரயித்து நம்பிக்கையுடன் குரு சுச்ரூஷைசெய்து ஸந்தேஹங்களைக்கேட்டு அறி.

1170. ஓராண்டு பணிவிடைசெய்து கபந்தி என்பவர் எங்கிருந்து இந்த ப்ரஜைகள் உண்டாயின? என குருவை வினவினார். ப்ருஹ்மா உலகைப்படைக்க ஆசைகொண்டு தவம் செய்தார். ஸ்ருஷ்டிக்கு ஸாதநமாக இருக்கும் என்றெண்ணி, ரயி ப்ராணன் என்ற வேறு பெயருள்ள ஸூர்ய சந்திரர்களைப் படைத்தார். அந்த ஸூர்யன் உதயமாகும் பொழுது தன் கிரணங்களால் ஸர்வ திக்குகளிலும் உள்ள ப்ராணிகளைத் தன் வசமாக்கிக்கொள்கிறான். அவனே அக்னி, அவனே ஆத்மா, சந்தரன், அன்னம் ஸூர்யன், புஜிப்பவன் என அறிவோர் ஞானி ஆவார்.

1 71. சந்த்ர ஸூர்யர்களே காலத்திற்கும் காரணம் ஆவார்கள். இவ்விருவர்களுக்கும் காரணமான ப்ருஹ்மாவே வர்ஷமாக ஆவார். சந்த்ரன் தக்ஷிணாயநம் ஸூர்யன் உத்தராயணம். ப்ரவிருத்தி மார்க்கத்தில் ஈடுபட்டு ஸந்ததியை விரும்பும் மஹர்ஷிகள் இஷ்டமான யாகத்தையும் பூர்த்தமான குளம் வெட்டுவது முதலியவைகளையும் செய்து பித்ருயாணம் என்ற வழியால் சந்திரலோகத்தை அடைகின்றனர். புண்யம் முடிந்த பிறகு பூமியில் பிறப்பார் இவர்.

1172. இந்த்ரியங்களை ஜயித்து குருசுச்ரூஷையாலும் ச்ரத்தையாலும் வித்யையாலும் ஆத்மஸ்வரூபத்தைத் தேடி ஸூர்யனை உத்தராயணவழியால் அடைகிறவர் மறுபடி பூமியில் பிறப்பதில்லை. ஐந்துருதுக்களை ஆரக்காலாகக் (ஹேமந்த சிசிரங்களை ஒன்றாகச் சேர்த்து)கொண்டு பனிரண்டு மாதங்களை அவயவமாகக்கொண்டு, த்யுலோகத்தில் ஜலசரீரியாக சூர்யன் இருப்பதாகச் சிலரும், ஆறுருதுக்களை ஆரக்காலாக

க்கொண்டு ஏழு சக்ரமெனும் குதிரைகள்பூண்ட தேரில் செல்பவனைச் சிலரும் கூறுகின்றனர்.

1173. மாஸமே ப்ரஜாபதி ஆவர். க்ருஷ்ணபக்ஷமே ரயி எனப்படும். சுக்லபக்ஷமே ப்ராணனாகும். ப்ராண ஸ்வரூபத்தை உணர்ந்த ரிஷிகள், யாகாதி நல்ல கார்யத்தைச் சுக்லபக்ஷத்திலேயே செய்கின்றனர். தினமென்பது ப்ரஜாபதியாம். பகல் ப்ராணனும் ராத்திரி ரயியுமாகும். பகலில் தூங்குபவர் அல்லது ஸ்த்ரீ ஸம்யோகம் செய்வோர் ப்ராணனை இழந்தவராவர். இரவிலோ விஹிதகாலமானதால் ஸத்ரீ ஸங்கமம் செய்தாலும் ப்ருஹ்மசர்யம் போலாகும். சந்த்ராதித்யன் முதல் அஹோராத்ரம் வரையிலுள்ள இரட்டையால், அன்னம் ரேதஸ் ஆகி, ஸ்த்ரீ வழியாக, ப்ரஜைஉண்டாகிறது.

1174. க்ருஹஸ்த தர்மத்தை ச்ரத்தையுடன் அநுஷ்டிப்போர் ப்ரஜாபதி வ்ரதம் செய்து (ருது ஸ்நானம்செய்து ஐந்தாம் நாள் முதல் பதினாறும் நாளுக்குள்நிஷித்தமான திதி வார நக்ஷத்ரங்களை விட்டு ஸத்ரீஸம்யோகம் செய்து) இந்த்ரியங்களை அடக்கி, ஸத்யம் தவராமல் நிஷ்கபடமாக இருந்தால் ப்ரத்யக்ஷ பலமான ஸத்ஸந்ததியைப்பெற்று விரஜமெனும் ப்ரஹ்மலோகத்தை அடைவர்.

1175. சரீரத்தைக் கீழே விழாமல் பிடித்திருப்பது யார்? இதை ப்ரகாசப் படுத்துபவர் யார்? இதில் சிறந்தவர் யார்? என்பது பார்க்கவர் கேள்வி ஆகும். பஞ்ச பூதங்களும் ஐந்து கர்மேந்திரியங்களும் ஐந்து ஞானேந்திரியங்களும் தானே சிறந்தவன் என நினைத்தன. மோஹத்தை விடுங்கள்; நான்தான் இதைத் தரிப்பவன் என ப்ராணன் கூறிற்று. மற்றவை இதை லக்ஷ்யம் செய்யவில்லை. ப்ராணன் மேலே கிளம்பிற்று. இவைகளும் கிளம்பும்படி நேர்ந்தது. பின்னர் ப்ராணனை மற்றவைத் துதித்தன.

1176. ஓ! ப்ராணதேவ! நீதான் எங்களிற் சிறந்தவன்.

நீயே சந்தர சூர்யனாய் வேதமாய் எங்களை ப்ரகாசப்படுத்துப வனாய் விளங்குகிறீர். உம்மால்தான் நாங்கள் ஆனந்தமாக வாழ்கிறோம். முன்போல் இங்கேயே தங்கி எங்களுக்கு க்ஷேமத்தை அளித்து அருள் புரியும் என்று கூறின. ஆத லால் ப்ராணனேசரீரத்தைத்தரிப்பது விளக்குவது எனக்கூறி விளக்கினார் குரு.

1177. ப்ராணன் எங்கிருந்து உண்டானது? சரீரத்தில் எப்படி வந்தது? எப்படி ஆத்மாவைவிட்டுக் கிளம்புகிறது? தைவிகம் பௌதிகம் ஆத்மிகம் என்பவைகளை எப்படி தரிக்கிறது? என ஆச்வலாயனர் கேட்டார். நல்ல கேள்வி! என ஸந்தோஷித்து குரு கூறினார். நமது சரீரத்திலிருந்துநிழல் உண்டாவதுபோல் ஆத்மாவினிடமிருந்து ப்ராணன் உண்டாயிற்று. மனஸ்ஸங்கல்பத்தால் சரீரத்தில் புகுந்தது.

1178. சக்ரவர்த்தி ஒவ்வொரு க்ராமத்திற்கும் அதிகாரிகளை நியமிப்பதுபோல் மற்ற இந்த்ரியங்களை அந்தந்த இடத்தில் ஏவுகிறது ஆத்மா. பாயு உபஸ்தங்களில் அபானனை ஏவி ஜலமலங்களைக் கழிக்கிறது. கண் காதுகளில் இருந்து மூக்கு வாய் வழியாக ப்ராணன் தன் வேலையைக் கவனிக்கிறது. இவ்விரண்டிற்கும் இடையே இருந்து, புஜித்த அன்னத்தை ஸமானமாக்குவது ஸமானமாகும். ஹ்ருதய ஆகாசத்தில் உள்ளது ஆத்மா.

1179. ஸூர்யனிடமிருந்து கிரணங்கள் கிளம்புவதுபோல் ஹ்ருதயத்திலிருந்து ப்ரதான நாடி நூற்றொன்றும், ஒவ்வொன்றிலிருந்து நூறு சிறுநாடிகளும், ஒவ்வொரு சிறு கிளைநாடிகளி லிருந்து எழுபத்திரண்டாயிரம் நாடிகளும் சரீரத்தில் ஓடுகின்றன. இவைகளில் ஸஞ்சரிப்பவன், வ்யானன் ஆவான். இதில் ஸுஷும்னை நாடியால் மேல்சென்று உதானன் புண்ய பாபத்திற் கேற்றபடி அந்த்ய காலத்தில் கோரும் சரீரத்தை அடைகிறான். ப்ராணனது தத்வத்தை அறிந்தவனுக்கு ஸந்ததி விருத்தியாகும்.

1180. மனிதனிடத்தில் தூங்குவது விழித்திருப்பது ஸ்வப்நங்காண்பது எது? எல்லாம் எதனிடம் ஒடுங்குகிறது? ஸுகம்யாருக்கு உண்டாகிறது? என்பது ஸௌர்யாயணியின் கேள்வி. ஸூர்யனது கிரணங்கள் அஸ்தமன காலத்தில் தேஜோமண்டலத்தில் ஒடுங்குவதுபோல மனதினிடம் ஸகல இந்திரியங்களும் லயமாகின்றன. ப்ராணனே விழித்திருக்கிறது. மநமே ஸ்வப்நத்தைக் காண்கிறது? பித்தம் மநதை மூடியபோது உறக்கமும் ஸுகமும் உண்டாகிறது.

1181. பக்ஷிகள் பகல் எல்லாம் திரிந்து மாலையில் தனது வாஸ ஸ்தானமான மரத்திற்கு வருவதுபோல் ஸகல கரணங்களும் ஜீவனுடன் நித்ரா காலத்தில் பரப்ரஹ்மத்தினிடம் லயமாகின்றன. இந்த தத்வத்தை அறிபவன் ஸர்வத்ஞனுவான். மோக்ஷத்தைப் பெறுவான்.

1182. ஸத்யகாமரது கேள்வி யாதெனில் இறக்கும் வரை ப்ரணவத்தை உபாஸிப்பவன் அடையும் கதி யாது? ப்ரணவம் ப்ருஹ்ம ஸ்வரூபமாம். அதனால் மோக்ஷத்தையும் ப்ருஹ்ம லோகத்தையும் அடையலாம். ஏகமாத்ரையாக உபாஸிப்பவன் மநுஷ்ய லோகத்தில் சிறந்த தனிகன் வீட்டில் பிறந்து, மறுபடியும் மோக்ஷத்தைத் தேடுவான். இரண்டாக உபாஸிப்பவன், ஸ்வர்க்கத்தில் உயர்ந்த ஸுகத்தை அநுபவித்து மநுஷ்ய லோகத்தில் பிறந்து, வாஸனையால் ஞான மார்க்கத்தைத் தேடுவான். மூன்று மாத்ரையாக உபாஸிப்பவன் பாம்பு தன் தோலை உதரித் தள்ளுவதுபோல் கர்மபந்தத்தை விட்டு ஸூர்யன் மூலமாக ப்ருஹ்மாவினிடம் சேர்ந்து அவருடன் முக்தி பெறுவான்.

1183. ஸுகேசரது கேள்வி. ஹிரண்யநாபன் எனும் கோஸல தேசத்தரசன் என்னை அண்டி, ஷோடசகலையுள்ள புருஷனைக்கூறும் என்றான். உண்மையை உணராமல் வேறுவகையாகக் கூறினால் வம்சத்துடன் அழிந்துவிடுவேன் என்

றறிந்து, தெரியாது என்றேன். அதைத் தாங்கள் கூறவேண்டும் என்முன். பதினறு கலைகள் உள்ளவன் ஆத்மா. எது இருந்தால், தான் நன்முக இருக்கலாம் என யோசித்து பதினறு கலைகளையும் அவன் படைத்தான். ப்ராணன், நற்கர்மாவைச் செய்து நன்மைபெற ச்ரத்தை, கர்மபலத்தை அநுபவிக்க ஸாதநமாகஉள்ள ஐந்துபூதங்கள், பத்து இந்திரியங்கள், மநஸ், அந்நம், வீர்யம், தபஸ், கர்மா, புண்யலோகம், மந்த்ரம், நாம் என்ற இவைகளே கலைகளாம்.

1184. ஸமுத்திரத்தில் நுழைந்த நதிகள், தனது பெயரையும் உருவத்தையும் விடுவதுபோல, இக்கலைகள் புருஷனிடம் சென்று லயமாகின்றன. அப்பொழுதே, முக்தி உண்டாகும். அவித்யையின் கரையைத் தாண்டிவைத்த குருவைத் தந்தையைப்போல் பூஜித்து, பலசிஷ்யர்கள் முக்தி பெற்றனர். ஸத்குருவை அடுத்து ஸந்தேஹத்தை அகற்றி ஸம்ஸாரக் கடலைக் கடக்க வழிதேடு.

## 83. முண்டகோபநிஷத் பாஷ்யம்.

1185. லோக கர்த்தாவான ப்ருஹ்மா, ப்ரஹ்மவித்யையைத் தனது மூத்த புதல்வனை அதர்வருக்கு உபதேசித்தார். அங்கிரா ஸத்யவஹா் ஆங்கீரஸ் என்ற சிஷ்ய பரம்பரையாக அது பூமியில் வந்தது. சௌநகர் ஆங்கீரஸரை அடுத்து எந்த ஒன்றை அறிந்தால் எல்லாவற்றையும் அறியலாம் எனக்கேட்டார். அவர் அபரா பரா, என இரண்டு வகை வித்யை உண்டு. இதில் நான்குவேதம் ஆறு அங்கம் இவை அபராவித்யை எனப்படும். பராவித்யை உபநிஷத், அதனல் அழியாப் பொருளை அறியலாம் என்முர். அதில் கூறப்படும் ப்ரஹ்மத்தை அறிந்தால் எல்லாம் அறிந்ததாகும்.

1186. அவயவமில்லாமலேயே எங்கு மிருக்கும் ஒரு பொருள், சிலந்திப்பூச்சி நூலையும், பூமி ஒஷதிகளையும்,

மனிதன் கேசரோமங்களையும் படைப்பது போல் உலகை அநாயாஸமாகப் படைக்கிறது. அதே ப்ரஹ்மம் எனப்படும். அதனிடமிருந்தே நாம ரூப வடிவமான உலகம் உண்டாகிறது. வேதத்திலிருந்து மஹர்ஷிகள் கண்டு பிடித்த அக்நி ஹோத்ராதி நித்ய கர்மாக்களே ஞானத்தைப் பெறுவதற்கு தக்க மார்க்கமாகும்.

1187. அக்னி ஜ்வலிக்கும்பொழுது, அக்நி, ஸோமர் என்ற இருவருக்கு முதலில் ஆஹுதிகளைச் செய்து அவ்வாஹுதிகளின் நடுவிலேயே மற்ற ஸகல ஹோமங்களையும் செய்யவேண்டும். தர்ச பூர்ணமாஸம், சாதுர் மாஸ்யம், ஆக்ரயணம், அதிதி பூஜை, ஔபாஸந அக்நிஹோத்ர ஹோமம், வைச்வதேவம், இவைகளைச் செய்யாதவனும், இவைகளை விதியை மீறி தவறாகச் செய்தவனும், நற்கதியை அடையமாட்டான்.

1188. காலீ, கராலீ, மநோஜவா, ஸுலோஹிதா, ஸுதூம்ர்வர்ணா, ஸ்புலிங்கினீ, விச்வருசீ என்ற ஏழும் அக்னியின் நாக்குகளாம். ஜ்வலிக்கும்போது இவைகளில் ஹோமம் செய்தால், இவைகள் ஸூர்ய கிரணங்கள் வழியாக யஜமானனை ஸ்வர்க்கத்திற்கு அழைத்துச் செல்லும். வாருங்கள்! இதோ உங்களுக்குப் புண்யலோகம் என ஸந்தோஷமாக நம்மை வரவேற்கும்.

1189. யக்ஞ ரூபமான கர்மா, அத்வர்யு முதலிய பதினாறு ரித்விக்குகளும் யஜமானனும் பத்நியும் சேர்ந்து பதினெட்டு அங்கமுள்ளது என்பார்கள். ஞானமில்லாமல் செய்யும் கர்மா நச்வரமான ஸ்வர்க்காதி பயனையே அளிக்கும். இதையே பெரிது என எண்ணுவோர், தங்களைத் தாங்களே பண்டிதன் என எண்ணி ஏமாந்து குருடனைப்போல் குழியில் விழுவர். அவர் புண்ய பலனை அநுபவித்து மநுஷ்ய ஜாதியிலோ மிருக ஜாதியிலோ பிறப்பர்.

1190. கர்மாவினால் வரும் லோகம், வாழைப்பட்டை யை உறித்துக்கொண்டே போனால் உள்ளே ஒன்று மிராதது போல் நச்வரமானது. உண்மையை விசாரித்தால் ஒன்று மில் லாததாகும் என அறி. நித்யமான மோக்ஷம் அநித்யமான கர்மாவால் வராது. ஆதலால் ஞானத்தைப் பெற ஸமித் துக்கட்டை எடுத்துக்கொண்டு ச்ரோத்ரிய ப்ரஹ்மநிஷ்ட னான குருவைச் சரணமடை. ஸகலவஸ்துக்களுக்கும் காரண மான ஆத்மாவை அவர் உபதேசத்தால் அறி.

1191. ப்ரணவம் எனும் வில்லில், உபநிஷத்தால் அறியத்தக்க ஜீவன் எனும் பாணத்தை, உபாஸனை என்ப தால் சாணைபிடித்து, ப்ரஹ்மம் எனும் குறியை, விஷயங்க ளைக் கண்டு களித்து ஏமாறாமல் அடி. அம்மெய்ப் பொரு ளையே தேடு. மற்றப் பேச்சுக்களை விடு. வண்டிச் சக்கரத் தின் குடத்தில் ஆரக்கால்கள்போல் எல்லா நாடிகளும் ஹ்ரு தயத்தில் சேர்ந்திருக்கின்றன. அங்கே ப்ரணவ வடிவனை ஆத்மா வஸிக்கிறான். அவ்விடத்திற்கு ப்ரஹ்மபுரம் என்று பெயர் உண்டு. அங்கே வஸி.

1192. மனதையே தன் ஸ்வரூபமாகக்கொண்டு ப்ரா ணனையும் சரீரத்தையும் தூண்டிவிட்டு ஸ்வப்ரகாசமாய் விளங்குகிறார் பரமாத்மா. அவனைத் தர்சித்து விட்டால், வாஸனையால் உண்டாகும் ஆசை அழியும். ஸம்சயங்கள் ஒழி யும். கர்மா அகலும். சந்த்ர ஸூர்யாதிகள் பரமனை ப்ரகாசப்படுத்த சக்தி அற்றவர்கள். இவ்வாத்ம ஒளியால் தான், அவர்களுக்கு ப்ரகாசம் உண்டாகிறது.

1193. சரீரமெனும் ஓர் மரத்தில் தோழர்களான ஜீவன் ஆத்மா எனும் இரண்டு பக்ஷிகள் வஸிக்கின்றன. ஒன்று கர்மபலமான ஸுக துக்கமெனும் பழத்தைப் புஜிக் கிறது. மற்றொன்று ஒன்றையும் உண்ணாமல் ப்ரகாசிக்கிறது. இதைத் தர்சிக்க வேண்டுமானால் பொய் பேசாதே; மநதையும்

இந்திரியங்களையும் ஏகாக்ரமாகச் செய்; ப்ரஹ்மசர்யத்தைக் கைகொள்; ஞானத்தைப் பெறு; அதைத் தர்சிப்பாய்.

1194. ஸத்யம்தான் என்றைக்கும் நிலைத்து நிற்கும். பொய் வெகுகாலம் நிற்காது. ஸத்யத்தால் தேவயாநம் என்ற வழியை விஸ்தாரமாகச் செய்யலாம். இவ்வழியாகச் சென்றோர் ஸமஸ்த லோகங்களையும் அடைவர். ஸத்யமே ஞாநத்திற்குச் சிறந்த ஸாதநம். மூடனுக்கு தூரத்திலும் வித்வானுக்கு அருகிலுமுள்ள ஆத்மாவைக் கண்ணால் அல்லது மற்ற ஸாதநங்களால் தர்சிக்க முடியாது. ஞானத்தாலும் த்யானத்தாலுமே தர்சிக்கலாம். நினைத்த லோகத்தை அடையும் சக்தி உள்ளவன் ஞானி. அவனைப் பூஜி.

1195. ஆத்மாவை அத்யயநத்தாலோ, பலமுறை வாக்கால் அதைச் சொல்வதாலோ, நல்ல மேதையாலோ, அநேக முறைக் கேட்பதாலோ, அடைய முடியாது. யார் தீவ்ரமாக ஆத்மாவை அடையத்தான் வேண்டும் என்று வரிக்கிறாரோ அவருக்கே, ஆத்மா தன் உருவத்தை விளக்குகிறார். ப்ரஹ்ம நிஷ்டை என்ற பலனை அடைய எக்காரியத்திலும் தவறாமை, ஞானம், ஸன்யாஸம், ஆகிய இவைகள் தகுந்த ஸாதநங்களாகும். ஞானி தனது சரீரம் அழிந்தால், பானை உடைந்தால் ஆகாசம் வெளி ஆகாசத்துடன் ஒன்றுவதுபோல் ஆத்மாவுடன் கலந்து விடுகிறான்.

1196. உலகில் ஆத்மாதான் அடையத்தக்க வஸ்துக்களில் சிறந்தது என நிச்சயங்கொண்டு ஸன்யாஸம் செய்துக்கொள். மனதைச் சுத்தமாக வைத்திரு. சரீரமழிந்ததும் விதேஹ முக்தியை அடைவாய். அப்பொழுது உன் ப்ராணாதி கலைகள் மறு பிறப்பு இல்லாததால் இங்கேயே அழியும். இந்திரியங்கள் தங்கள் அதிஷ்டான தேவதைகளை அடையும். கர்மா எரிந்து போகும். ஜீவன் ஆத்மாவோடு லயமாகும். முக்திபெற்றவன் குலத்தில் உதித்தோர் ப்ரஹ்ம ஞானியா

கவே இருப்பர். ப்ராஹ்ம வித்யையைத் தக்க பரிபாகமுள்ளவனுக்கே சொல்ல வேண்டும்.

## 84. மாண்டூக்யோபநிஷத் பாஷ்யம்.

(இவ்வுபநிஷத்திற்கு ஆசார்யரின் பரம குருவான கௌடபாதர் நூறு ச்லோகங்கொண்ட ஓர்காரிகை எழுதியுள்ளார். ஸந்யாஸிகளே அதைப் படிக்க வேண்டும். அதற்கும் ஆசார்யாள் பாஷ்யம் எழுதி இருக்கிறார்.)

1197. ப்ரணவமே ஆத்ம ஸ்வரூபமாகும். அது நான்கு பாதமுள்ளது. விழித்திருக்கும்போது, வெளிமுகமாக இருந்து ஸ்தூல விஷயங்களை அநுபவிப்பது முதல் பாதம். ஸ்வப்நத்தில் அந்தர்முகமாக வாஸனா ரூபமானதை அநுபவிப்பது இரண்டாம் பாதம். தூக்கத்தில் ஒன்றையும் உணராமல் ஆநந்தத்தை அநுபவிப்பது மூன்றும் பாதம். இம்மூன்றையும் கடந்து சாந்தமாய் சிவமாய் அத்வைதமாய் இருத்தல் நாலாம் பாதமாம்.

## 85. ஐதரேய உபநிஷத் பாஷ்யம்.

1198. ப்ரஹ்மம் உலகைப்படைக்க வேண்டும் என யோசித்து ஜலம் முதலியவைகளைப் படைத்தது. உலகஸம்ரக்ஷணத்திற்காக தேவர்களையும் படைத்து அவர்களுக்குப் பசி தாஹத்தை உண்டுபண்ணிவிட்டது. நாங்கள் உட்கார்ந்து புஜிக்கத்தக்க சரீரத்தைக் கொடுமென தேவர்கள் கேட்டனர். பசுவின் சரீரத்தைக் காட்டி இது போதுமா என்றார். இது வேண்டாம் என்றனர் தேவர். குதிரை சரீரத்தைக் காட்ட அதுவும் வேண்டாம் என்றனர். மநுஷ்ய சரீரத்தைக் காட்ட ஸந்தோஷமாக அதன் உள்ளே தேவர் புகுந்தனர். ஆதலால் உன் உடலைச் சுத்தமாக வைத்திரு.

1199. அக்னி வாக்காகவும், வாயு ப்ராணனாகவும், ஆதித்யன் கண்ணாகவும், திக்குகள் காதாகவும், ஓஷதிகள்

ரோமமாகவும், சந்திரன் மனமாகவும், ம்ருத்யு அபானமாக வும், ஜலம் ரேதஸ்ஸாகவும், நமது சரீரத்திற்குள் அந்தந்த இடத்தில் அமர்ந்தனர். பசி தாஹம் இரண்டும் எங்களுக்கு வழி என்ன? என்று கேட்க எந்த தேவருக்கு ஹவிர்ப்பாகம் கொடுத்தாலும் அதில் பசி தாஹங்களுக்குப் பங்கு உண்டு என்றார் ஆத்மா.

1200. ஜீவன் ஒரு தகப்பன் வயிற்றில் அன்னமாகப் புகுந்து வீர்யமாகிறது. அது தாயின் கர்ப்பத்தில் வருவது அதற்கு முதல் பிறவியாம். தாயோடு அபேதமாக இருந்து குழந்தையாகப் பிறப்பது இரண்டாவது பிறப்பாகும். இவ் வுடலைவிட்டு வேறு உடலைப்பற்றுவது மூன்றும்பிறப்பாகும். ஒரு சரீரத்திற்கே மூன்று பிறப்பு எனில் எத்தனை சரீர மெடுத்தோம். எத்தனைப் பிறப்புப் பிறந்தோம். வாமதேவ ரிஷி கர்ப்பத்திலிருந்தே, கழுகு வலையைக் கிழித்து வெளி யில் செல்வதுபோல், ஸம்ஸார பந்தத்தை அறுத்தார். நீயும் முயற்சி செய். பந்தத்தை அறு.

## 86. தைத்திரீய உபநிஷத் பாஷ்யம் (சீக்ஷாவல்லீ)

1201. ப்ரஹ்ம வித்யையை ஆரம்பிக்கும்பொழுது குருவும் சிஷ்யனும் யாதொரு விக்நமும் வராமலிருப்பதற் காகவும், வித்யை பயனை அளிப்பதற்காகவும், சாந்தி செய்ய வேண்டும். உபநிஷத்தின் அர்த்தத்தை விசாரிப்பதோடு வேதத்தைக் குற்றமற உச்சரிக்கவேண்டும். மஹாஸம்ஹி தையை உபாஸி. ப்ரஜை, பசு, ப்ரஹ்மவர்ச்சஸ், அன்னம், ஸ்வர்க்கம் முதலிய பயனைப் பெறுவாய்.

1202. ஸம்ஹிதையை உலகமாகவும், ஜ்யோதிஸ்ஸாக வும் வித்யையாகவும் ப்ரஜையாகவும் சரீரமாகவும் நினைத்து உபாஸி. பூமி பூர்வ ரூபம். த்யுலோகம் உத்தரரூபம், ஆகாசம் இடை, வாயு இவைகளைச் சேர்ப்பது என உலக

உபாஸனையில் நினைக்கவேண்டும். இதேபோல், அக்னி பூர்வம், ஆதித்யன் உத்தரம், ஜலம் ஸந்தி, மின்னல் ஸந்தாநம். என ஜ்யோதிஸ்ஸிலும், ஆசார்யன் பூர்வம், சிஷ்யன் உத்தரன், வித்யை ஸந்தி, ப்ரவசநம் ஸந்தானம், என வித்யையிலும், மாதா பூர்வம், பிதா உத்திரம், ப்ரஜை ஸந்தி, ப்ரஜனனம் ஸந்தானம், என ப்ரஜையிலும், இரண்டு கன்னமும் பூர்வம் உத்தரம், வாக்கு ஸந்தி, நாக்கு ஸந்தானம், என சரீரத்திலும் உபாஸித்தல் வேண்டும்.

1203. மேதை உனக்குக் குறைவாக இருந்தால் இங்கு கூறிய மந்த்ரத்தை ஜபித்து, புத்தியைப் பெறு. செல்வத்தையும் அப்படியே அடையலாம். மேதை வந்தால்தான் செல்வத்தை ஸத்விநியோகம் செய்து நன்மை பெறுவாய். இல்லையேல் துர்விநியோகம் செய்து அழிவாய். மோக்ஷம் பெற சரீரம் நோயற்று இருக்கவும், நாக்கு மதுரமாகப் பேசவும், காது நல்லதைக் கேட்பதாகவும், செல்வம் நிறைந்ததாகவும் இருக்கவேண்டும். சிஷ்யர் அநேகர் வரவேண்டும் என தேவதைகளிடம் ப்ரார்த்தனை செய்.

1204. மூன்று வ்யாஹ்ருதிகளையும், மாஹாசமஸ்யர் என்றவர் கண்டுபிடித்த நாலாவது வ்யாஹ்ருதியையும் (ப்ராணயாமத்தில் உள்ள முதல் நாலையும்) ப்ரஹ்மமாக உபாஸனை செய். ஸ்வாராஜ்யமெனும் மோக்ஷத்தைப் பெறுவாய். ஸகல தேவர்களும் உனக்குக் கப்பம் கட்டுவர். சாந்தி உண்டாகும். எல்லோருக்கும் அதிபதியாய் விளங்குவாய்.

1205. ப்ரணவத்தை ப்ரஹ்மமாக உபாஸி. அது கர்மாவிலும் ஞான மார்க்கத்திலும் அடிக்கடி உபயோகப்படுகிறது. கோரிய பலனை அடைவாய். ரிதம் ஸத்யம் தபஸ் இந்திரிய அடக்கம், அக்னிஹோத்ர ஔபாஸனம், அதிதிபூஜை ஜீவனோபாயம், புத்ரன், பௌத்ரன் என்ற இவைகளுடன், வேதாத்யயநம், அத்யயநம் செய்து வைத்தல் ஆகிய இவை ஞான

த்தைப் பெற ஸாதனங்களாகும். ஸத்யமே சிறந்த ஸாதனம் என்று ராதீதரரும், தபஸ் என பௌருசிஷ்டியும் வேதாத்யயநம் என நாகமௌத்கல்யரும் கூறுகின்றனர். ஏதாவதொன்றை அவலம்பி.

1206. குருகுலத்திலிருந்து வீடு செல்லும் ஸ்நாதகனுக்குக் குரு சொல்வதாக ச்ருதி உபதேசம் செய்கிறது. ஸத்யத்தைச் சொல். தர்மத்தைச் செய். வேதத்தை மறவாதே. குருதக்ஷிணை கொடுத்து விவாஹம் செய்து கொள். ஸத்யம், தர்மம், ஆத்ம ரக்ஷை, ஐச்வர்யம், வேதம், தேவபித்ருகார்யம் ஆகிய இவைகளை விட்டு ஏமாறாதே. தாய் தந்தை குரு அதிதி இவர்களைத் தெய்வமாக நினை. குற்றமற்றதாயிருந்தால் இதர சிஷ்டாசாரத்தையும் கடைப்பிடி. குருவினிடமுள்ள நற்குணங்களை மாத்ரம் ஏற்றுக் கொள். மற்றதை விடு.

1207. உன்னைவிட உயர் குணமுள்ள ப்ராஹ்மணன் வந்தால் எழுந்து நின்று தக்க ஆஸநமளி. அவர் களைப்பை நீக்கி அவர் சொல்வதைப் பொறுமையாகக் கேள். நீ அவர் எதிரில் அதிகமாகப் பேசாதே. ச்ரத்தையோடு தானம் செய். அச்ரத்தையாகச் செய்யாதே. நல்ல வஸ்துவை, நாம் கொடுப்பது கொஞ்சமென்று வெட்கத்துடனும், பயத்துடனும் நல்லெண்ணத்துடனும் கொடு.

1208. கர்மாவில் அல்லது சீலத்தில் அல்லது குற்றமுள்ளோரிடத்தில் ஸந்தேஹம் வந்தால் அக்கர்மாவில் ஈடுபட்டு, தானே நன்கு அநுஷ்டிப்பவரும் க்ரூரபுத்தி இல்லாதவரும், தர்மாபிமான முள்ளவரும், விமர்சநபுத்தி உள்ளவருமான சிஷ்டர் எப்படி அவ்விஷயத்தில் நடக்கிறாரோ, அதே மாதிரி நீ நடந்துகொள்.

## ப்ரஹ்மானந்த வல்லீ.

1209. ஸத்யம் ஞானம் அனந்தம் என்பதே ப்ரஹ்மத்தின் லக்ஷணமாம். இந்த ப்ரஹ்மம் ஐந்து கோசங்களைத்

தாண்டி அதற்கு மேலாக இருக்கிறது. ஒவ்வொரு கோசத்தையும் ஆத்மாவாக உபாஸிப்பவனுக்கும் அவாந்தர பலம் உண்டு. கோசாதீதனை உபாஸிப்பவன் மோக்ஷத்தை அடைவான். இப்பூத உடலே அன்னமயகோசம். நம் தலையே இதன் தலை. இரண்டு கைகளும் இரண்டு இரக்கைகள். இடையில் உள்ளது ஆத்மா. நாபிக்குக் கீழுள்ளது புச்சம். இந்த உபாஸனையில் ஸகலமான புஜிக்கத்தக்க வஸ்துக்களை அடையலாம்.

1210. ப்ராணமய கோசத்தை ப்ரஹ்மமாக உபாஸி. ப்ராணன் தலை. வ்யாநனும் அபாநனும் இரக்கைகள். ஆகாசம் ஆத்மா. பூமி புச்சம். இப்படி உபாஸிப்பவனுக்கு தீர்க்காயுஸ் உண்டாகும். மநதை ஆத்மாவாக உபாஸி. இதற்கு யஜுஸ் தலை. ரிக்ஸாமமிரண்டும் ரக்கைகள். ப்ராஹ்மணம் ஆத்மா. அதர்வாங்கிரஸ் புச்சம். விக்ஞாநத்தை ப்ரஹ்மமாக உபாஸி. ச்ரத்தை சிரஸ். ரிதமும் ஸத்யமும் இரக்கைகள். யோகம் ஆத்மா. மஹத்தத்வம் புச்சம். இதன் பலமாக பாபங்களைவிட்டு, ஸகல ஸுகங்களையும் அநுபவிப்பாய். ஆநந்தத்தை ப்ராஹ்மமாக உபாஸி. ப்ரியமே சிரஸ். மோதமும் ப்ரமோதமும் பக்ஷம். ஆநந்தமே ஆத்மா. ப்ரஹ்மம் புச்சம்.

1211. ரஸவடிவமாக இருக்கிறது ஆத்மா. அதை அடைந்தவன் ஆநந்தத்தை அனுபவிப்பான். இதனிடத்தில் லயமானவர் பயமற்றவர் ஆவர். இந்த அகண்ட ஸ்வரூபத்தில் பேதபுத்தி வைப்போர் பயத்தை அடைவர். இந்த ஆத்மாவினிடம் பயந்து, வாயு ஸூர்யன் அக்னி இந்த்ரன் யமன் முதலியவர்கள் தங்கள் வேலையை காலந் தவறாமல் அநுஷ்டிக்கின்றனர்.

1212. ப்ரஸித்தமான லௌகிக ஆநந்தத்தைக் காட்டி ப்ரஹ்மாநந்தத்தை ச்ருதி விளக்குகிறது. த்ருட சரீரமுள்ளவனும் ஸாதுவும் பேராசை இல்லாதவனும் அரோகனு

-மான ஓர் யுவாவுக்கு பூர்ண லக்ஷ்மி நிறைந்த பூமண்டலம் ஸ்வாதீநமாக இருந்தால் இது மநுஷ்ய ஆநந்தமாகும். நூறு மடங்கு சேர்ந்த மநுஷ்யாநந்தம் ஒரு மநுஷ்ய கந்தர்வர் ஆநந்தமாகும். அதில் நூறுமடங்கு சேர்ந்தால் ஓர் தேவ கந்தர்வ ஆநந்தமாகும். அதில் நூறுமடங்கு சேர்ந்தால் ஓர் பித்ரு ஆநந்தமாகும். அதில் நூறுகொண்டது ஓர் ஆஜாநஜான (ஸ்மார்த்த கர்மாவால் தேவரானவர்) என்ற தேவர் ஆநந்தமாகும். அதில் நூறுகொண்டது ச்ரௌத கர்மாவால் தேவரான கர்மதேவாநந்தம். அதில் நூறுகொண்டது தேவாநந்தம் அதில் நூறுகொண்டது இந்த்ராநந்தம். இதில் நூறு கொண்டது ப்ருஹஸ்பதி ஆநந்தம். இதில் நூறுகொண்டது ப்ராஜாபதி ஆநந்தம். இதில் நூறுகொண்டது ப்ரஹ்மாநந்தம்.

1213. வாக்கிற்கும் மநதிற்கும் எட்டாத ஆநந்த வடிவனான ஆத்மாவை அறிந்தால் பயம் அகலும். நல்ல கர்மாவைச் செய்வதால் உண்டாகும் ஸ்வர்க்காதி பலனும் நிஷித்த கர்மாவைச் செய்வதால் உண்டாகும் நரகமும், ஞானிக்கு வாராது. பேராநந்தம் பெற்று மகிழ்வான்.

## ப்ருகு வல்லீ.

1214. ப்ருகு என்பவர் தன் தந்தையான வருணனை நமஸ்கரித்து ப்ரஹ்மத்தை உபதேசியும் என்றார். அவர் அன்னம் ப்ராணம் கண் காது மநஸ் வாக் இதே ப்ரஹ்மம். எதனிடமிருந்து உலகம் உண்டாகிறதோ?. எது உலகை ரக்ஷிக்கிறதோ? எதனிடம் உலகம் லயமாகிறதோ? அதே ப்ரஹ்மம் என்று அறி. இதைத் தபஸால் அறிந்துகொள் என்று உபதேசித்தார்.

1215. பஞ்ச கோசங்களையும், மேற்கண்ட லக்ஷணமிருப்பதால் ப்ரஹ்மம் என எண்ணி, குருவை ஆச்ரயித்து தபஸால் முறையே கோசங்களில் ஒன்றைத்தாண்டி மற்றதை

ப்ரஹ்மமாக நினைத்தான். இப்படி உபாஸிப்பவர் பூர்ண அன்னத்தையும், புஜிக்கும் சக்தியையும் பெறுவான். ப்ரஜை, பசு முதலியவைகளால் உலகில் மஹான் என கொண்டாடப் படுவான். நல்ல வர்ச்சஸ் உண்டாகும். கீர்த்தி உண்டாகும்.

1216. அன்னத்தின் வழியாக ப்ரஹ்மத்தை நாம் அறிவதால் குருவைப் போல் அன்னத்தையும் நிந்திக்கக் கூடாது. அதை எரியவுங் கூடாது. அன்னத்தை எந்தவிதத் தாலாவது அதிகமாக ஸம்பாதிக்க வேண்டும். ஏனென்றால் நமது வீட்டில் தங்க வருகிறவர்களுக்கு இடமில்லை என்று சொல்லக்கூடாது. அன்னம் ஸித்தமாக இருக்கிறது என்று அதிதிகளுக்குச் சொல்ல வேண்டும். எந்த எந்த வயதில் எவ்வளவு அன்புடன் அதிதிக்கு அன்னமளிக்கிறோமோ அதற்கேற்றபடிதான் மறு உலகிலும் மறு ஜன்மாவிலும் நமக்கு அன்னம் கிடைக்கும்.

1217. ஐந்து கோசங்களையும் ஆத்மாவாக உபாஸித்து அவைகளல்ல ஆத்மா என்று அவைகளைவிட்டு ஆதித்யனிடத் திலும் நமது ஹ்ருதயகுஹையிலுமுள்ளவன் ஒருவனே ஆவான், அவனே ஆத்மா என்று உபாஸித்தால், இந்த சரீரம் அழிந்தவுடன் ப்ரஹ்மலோகஞ் செல்லலாம். அங்கே பஞ்சு கோசங்களையுந் தாண்டி ஆநந்தமாக ஸாமகாநம் செய்துக்கொண்டு மோக்ஷ ஸுகத்தைப் பெறலாம்.

## 87. சாந்தோக்ய உபநிஷத் பாஷ்யம்
## (8. அத்யாயம்.)

1218. ப்ரணவத்தை உத்கீதம் என்ற ஸாமவிசேஷமாக உபாஸி. எந்த கர்மாவையும், அதில் உபயோகமாகும் மந்த்ரத்தின் அர்த்தத்தை உணர்ந்து, ச்ரத்தையுடன் செய்தால் அதற்கு அதிக விசேஷ பயனுண்டாகும். அர்த்தத்தை உணராமல் செய்தால் அதற்கு ஸாமான்ய பயனே உண்டு.

யமனைக் கண்டு பயந்து தேவர்கள் வேதத்தைச் சரணம் அடைந்தனர். கர்மாவில் உபயோகமாகும் அவ்வேத மந்த்ரங்கள் அவர்களை மறைத்துக் கொண்டன. ஆதலால் வேதத்திற்கு சந்தஸ் என்று பெயர் உண்டானது.

1219. குரு தேசத்தில் ஒரு ஸமயம் பஞ்சம் உண்டாயிற்று. அப்போது உஷஸ்தி என்பவர் தனது ப்ரௌடை ஆகாத மனைவியுடன் ஆஹாரத்திற்கு வகை யில்லாமல் வருந்தினார். ஓர் யானைப்பாகனிடம் சென்று நீ தின்னும் கொள்ளில் கொஞ்சம் கொடு என்றார். உண்ட மீதியை எப்படிக் கொடுப்பதென அவன் யோசித்தான். பாதகமில்லை கொடு என்றார். கொடுத்தான். அவன் தீர்த்தம் கொடுக்கும்போது, வேண்டாம்; அது உச்சிஷ்டம் என்றார் ரிஷி. அவன், கொள்ளு உச்சிஷ்டமில்லையா என்று வினவ, அதை உண்ணாவிடில் இறப்பேன் ; ஜலம் கிடைத்த இடத்தில் குடிப்பேன் என்றார். ப்ராணாபத்தான காலத்தில்கூட சரீர ரக்ஷணத்திற்கு அத்யவச்யம் வேண்டியதைத் தவிர சாஸ்த்ர விரோதமான மற்றதைத் தொடாதே.

1220. ரிஷி தனக்குக் கிடைத்ததில் பாதியை மனைவிக்கு அளித்தார். அவள் முன்னமே புஜித்திருந்தாலும் பர்த்தா கொடுத்ததை வாங்கி, ஜாக்ரதையாக வைத்தாள். மறுநாள் அவர் ஏதேனும் ஆஹாரம் கிடைத்தால் புஜித்து, அரசன் செய்யும் யாகத்திற்குச் சென்று வேண்டிய தனம்பெறலாம் என்றார். மனைவி தான் வைத்திருந்த கொள்ளைக் கொடுத்தனுப்பினாள். வந்த பொருளைக்காத்து ஸமயமறிந்து கணவனுக்கு அளிப்பது கற்பரசிகளின் கடமை ஆகும்.

1221. அரசனது யாகத்திற்குச் சென்று ஒவ்வொரு ரித்விக்குகளையும் நீர் சொல்லும் மந்த்ரத்தின் கருத்து யாது? எந்த தேவதையைத் துதிப்பது இம் மந்த்ரம்? இதை அறியாமல் மேலே மந்த்ரம் சொன்னால் உமது தலை வெடிக்கும்.

என்றார். அரசன் இவரை வணங்கி தாங்களே எல்லா மந்த்ரார்த்தங்களையுங்கூறி அந்த ரித்விக்குகளைப்போல் ஸம்மானத்தைப் பெறும் என்றான். அப்படியே செய்தார். கற்றோருக்குச் சென்றவிடமெல்லாம் சிறப்பு.

1222. க்லாவர் என்ற முனிவர் ப்ராஹ்ம யக்ஞம் செய்வதற்கு விதிப்படி ஊரைவிட்டு வெளியிற் சென்று வேதாத்யயநம் செய்தார். இதைக்கண்டு ஸந்தோஷமடைந்த தர்மதேவதை ஓர் வெள்ளை நாய் வேஷத்துடன் இவர் எதிரில் தோன்றிற்று. அதனருகில் நாய் குட்டிகள் வந்து பசிக்கு அன்னம் கொடும், என அந்நாயை வேண்டின. அது நாளைக் காலையில் வாருங்கள் என்றது. அதேபோல் நாய்கள் காலையில் வந்தன. ரிஷியும் இதைப் பார்க்க ஆவலுடன் அங்கு வந்தார். அவைகள் பஹிஷ்பவமாநம் என்ற கர்மாவில் ரித்விக்குகள் ஒருவர் பின் பாகத்தை மற்றவர் பிடித்து வரிசையாக வருவதுபோல் வாலைப் பிடித்து பங்தியாக, வேதகோஷம் செய்தன. உடனே அன்னங் கிடைத்தது. தேவதாப்ரார்த்தனையால் அன்னாதிகளைப் பெறலாம்.

1223. தர்மத்திற்கு முக்யமாக, அக்னிஹோத்ரம் முதலிய யக்ஞம், நியமமான வேதாத்யயநம், கையில் கிடைத்ததைக் கேட்டவருக்கு இல்லை என்று கூறாமல் கொடுத்தல் என்ற மூன்று முக்ய பிரிவுகள் உண்டு. க்ருச்ர சாந்த்ராயணாதி தபஸை முதற்கூறிய யக்ஞமாகும். ஆசார்ய குலத்தில் ப்ரஹ்மசர்ய நியமத்துடனிருப்பது இரண்டாவது ஆகும். நைஷ்டிக ப்ரஹ்மசர்யம் மூன்றாவதாம். இதில் ஒன்றைக் கைப்பற்றி நன்மை அடை.

1224. ப்ரஹ்மா உலக நன்மையைக்கோரி, ஸாரமான பொருளைத் தேடத் தவம் புரிந்தார். வேதமே ஸாரமெனக் கண்டார். அதிலும் ஸாரத்தைக் காண மறுமுறை தவஞ் செய்தார். மூன்று வ்யாஹ்ருதிகளைக் கண்டார். அதி

ஆம் ஸாரத்தைத் தேட தவம் செய்து ப்ரணவத்தையே உயர்ந்த ஸாரமாகக் கண்டெடுத்தார். இலைகளை நரம்பு பிடித்திருப்பதுபோல் ஸகல வேத வாக்கையும், ப்ரணவம் பிடித்திருக்கிறது. அதை அதற்குரிய அதிகாரி உபாஸித்தால் மோக்ஷம் பெறலாம்.

1225. ஸூர்யனை மதுவாக எண்ணி உபாஸி. தேவர்கள் நாம் கொடுக்கும் வஸ்துக்களைக் கண்ணால் கண்டே ஸந்தோஷப்படுகின்றனர். நம்மைப்போல் உண்பதில்லை. ஆதலால் தேவார்ப்பணம் செய்யாமல் எதையும் உண்ணாதே. காயத்ரியைவிட உயர்ந்த மந்த்ரமில்லை. அதையே ப்ரஹ்மமாக உபாஸி. ஹ்ருதய கமலத்தை ஸ்வர்க்கமாக நினை. அதை அடையும் மார்க்கத்தில் பஞ்ச ப்ராணன்களும், ஐந்து வாசற்படிகளிலும் த்வாரபாலகர்களாக நிற்கின்றனர். அவர்களை ஸ்வாதீனப்படுத்திக்கொண்டால் உள்ளே நுழையலாம். உள்ளே ஜ்யோதிஸ் ப்ரகாசிக்கும். அந்த தேஜஸ் நம் சரீரத்தை விட்டால் உஷ்ணம் அகலும். உடல் ப்ரேதமாகும்.

1226. ஜாநச்ருதி என்ற அரசன் ச்ரத்தையோடு அபரிமிதமாக அன்னதாநம் முதலாக பல தாநங்களைச் செய்து புண்யவான் என கீர்த்தி பெற்றார். அவனைச் சுற்றி எண்ணிறந்த ஸாதுக்கள் குடும்பத்துடன் வஸித்து வந்தனர். அவன் தாநத்தைக்கண்டு ஸந்தோஷித்த தேவர்கள், ஹம்ஸ ரூபமாக அவன் எதிரில் நின்று, பரஸ்பரம் பேசிக்கொண்டனர். ஒன்று உலகில் இந்த ஜாநச்ருதிக்கு ஸமம் யார் இருக்கிறார் என்று கூறிற்று. ரைக்வரோ அவர். என்ன! அப்படிச் சொல்கிறாயே! என்றது மற்றொன்று. காலையில் ஸ்துதிபாடகர் வந்து அரசனைப் போற்றும்போது, அதை நிறுத்தி ரைக்வரைத் தர்சிக்க வேண்டும் என்றான் அரசன். பெரியோரைத் தேடி சரணமடை.

1227. வந்திகள் ஆச்ரமங்களெல்லாம் அலைந்து, வண்

டியின்கீழ் உட்கார்ந்து சிரங்கைச் சொறிந்து கொண்டிருக்கும் ரைக்வரைக் கண்டு அரசரிடம் அறிவித்தார்கள். அறுநூறு பசுக்களையும் ஆபரணங்களையும் ரதத்தையும் அவருக்கு அர்ப்பணம் செய்து தாங்கள் உபாஸிக்கும் தைவத்தை எனக்குக் கூறும் என்றார் அரசர். உமது தநம் எனக்கு வேண்டாம் என்று ரைக்வர் கூறினர். பிறகு அவர் கருத்தை உணர்ந்த அரசன் ஆயிரக்கணக்கான பசுக்களையும் க்ராமம் முதலியவைகளையும் தன் அருமைப் புதல்வியுடன் அவருக்கு தாநம் செய்தார். அவர் இவைகளை ஏற்று அரசனுக்கு ஸம்வர்க்க வித்யையை உபதேசம் செய்தார். பூர்ணமாக குரு தக்ஷிணையை அளி. குருவின் கருத்தை அறிந்து அவர் விரும்பியதைச் செய். பிறகு வித்யை, பயனை அளிக்கும்.

1228. ஸத்யகாமர் என்ற ஓர் சிஷ்யன், கௌதமரை வணங்கி தனக்கு வித்யோபதேசஞ் செய்ய வேண்டுமென ப்ரார்த்தித்தான். குலகோத்ரம் தெரியாதவனுக்கு வித்யைகற்பிக்கலாகாது. ஆதலின் உன் கோத்ரம் என்ன என்றார் குரு. யானறியேன்; ஜபாலா எனும் என்தாயைக் கேட்டேன் "யுதிதைங்கரியத்தில் ஈடுபட்டிருந்ததால் நான் அதை அறியவில்லை என்றாள் என் தாய்" என்று கூறினன் சிஷ்யன். கபடமில்லாதருஜுகுணமிருப்பதால் அவன் ப்ராஹ்மணன் தான் எனத் தீர்மானித்து குரு நாநூறு பசுக்களைக்கொடுத்து இது ஆயிரம் பசுவான பிறகு வா உபதேசம் செய்கிறேன் என்றார். அப்படியேசெய்யும் சிஷ்யன் பக்தியைக் கண்டு ஸந்தோஷித்த வாயு ஓர் ரிஷபம் மூலமாக ஆயிரமாகிவிட்டோம், ஆதலால் நீ குருகுலம் செல் என்றது. ஜகத்தைப் பதினாறுவடிவமாகப் பிரித்து ஓர் பாகத்தையும் உபதேசித்தது. குரு சுச்ரூஷை செய்யத் தவறாதே. குரு பணிவிடையால் தேவரும் ஸந்தோஷிப்பார்.

1229. குருகுலத்திற்குத் திரும்பும் போது ஸாயந்

காலத்தில் ஸந்த்யையைச் செய்து ஸமிதாதாநம் செய்தான் ஸத்ய காமன். அக்னி ஓர் பாதத்தை அவனுக்கு உபதேசித்தது. ஆதித்யன் ஒன்றையும் நீர்க்கோழி ஒன்றையும் உபதேசித்தது. ஸ்வதர்மத்தால் ச்ரேயஸை அடை. நாலு பாதத்துடன் ப்ரஹ்ம ஸ்வரூபத்தை அறிந்து ஆசார்யனிடம் சென்றான். ப்ரஹ்ம நிஷ்டனைப்போல் இருக்கிறாயே! உனக்கு யார் அதை உபதேசித்தது என்றார் குரு. தேவதைகள் உபதேசித்தனர்; ஆயினும் குரு மூலமாக வந்த வித்யையே பயனை அளிக்கும். ஆதலால் நீங்கள் உபதேசம் செய்யுங்கள் என்றானவன்.

1230. உபகோஸலர் என்பவர் ஜாபாலியினிடம் வித்யை கற்கச் சென்று பனிரண்டு வருஷம் அக்நிஹோத்ரத்திற்கு சுச்ரூஷை செய்தார். குரு மனைவி குருவைப்பார்த்துத் தனக்குப் பணிவிடை செய்யும் இவனுக்கு தத்வோபதேசஞ் செய்யாவிடில் அக்னி தங்களைக் கோபிப்பர் என்றாள். அப்போதும் குரு உபதேசம் செய்ய வில்லை. மூன்று அக்னிகளும் ப்ராணன், ஸுகம், ஆகாசம், இதே ப்ரஹ்மமென்று அவனுக்கு உபதேசித்தன. ஆசார்யர் அந்த சிஷ்யனைப் பார்த்து உன் முகம் ப்ரஹ்மநிஷ்டன் முகத்தைப்போலிருக்கிறதே யார் உபதேசித்தது என்றார். அக்னிகள் சிலதைக் கூறி தங்களிடம் மீதியைக் கற்கச் சொன்னார்கள் என்றான் சிஷ்யன். அவர் உபகோஸலம் என்ற வித்யையை அவனுக்கு உபதேசித்தார்.

1231. ச்வேதகேது என்ற ரிஷி ஜைவலி எனும் பாஞ்சால ராஜனது ஸபைக்குச் சென்றார். அரசன் ரிஷியைப் பார்த்து, ஸ்வாமி, இறந்த பிறகு ஜீவன் எங்கே செல்கிறது? எப்படி திரும்புகிறது? தேவயாநமும் பித்ருயாநமும் எங்கு பிரிகிறது? பித்ருலோகம் எவ்வளவு பேர் வந்தாலும் ஏன் நிரம்புவதில்லை? எப்படி ஐந்தாவது ஹோமமான பிறகு

ஜலம், புருஷன் என்று பெயரைப் பெறுகிறது ? என இந்த கேள்விகளைக் கேட்டார். அவருக்குப்பதில் தெரியவில்லை. உடனே ரிஷி தன் குருவான தந்தையிடம் சென்று இதைக் கேட்டார். அவருக்கும் அவ்விஷயம் தெரியவில்லை. இருவரு மாகவந்து அரசனையே இதைக் கேட்டனர். ஒருவனும் எல் லாம் அறிந்தவனல்ல. நீ அறியாததைப் பிறர் அறியலாம். அவரிடம் சென்று வணக்கமாக அதை அறி.

**1232.** அரசன் அவர்களைப் பூஜித்து போகார்ஹமான பல பொருளைத் தருவதாகச் சொன்னான். ரிஷிகள் அதை விரும்பவில்லை. அவ்வித்யையையே உபதேசிக்க வேண்டுமென் றார்கள். வெகு காலம் காக்கவைத்து, இதுவரை க்ஷத்திரிய பரம்பரையில் வந்த இதை உமக்குச் சொல்கிறேன். முறைப் படி காக்க வைத்ததற்கு மன்னியும் என்றான். அக்னியில் ஹோமம் செய்வது முதலாவது ஆஹுதி ஆகும்; மழை பெய் வது இரண்டாவதாம்; ஒரு வருஷம் என்பது மூன்றாவது ஆகும்; புருஷன் உடலில் வருவது என்பது நாலாவதாம்; ஸ்திரீயின் கர்ப்பத்தில் புகுவது ஐந்தாவது அஹுதி ஆகும். அதன் பிறகே ஜீவனுக்குப் புருஷன் என்று பெயர் உண்டா கிறது என அரசன் உபதேசித்தான்.

**1233.** மேற்கண்ட பஞ்சாக்னியை அறிந்த க்ருஹஸ்த னும் ஸன்யாஸியும், பகல், சுக்லபக்ஷம், மாஸம், உத்தராய ணம், ஸம்வத்ஸரம், ஆதித்யன், சந்த்ரன், வித்யுத், ப்ரஹ்ம லோகம், ஆகிய இவ்விடங்களுக்கு க்ரமமாகச் செல்கிறான். அது தேவயாநம் எனப்படும். அக்னிஹோத்ரம், குளம் வெட் டுதல் முதலிய இஷ்டாபூர்த்தங்களைச் செய்வோர், தூமம், ராத்ரி, க்ருஷ்ணபக்ஷம், தக்ஷிணாயநம், பித்ருலோகம், ஆகாசம், சந்த்ரன் இவைகளை அடைந்து அங்கு புண்ய பலனை அநு பவித்து, ஆகாசம், வாயு, தூமம், மேகம், மழை, ஓஷதி முத லியவைகளாகத் திரும்புகிறான். இது பித்ருயாநமாம். ஓஷதி

சரீரத்திலிருந்து அடுத்த ஸ்திதியை அடைவதுதான் பெருங் கஷ்டமாகும்

1234. புருஷனது ஆஹாரமங்கி ரேதஸ்ஸாக வந்து புண்யம் செய்திருந்தால் ப்ராஹ்மண க்ஷத்ரிய வைச்ய ஜன்மாவையும், பாபியானுல் நாய் பன்றி சண்டாளன் முதலிய ஜன்மாவையும் அடைவான். இவ்விரண்டு வழிக்கேற்ற ஸத்கர்மாவைச் செய்யாதவர், கொசு புழு முதலிய ஜன்மாவை எடுத்து அடிக்கடி பிறப்பு இறப்புகளை அடைவர். இவ்விரு காரணத்தாலும் பித்ருலோகம் நிறைவதில்லை. ஸ்வர்ணத்தைத் திருடுதல், குரு ஸ்த்ரீ கமநம், ஸுராபாநம், ப்ரஹ்மஹத்தி, இப்பாபம் செய்தவர்களுடன் சேருதல், இவைகளே பஞ்சமஹாபாபங்களாகும். பஞ்சாக்னி வித்யோபாஸகனிடம் இவைகளும் அணுகாது.

1235. ப்ராசீநசாலர் முதலிய ஐந்து முனிவர்கள், ஆத்மாதான் ப்ரஹ்மமா? அதை வைச்வாநரன் என உபாஸிக்கலாமா? என ஸந்தேஹங்கொண்டு உத்தாலகரைக் கேட்டனர். அவர் அச்வபதி என்ற அரசனைக் கேளுங்கள் என்றார். அவனைக் கேட்டனர். அரசன் இவர்களைப் பூஜித்து என் ஊரில் திருடன், கிருபணன், மதுபாநம் செய்பவன், அக்னி பூஜை செய்யாதவன், மூடன், வ்யபிசாரி முதலியவர்கள் கிடையாது. ஆதலால் சுத்தமான தநத்தை அபரிமிதமாக உங்களுக்குத் தருகிறேன்; ஏற்றுக் கொள்ளுங்கள் என்றான். ஸத் திரவ்யமானாலும் அது அழியும். ஆதலால் அழியாத ப்ரஹ்மத்தை அடைய ஆவல் கொண்டனர் அவர்கள். இவர்களது விநயத்தையும் வைராக்யத்தையும் கண்டு காக்க வைக்காமல் உடனே வைச்வாநர வித்யோபதேசம் செய்தான். அதேபோல் நீ ஞானத்தைத் தேடு. எவரிடமாயினும் அதைப் பெறு. அஹங்காரம் கொள்ளாதே.

1236. அக்னிஹோத்ரம் என்ற கர்மாவும் போஜனத்

திற்கு முந்தி செய்யும் ப்ராணாக்நிஹோத்ரம் என்பதும் கர்ம மார்க்கத்தில் க்ருஹஸ்தனுக்கு நித்ய கர்மாவாக விதிக்கப் பட்டது. இதை வைச்வாநரன் என்ற ப்ரஹ்மமாக உபாஸித்துச் செய்தால் ப்ரஹ்ம லோகத்தை அடையலாம். இங் ஙனம் அறிந்து செய்தால்தான் அக்நியில் ஆஹூதி செய்ததாகும். மற்றது சாம்பலில் செய்வதற்கு ஸமமாகும். குழந்தைகள் தாயைப் பால் வேண்டுமென்று எதிர் பார்ப்பதுபோல் அக்நிஹோத்ரத்தை ஸகல தேவர்களும் எதிர் பார்க்கின்றனர். ஸ்வகர்மாவை விடாதே.

1237. நாம் உண்ணும் அன்னம், ஸ்தூலம் மத்யமம் அணு என மூவ்வகையாக மாறுகிறது. ஸ்தூலம் அமேத்யமாகவும், மத்யம் மாம்ஸமாகவும், அணு மனதாகவும்ஆகிறது. நாம் குடிக்கும் ஜலத்தில் ஸ்தூலம் மூத்ரமாகவும், மத்யம் ரக்தமாகவும், ஸூக்ஷ்மம் ப்ராணனாகவும் மாறுகிறது. நாம் உண்ணும் எண்ணை நெய் முதலிய தேஜஸில் ஸ்தூலம் எலும்பாகவும், மத்யம் மஜ்ஜையாகவும், ஸூக்ஷ்மம் வாக்காகவும் ஆகிறது. சாஸ்திரத்தில் விதித்த உணவை உண்டு நல்ல மனதையும் ப்ராணனையும் வாக்கையும் பெறு.

1238. ஓர் குரு அன்னமயமே மநஸ் என்பதைச் சிஷ்யனுக்கு அநுபவ பூர்வமாக உபதேசிக்க எண்ணினார். சிஷ்யனைப் பதினைந்துநாள் ஒன்றையும் சாப்பிடாதே; வேண்டிய அளவு தீர்த்தத்தைக் குடி. ப்ராணன் ஜலமயமானதால் ப்ராண பயமில்லை என்றார். அப்படியே சிஷ்யன் பதினைந்துநாள் உபவாஸமிருந்து வந்தான். அவனை குரு நீ அத்யயநம் செய்த வேதத்தைக் கூறு என்றார். அவன் ஒன்றும் தோன்றவில்லை என்றான். நன்றாக சாப்பிட்டுவா என்றார். புஜித்து வந்தவுடன் அவ்வேதம் முன்போல் நினைவுக்கு வந்தது. சுத்த அன்னத்தை மிதமாக புஜி.

1239. கூண்டில் அடைத்துக் கயிற்றால் கட்டிய பக்ஷி

னப்படிப் பறந்து பறந்துப் பார்த்து வேறு கதி இல்லாமல் கூண்டிலேயே உட்காருமோ, அப்படி மநம் எங்குசென்றாலும் முடிவில் ப்ராணனிடத்திலேயே வந்து அடங்குகிறது. ஆதலால் ப்ராணனை அடக்கினால் மநம் அடங்கும். ப்ராணாயாமத்தைச் செய்து மநதை அடக்கு.

1240. ப்ரதிதிநமும் ஜீவன் தனது ஆத்ம ஸ்வரூபமான ப்ரஹ்மத்தினிடம் லயமாகிறது. இதைத் தூங்குகிறது என்கிறோம். தேனீக்கள் பல இடங்களிலிருந்தும் தேனைக் கொண்டுவந்து ஒன்று சேர்க்கின்றன. அதில் இந்த புஷ்பத்தின் தேன் இது என்று, எப்படிப் பிரிக்க முடியாதோ அப்படியே ப்ரஹ்மத்தை அடைந்த காலத்தில் ஜீவனை, ப்ரஹ்மத்தைவிட்டுப் பிரிக்கமுடியாது. ஆனால் தூங்கி எழுந்து வரும் போது அந்தந்த ஜீவனும் முன்னிருந்தபடியே திரும்பி வந்து விடுகிறது.

1241. ஓர் பச்சை மரத்தை அடியிலோ, இடையிலோ அல்லது நுனியிலோ கோடரியால் அடித்தால் அம்மரம் இறப்பதில்லை. ஆங்காங்கு அது வேர் வழியாக உறிஞ்சிய ஜலம், பாலாக வெளியில் வருகிறது. ஒரு கிளையிலிருந்து ஜீவன் வெளிப்பட்டால் உடனே அக்கிளை பட்டுவிடுகிறது. அதே போல் எங்கும் நிறைந்த ஆத்ம ஸ்வரூபமான ஜீவன், எந்த சரீரத்தை விடுகிறதோ அது இறக்கும். ஜீவன் இறப்பதில்லை. இதை அறியாமல் ஜீவனிறந்ததாக மூடர் சொல்வர்.

1242. அணுவாய் அவ்யக்தமாய் உள்ள ப்ரஹ்மத்தினிடமிருந்து மிகப் பெரியதான, இவ்வுலகம் எப்படி உண்டானது? என சிஷ்யன் கேட்க, ஓர் ஆலம் விதையைக் கொண்டு வரச்சொல்லி அதைஉடைத்து உள்ளே என்ன இருக்கிறது என்றார் குரு. ஒன்றுமில்லை என்றான் சிஷ்யன். இதிலிருந்து எப்படி பெரிய ஆல மரம் உண்டாகிறதோ அப்படியே ஆத்மாவினிடமிருந்து உலகம் உண்டானது என்றார் குரு.

1243. ப்ரஹ்மம் நேரில் காணப்படவில்லையோ என்றான் சிஷ்யன். ஆனால் ஓர் உப்புக்கட்டியை ஜலத்தில் போடுஎன்றார் குரு. போட்டான் சிஷ்யன். கொஞ்சநேரமான பிறகு உப்புக்கட்டியை எடுத்து வா என்றார். காணவில்லை என்றான். ஆனால் அந்த ஜலத்தை இடையிலும் ஓரத்திலும் நான்கு புறத்திலும் எடுத்துக் குடி என்றார். குடித்தான். எப்படி இருக்கிறது என்றார். ஒரே உப்பாக இருக்கிறது என்றான். உப்புதான் முன் இல்லை என்றாயே என்று கேட்க கண்ணுக்கு உருவுள்ளதாகத் தெரியவில்லை. நாக்குக்கு தெரிகிறது என்றான். அதேபோல்தான் ப்ரஹ்மம் கண்ணுக்குப் புலப்படாவிடினும் ஞானத்தால் ப்ரத்யக்ஷமாகும் என்றார் குரு.

1244. இறக்குந்தருவாயிலுள்ள ஒருவனை அணுகி அவன் பந்துக்கள் என்னைத் தெரிகிறதா? நான் யார் என் கேட்கின்றனர். அவனது வாக்கு மநஸிலும் மநஸ் ப்ராணனிலும் ப்ராணன் தேஜஸ்ஸிலும் தேஜஸ் பரமாத்மாவினிடமும் லயமாவதற்குள் அவர்களை அவன் அறிகிறான். ஒன்றில் ஒன்று லயமாகும்போது முன்னுள்ள வியாபாரம் அடங்கி விடுகிறது. அப்பொழுது ஒன்றையும் அறிவதில்லை. ஒரு பொருளை ஒருவன் திருடினான் என ஸந்தேஹம் உண்டானால் பழுத்த இரும்பை எடுக்கச் சொல்வது முற்கால வழக்கம். திருடனாயின் அவன் கை எரியும். திருடாதவன் கை எரியாது. அதேபோல் கடவுளை அறிந்தவன் மறுபடி பிறப்பு இல்லை. அறியாத திருடன் தன் கர்மாவிற்கேற்றபடி ஜன்மமெடுப்பான். துக்காக்நியால் கஷ்டமடைவான்.

1245. நாரதர் ஸநத்குமாரரை வணங்கி ப்ரஹ்மவித்யையை உபதேசியும் என்றார். குரு சிஷ்யனை நோக்கி உனக்கென்ன தெரியும் என்றார். எல்லா மந்த்ரங்களையும் வேத அங்கங்களையும் மற்றவைகளையும் அறிவேன். ஆனால் ஆத்ம வித்யையை அறியேன். தங்களைப் போன்றவர்களிடமிருந்து

அதை அறிந்தே சோக மோஹங்களைவிட்டுச் சுகம் பெறலாம் எனக் கேள்விப்பட்டேன். தங்களைச் சரணமடைந்தேன் என்றார். குரு அவனறிந்த வேதங்களையே ப்ரஹ்மம் என உபாஸி என்று உபதேசித்தார். பின்னர் க்ரமமாக முக்கிய ப்ரஹ்மத்தை உபதேசித்தார். உன் பரிபாகத்திற்கேற்றபடி குரு கூறுவதில் அவநம்பிக்கை வைக்காதே.

1246. ஆஹாரம் சுத்தமானதாக இருந்தால் தான் மநம் சுத்தமாக இருக்கும். கண் காது முதலியவைகளால் உண்டாகும் அறிவே ஆஹாரமாகும். மநம் சுத்தமானால் ஸ்மிருதி உண்டாகும். ஸ்மிருதி உண்டானால் ஸம்சயங்கள் அகலும். இப்படிப்பட்ட பரிபாகத்தை அடைந்தார் நாரதர். ஸ்கந்தர் என்று வேதவித்துக்களால் அழைக்கப்படும் ஸநத்குமாரர், நாரதருக்கு தத்வோபதேசம் செய்தார். இந்திரியங்களால் நல்விஷயங்களையே ஏற்றுக் கொள்.

1247. ப்ரஹ்ம ஸ்வரூபமான ஜீவனுக்கு, இருப்பிடமாக இருக்கிறது நமது உடல். ஆதலால் அது ப்ரஹ்ம பட்டணம் என்றும் ஹ்ருதயபுண்டரீகமே வீடு என்றும் கூறப்படுகிறது. அங்கே உள்ள ஆத்மாவை உபாஸித்து ப்ரஹ்மத்தைக் கண்டவன், விரும்பினால் ஸகல லோகமும் அவனது மநஸ் ஸங்கல்பத்தாலேயே அவனருகே வரும். இறந்த பந்துக்களையும் இழந்த தந்தையையும் ஹ்ருதயத்தில் காண்பான்.

1248. பெண் விஷயமான ஆசையை விடுவது ப்ரஹ்மசர்யம் எனப்படும். ஆத்மாவை அடைய இது சிறந்த ஸாதநமாகும். யக்ஞம், உபவாஸம், தபஸ், மௌநம், முதலிய ஸாதநங்களால் கிடைக்கும் பயன் ப்ரஹ்மசர்யத்தாலேயே கிடைக்கும். ப்ரஹ்மசர்யத்தால் அபராஜிதம் என்ற ப்ரஹ்மலோகத்தை அடையலாம். அங்கே "அரம்" என்றும் "ண்யம்" என்றும் இரண்டு நதிகள் இருக்கின்றன. அந்த ஜலத்தைக் குடித்ததும் உடன் ஸந்தோஷமுண்டாகும். அமிருதத்தைப் பெருக்கும்.

ஸோமஸவநம் எனும் ஓர் அச்வத்தமரம் அங்கிருக்கிறது. அதைக்காண முயற்சி செய்.

1249. ப்ராஹ்மத்தை உணர்ந்தவன் ஸகல லோகங்களையும் அடைவான் என்பதைக்கேட்டு இந்த்ரனும் விரோசனன் என்னும் அஸுரனும் ப்ரஹ்மாவினிடம் வந்து அதை அறிய முப்பத்திரண்டு வருஷம் சுச்ரூஷை செய்தனர். நமது கண்ணில் புருஷனைப்போல் காணப்படுகிறதே அதே ஆத்மா என்றார் ப்ரஹ்மா. கண்ணாடியிலும் ஜலத்திலும் தெரிவது போன்ற சாயாஸ்வரூபமே ப்ரஹ்மம் என்று நினைத்தனர்.

1250. அகலமான பாத்ரத்தில் ஜலத்தைக்கொண்டு வரச்சொல்லி அதைக் குனிந்து பாருங்கள் என்றார் குரு. அப்படியே பார்த்தனர் சிஷ்யர். நன்கு உங்கள் உடலை அலங்கரித்துக்கொண்டு மறுபடியும் அதைப் பாருங்கள் என்றார் குரு. அப்படியே பார்த்து தேஹமே ஆத்மா என்று நினைத்தனர். விரோசனன் தன் ஊர் சென்று இதையே சிஷ்யர்களுக்கு உபதேசித்தான். உடலையே வளர்த்து அலங்கரித்து மற்ற வைதிக கர்மாவிலோ பக்தியிலோ ஞானத்திலோ ஆசை இல்லாமல், இறந்த உடலைக்கூட அலங்கரிப்போரை அஸுரர் என்பர் பெரியோர்.

1251. இந்த்ரன் வீடு சென்று நன்கு யோசித்து சாயை ஆத்மா அல்ல என்று கண்டு, மறுமுறை ப்ரஹ்மாவை அடைந்து முப்பத்தைந்து ஆண்டு சுச்ரூஷை செய்து ஸ்வப்நஸுகத்தை அநுபவிப்பவன் ஆத்மா என உபதேசம் பெற்றான். அதுவும் ஆத்மா அல்ல என்று கண்டு மற்றும் முப்பத்திரண்டாண்டு தவம் புரிந்து ஸ்வப்நத்தை அறியாதவன் ஆத்மா என்ற உபதேசம்பெற்று அதையும்விட்டு மறுமுறை ஐந்தாண்டு பணிவிடை செய்து ஆத்மோபதேசம் பெற்றான். பல்லாண்டு குருவுக்குப் பணிவிடைசெய். உபதேசித்த விஷயத்தை ஸ்வபுத்தியால் நன்கு ஆலோசி.

## 88. ப்ருஹதாரண்யக உபநிஷத் பாஷ்யம்.

1252. ஒவ்வொருவனுக்கும் தனம், மனைவி, புத்ரன், முதலிய இவர்களைவிட தனது ஆத்மாவே மிக ப்ரியமாயிருக்கிறதல்லவா ? ஆதலால் ஆத்மாவை ப்ரியம் என்று உபாஸி. இப்படி உபாஸித்தால் உபாஸகனுடைய ப்ரியமான வஸ்துக்கள் அழியாமலிருக்கும். ஆத்ம ஞானமில்லாதவன் பசு ஆவான். மநுஷ்யர்களுக்கு, பசு வேலை செய்வதுபோல் ஞானமில்லாத மனிதன் கர்மாவால் தேவர்களுக்கு உழைக்கிறான். ஆதலால் ஞானமார்க்கத்திற்கு மனிதன் செல்லும்போது தேவர் விக்நம் செய்கின்றனர்.

1253. அமாவாஸ்யையன்று இரவில் சந்த்ரன் தனது பதினாறுவது கலை மூலமாக ஸகல ப்ராணிகளிடத்திலும் வஸிக்கிறான். ஆதலால் அன்று பாபஜன்மாவான ஓணானைக் கூடக் கொல்லக்கூடாது. யாகத்தைத் தவிர மற்றபொழுது ப்ராணிகளைக் கொல்லக்கூடாது என்பது ஸாமான்யவிதி. அமாவாஸ்யையில் கொல்லக்கூடாது என்பது விசேஷவிதி. எப்போதும் ப்ராணி ஹிம்ஸை செய்யாதே. யாகத்தில் செய்வதை ஹிம்ஸையாக எண்ணாதே.

1254. ஒரு தந்தை இறந்தபோது, அவர் செய்ய வேண்டிய கர்மாக்களைச் செய்யாவிடில் புண்யலோகங்கள் கிடைக்காமல் கஷ்டப்படுவர். அப்போது அக்கர்மாவைப் பூர்த்திசெய்து புண்ய லோகங்களை அடையும்படி பிதாவைக் காப்பதால் புத்ரன் என்று புதல்வனுக்குக் காரணப் பெயர் உண்டாயிற்று. பூரணம் செய்து த்ராணம் செய்கிறான் என்பது புத்ரன் என்பதின் அர்த்தமாகும். இத்தகைய புத்ரனிருந்தால் பிதா இறந்தாலும் இறக்காதவனே ஆவான்.

1255. பாலாகி என்ற ரிஷி தனக்கு ப்ரஹ்மவித்யை தெரியும் என கர்வங் கொண்டார். அஜாதசத்ரு எனும் காசி

ராஜனிடம் சென்று உனக்குப் ப்ரஹ்மோபதேசம் செய்கிறேன் என்றார். அரசன், எல்லோரும் ஜநகராஜனைத் துதித்து அவனிடமே செல்கின்றனர். நீர் என்னிடம் வந்து இந்த வார்த்தை சொன்னதற்காக ஆயிரம் பசு தந்தேன். நீர் அறிந்ததைச் சொல்லும் என்றான். அவர் முக்ய ப்ரஹ்மமல்லாததைக் கூறினார். அரசன் அதிலுள்ள தோஷங்களைக் காட்டினான். பாலாகி பயந்து தனக்கு தத்வோபதேசம் செய்யும்படி அரசனை வேண்டினார். நான் குருவாக இருக்கலாகாது. ப்ரஹ்ம ஸ்வரூபத்தை வேறு வகையில் காட்டுகிறேன் எனக்கூறி, அரசன் தூங்குகிற ஒருவனிடம் இவரை அழைத்துச் சென்று ரிஷி சொன்ன பெயரைச் சொல்லி அழைத்தான். அவன் எழுந்திருக்க வில்லை. அவனைக் கையால் அசக்கினான். அவன் எழுந்தான். நாமரூபமற்றவன் ஆத்மாஎன உணர்ந்தார் ரிஷி. அவர் கர்வம் அகன்றது. கர்வங் கொள்ளாதே. உன்னைவிட அறிந்தவர் உலகில் பலருண்டு.

1256. சரீரமெனும் கொட்டகையில், ப்ராணன் என்ற தூணில், அன்னமென்ற கயிற்றால், இந்திரியங்களாகிய தலையில் கட்டப்பட்ட ஜீவனெனும் கன்றுக்குட்டியை எவன் நன்கு உணருகிறானோ அவனது ஏழு த்வாரமெனும் இந்த்ரிய சத்ருக்கள் அபஜயமடைவார்கள். பின்னர் ஆத்மஸ்வரூபத்தை நன்கு அறிவான். மோக்ஷஸுகத்தையும் அடைவான். இந்திரியங்களை ஜயித்தால்தான் ஞானம் உதயமாகும். முதலில் இந்திரியங்களை அடக்கு.

1257. யாக்ஞவல்க்யருக்கு மைத்ரேயி காத்யாயனி என இரண்டு மனைவிகளிருந்தனர். அவர் ஸன்யாஸம் செய்துக் கொள்ளும்பொழுது மைத்ரேயியைப் பார்த்து உங்களுக்கு நம் சொத்தைப் பாகம் பிரித்துக் கொடுக்கிறேன் என்றார். இந்த சொத்தால் மோக்ஷம் கிட்டுமானால் கொடுங்கள் என்றாள் மைத்ரேயி. ஆனால் மோக்ஷமடையும் வழியைக் கூறுகிறேன்

என்றுகூறி ஸகல ஜநங்களுக்கும் ப்ரியமானது ஆத்மா. ஆத்மாவிற்காகத்தான் மற்ற வஸ்துக்களிடம் ப்ரியமுண்டாகிறது என உபதேசித்தார் அவர்.

1258. துந்துபி சங்கம் வீணை முதலியவைகளை வாசிக்கும்பொழுது இதன் சப்தத்தில் மற்ற சப்தங்கள் அடங்கி விடுகின்றன. அவை தனியாக நம் காதில் படுவதில்லை. அதே போல்ஞானமயமான ஆத்ம ஸ்வரூபத்தினிடத்தில் மற்றதெல்லாம் ஞானியின் கண்ணுக்கு அடங்கி விடுகிறது. ஈரக்கட்டையில் பலவகையான தூமம் உண்டாவதுபோல் ப்ரஹ்மத்தினிடமிருந்து மூச்சுக் காற்றைப்போல் அநாயாஸமாக வேத புராணாதிகள் தோன்றின. ஜலங்களுக்கு ஸமுத்ரம் இருப்பிடமாயிருப்பது போல் வேதங்களுக்கு வாக்கே ஸ்தானமாக இருக்கிறது. வேதத்தின் மூலமாக ஆத்மாவை அறி.

1259. ஜநக மஹாராஜன் தனது யாகத்திற்கு வந்திருந்த வித்வான்களுக்குள் ப்ரஹ்ம நிஷ்டன் யார் என்று அறிய ஆசை கொண்டான். ஆயிரம் பசுக்களை ஸபையில் நிறுத்தி ஒவ்வொரு கொம்பிலும் ஒண்ணேகால் பலம் எடையுள்ள ஸ்வர்ண கொப்பிகளைப்போட்டு வேதாந்தத்தில்கேட்கும் ஸகல கேள்விகளுக்கும் பதில் சொல்லக்கூடிய ப்ரஹ்ம நிஷ்டர் இப்பசுக்களைக்கொண்டு போகலாம் என்றார். எல்லோரும் பேசாமலிருந்தனர். யாக்ஞவல்க்யர் சிஷ்யனைவிட்டு பசுக்களை தன் வீட்டிற்கு ஓட்டச் சொன்னார். உடனே பலர் பல கேள்விகளைக் கேட்க, தக்க பதிலுரைத்தார். யாக்ஞவல்க்யர் தான் ப்ரஹ்ம ஞானி இல்லை. பசுவினிடம் ஆசைகொண்டவன் என்று விநயமாகக் கூறினார். விநயத்தை விடாதே.

1260. சாஸ்திரங்களில் அந்தந்த வர்ண ஆச்ரமங்களுக்குரியதென்று விதிக்கப்பட்ட நித்ய கர்மாக்களைச் செய்யாவிட்டாலும், செய்யக்கூடாதென்று தடுத்த நிஷித்த கர்மாவைச் செய்தாலும், மரம் செடி நாய் பன்றி ப்ரேத

சரீரம் முதலிய பிறவிகளை அடைய வேண்டும். ஆதலால் ஸ்வ தர்மத்தை விடாதே. குரு விருத்தர் அதிதி இவர்களைப் பூஜிக் கும்பொழுதும் ஹோமம் ஜபம் போஜநம் ஆசமநம் அத்யயநம் முதலிய காலங்களிலும் யக்ஞோபவீதம்போல் மேல் வஸ்த் ரத்தைத் தரிக்க வேண்டும்.

1261. கந்தர்வன் ஓர் பெண்ணைப் பிடித்து பல வே தாந்த கேள்விகளைக் கேட்டான். அவைகளுக்கு பதில் கூறு மென ஓர் ரிஷி யாக்ஞவல்க்யரைக் கேட்டார். அதற்கும் அவர் பதில் சொன்னார். கார்க்கி என்பவள் யுக்தியாக பல கேள்விகளைக் கேட்டாள். தக்கபடி இவர் பதில் சொன்னார். ஆயினும் அவளைப் பார்த்து ச்ருதியினால் மாத்ரம் அறியத் தக்க விஷயத்தை யுக்தியால் கேட்டால் உன் தலை வெடிக்கும் என்றார் யாக்ஞவல்க்யர். ஆதலால் வீண் வாதம் செய்யக் கூடாது. ச்ருதியை நம்பவேண்டும்.

1262. அத்தகைய கேள்வியை விட்டுவிட்டு மற்ற இரண்டுகேள்விகளைக் கார்க்கி கேட்டாள். அதற்குஅக்ஷரமான ஆத்ம ஸ்வரூபத்தைப் பதிலாகக் கூறி இதை அறியாமல் இறப்பவன் க்ருபணன். அதை அறிந்தவனே ப்ராஹ்மணன் என்றார். இதைக்கேட்ட கார்க்கி, யாக்ஞவல்க்யரை வணங்கி உம்மை ஜயிப்பவன் ஒருவருமில்லை. உம்மை அவமதித்தால் மிகப் பாபம் ஆகும் என்றாள்.

1263. சாகல்யர் என்ற ரிஷி உண்மையான ஆத்ம ஸ்வரூபத்தை அறியாமல் அறிந்தவர்போல் பேசினார். அவ ரைப்பார்த்து ஆத்ம ஸ்வரூபத்தைச் சொல்லாவிடில் உன் தலை வெடிக்கும். உன் எலும்புகூட அகப்படாது. திருடர்கள் அதை அபஹரிப்பர் என்றார் யாக்ஞவல்க்யர். வீணாக கர்வங்கொண்டதால் சாகல்யர் இறந்தார். அவர் எலும்பை ஸம்ஸ்காரம் செய்ய அவர் சிஷ்யர்கள் எடுத்துச் சென்றனர். திருடர்கள் தநமென்று எண்ணி அதை அபஹரித்தனர். கர்வங் கொள்ளாதே.

1264. ஒரு ஸமயம் யாக்ஞவல்க்யர், ஜநகனுடைய ஸபைக்கு வந்தார். அரசன் அவரை வணங்கி கோதநத்தை அபேக்ஷித்து வந்தீரா? என்னைக் கேள்வி கேட்க வந்தீரா? என்றான். இரண்டிற்காகவும் தான் வந்தேன் என்றார் ரிஷி. முன்னதாகவே ஜநகன் உபாஸித்து வந்த வகையைக்கேட்டு மற்றும் வேண்டியதையும் சொன்னார். ஆயிரம் பசுக்களையும் ஆயிரம் காளைகளையும், ஆயிரம் யானைகளையும், ராஜ்யத்தையும், குருவுக்குக் கொடுத்தார் அரசன். நான் கூறிய விஷயத்தை நீ நன்கு உணர்ந்து, க்ருதார்த்தனாக ஆனாலொழிய இதைப் பெறமாட்டேன் என்றார் யாக்ஞவல்க்யர்.

1265. இவ்வுலகம் மறு உலகம் என இரண்டு ஸ்தாநங்கள் ஜீவனுக்கு இருக்கின்றன. இவ்விரண்டிலும் ஸம்பந்தித்தே ஸ்வப்ந முண்டாகிறது. ப்ராணனைக்கொண்டு கூடு போன்ற இவ்வுடலைக் காத்துக்கொண்டே, மநதின் மூலம் ஜீவன் ஸ்வப்நத்தை அநுபவிக்கிறான். தூங்குகிறவனை அவஸரமாக எழுப்பக்கூடாது. ஏன்? வெளியிற் சென்ற இந்திரியங்கள் உள்ளே வரும்போது தன் ஸ்தாநத்தைவிட்டு அவஸரமாக வேரிடம் சென்று விட்டால் குருடாகவோ செவிடாகவோ ஊமையாகவோ ஆய்விடுவான்.

1266. நமது உடலில் வாத பித்தச்லேஷ்மங்களுடைய சேர்க்கையால் நாடிகளில், பல ரஸங்கள் உண்டாகின்றன. மயிர்போல் ஸூக்ஷ்மமாக ஆயிரக்கணக்கான ஹிதா என்ற நாடிகள் உள்ளே ஓடுகின்றன. அவைகளில் பதினேழாவது ஸ்தாநம் ஜாக்ரதவஸ்தையில் அநுபவித்ததை வாஸனாரூபமாக வைத்திருக்கிறது. தர்மாதர்மங்களால் தூண்டப்பட்ட மநோவிருத்தி, ஸ்வப்நத்தில் அவ்வாஸனையைக்கொண்டு ஸுக-துக்கங்களைக் கொடுக்கிறது.

1267. இறக்கும்போது ஜீவன் தன் கர்மாவினால் தனக்கு-வரப்போகிற அடுத்த ஜன்மாவின் சரீரத்தை ஆரம்பிக்கும்-

பரமாணுக்களை, வாஸனையால் பிடித்துக்கொள்கிறான். (அட்டை புதிய துரும்பை முன்பாகத்தினால் பிடித்துக்கொண்டு பழைய துரும்பை விடுவதுபோல்) அதுவரையில் ஸ்வப்நத்திலிருப்பதுபோல் ஒன்றையும் அறியாதிருந்து பழைய உடலை விடுகிறான். இவனது வித்யை, கர்மா, வாஸனை, ஆகிய இவைகளே இவனைப் பின் தொடருகின்றன. ஆதலால் ஸத் வித்யை ஸத்கர்மா ஸத்வாஸனை, முதலியவைகளைத் தேட வேண்டும்.

1268. உலகைக் காக்கும் ஆத்மாவை ஞானிகள் நித்யமான வேதாத்யயநத்தாலும், தாநத்தாலும், தபஸாலும்,ஆசையை அடக்கியும் அறிய ஆசை கொள்கிறார்கள். சிலர் இவைகளால் கிடைக்காதென நிச்சயித்து ஸன்யாஸம் செய்துக் கொள்கின்றனர். பெண்ணாசை, பொருளாசை, உலகப்பற்று முதலியவைகளைவிட்டு, கர்மாவினால், விருத்தியும் குறைவும் இல்லாத ஆத்ம ஸ்வரூபத்தைத் தேடு.

1269. தேவர் மனிதர் ராக்ஷஸர் ஆகிய இம்மூவரும் தன் தந்தையான ப்ரஹ்மாவினிடம் சென்று வணங்கிப் பணிவிடை செய்து, தங்களுக்கு உபதேசம் செய்யும்படி வேண்டினார்கள். மூவருக்கும் 'த' என்ற எழுத்தை அவர் உபதேசித்தார். தமம் தாநம் தயை என்பதைக் கைகொள்ளுங்கள் என்பது அதன் பொருளாகும். எல்லா குணமும் இருந்து, அடக்கம் மாத்ரமில்லாத மனிதரே தேவராவர். லோப குணமுடையவரே மனிதர் ஆவர். ஹிம்ஸை செய்வோர் ராக்ஷஸர் ஆவர். ஆதலால் நரகத்வாரமான காம, லோப, கோபங்களை விடவேண்டும்.

1270. வேதத்தைத் தேநுவாக உபாஸனை செய். அதற்கு ஸ்வாஹா, வஷட், ஹந்த, ஸ்வதா, என்ற நான்கும் ஸ்தநங்களாகும். முதலிரண்டைக்கொண்டு தேவரும், ஹந்த என்பதால் மநிதரும், ஸ்வதா என்பதால் பித்ருக்களும் ஜீவிக்கின்

றனர். இந்த வாக்தேநுவுக்கு ப்ராணனே ரிஷபமாகும். மநமே கன்று, என்று எண்ண வேண்டும். நமது காதை விரலால் மூடிக்கொண்டால் ஓர் சப்தம் கேட்கும். இது நமது உண வைப் பாகம் செய்யும் வைச்வாநராக்னியின் சப்தமாம். அதைப் ப்ரஹ்மமாக நினை. இறக்கும் தருவாயில் உள்ள வனுக்கு இச்சப்தம் கேளாது.

1271. வியாதியால் பீடிக்கப்பட்டு இறக்கும் ஸமயத் தில் உள்ள ஒருவன், தான் படும் துன்பம் தபஸ் என்றும், இறந்த தன் உடலைக் காட்டுக்கு எடுத்துச் செல்வது தபோவ நம் போவதாகும் என்றும், சரீரத்தை அக்னியில் போடுவது ஓர் தபஸ் என்றும் நினைத்தால் அவனுடைய பாபம் அகலும். உயர்ந்த புண்யலோகத்தையும் அடைவான். எப்பொழுதும் இதை அப்யஸித்தால் தான் அந்திய காலத்தில் நினைக்க முடியும்.

1272. புஜிப்பதற்கு முன்னும் பின்னும் ஆசமநம் செய்யவேண்டும். இதை ப்ராணனுக்கு வஸ்த்ரம் என்று எண் ணினால் ப்ராண தேவதைக்கு வஸ்த்ரமளித்ததாகும். சாஸ்த்ர விரோதமில்லாத காமனைகளை அடைய, வேதத்திலுள்ள கர் மாக்களையும் உபாஸனைகளையும் ஜபங்களையும் செய்யலாம். வேதநிஷித்தமான கார்யங்களுக்கும் சிலவழிகள் வேதத்தி லேயே காட்டப்பட்டிருக்கும். அதைச் செய்யாதே. அவை துக்கத்தை அளிக்கும்.

## 89. ந்ருஸிம்ஹ பூர்வதாபினீய உபநிஷத் பாஷ்யம்.

1273. ந்ருஸிம்ஹத்தைப் பரப்ரஹ்மமாக வர்ணித்து அதன் மந்த்ரம், சக்ரம், உபாஸனாமார்க்கம், பலம், முதலிய வைகள் இதில் நன்கு விளக்கப்பட்டிருக்கின்றன. ந்ருஸிம் ஹோமாஸ்கன் வர்ண்தர்மங்களை நன்கு அநுஷ்டிப்பவனை

விடவும், ருத்ரம், அதர்வசிரஸ், இவைகளை ஜபிப்பவனை விடவும் அதிக புண்யசாலி ஆவான். அவன் கோரிய பலன் உடனே கிடைக்கும்.

## 90. ப்ரஹ்மஸூத்ர பாஷ்யம். 4 அத்யாயம்.

### (16 பாதம்.)

1274. நித்யமான பொருள் எது? அநித்யமான பொருள் எது? என யோசி. இம்மை மறுமைச் சுகங்களை விரும்பாதே. சமதமாதிகளைக் கைகொள். மோக்ஷத்தில் தீவ்ர மான ஆசையை வை. பிறகு ப்ரஹ்ம விசாரம் செய். ஆத்ம ஸ்வரூபத்தை யதார்த்தமாக அறியாவிட்டால் மோக்ஷம் கிட்டாததுடன் அநர்த்தமும் உண்டாகும். உபநிஷத்தை அநுஸரித்ததான தர்க்கத்தையே கைகொள்.

1275. சராசரமான இவ்வுலகிற்கு உபாதாநகாரணமும் நிமித்தகாரணமுமாக இருப்பது ஸர்வக்ஞன ப்ரஹ்மமே ஆகும். அதைச் சாஸ்த்ரங்களைக்கொண்டே அறிய வேண்டும். அது ஸகல துக்கங்களையும் அகற்றி, பரம புருஷார்த்தமெனும் மோக்ஷத்தை அளிக்கும். இதை உபதேசிப்பது உபநிஷத் அல்லது வேதாந்த மெனப்படும். இது கர்ம காண்டத்தின் ஓர் பகுதி அல்ல. கர்ம மார்க்கமும் அதன் பலனும் வேறு ஆகும். இதன் வழியும் பயனும் வேறு ஆகும்.

1276. மோக்ஷம் என்பது புதிதாக செய்யத்தக்க வஸ்து அல்ல. அது கர்மாவைப்போல் ஓர் வகை மாறுதலுள்ளதாகச் செய்வதுமல்ல. புதிய ஸம்ஸ்காரத்தை உண்டுபண்ணுவதுமல்ல. நித்யமாயிருப்பது ஆத்ம ஸ்வரூபமாம். அதை அறிவதே மோக்ஷமாகும். அறிதல் என்பதும் மாநஸிக கர்மா அல்லவா? எனில், இல்லை. கர்மாவானல் அதைச் செய்யலாம், செய்யாது விடலாம், அல்லது வேருகவும்செய்யலாம். உள்ள

வஸ்துவை உள்ளபடியே மநம் அறிவது, கர்மாவைப்போல் தோன்றினும் கர்மா அல்ல. அது வஸ்து தந்த்ரமாகும்.

1277. உலகிற்குக் காரணம் ப்ரதாநம் என்று சிலரும், அணு என்று சிலரும், சூன்யமென்று சிலரும், ஸ்வபாவமென்று சிலரும் மற்றும் பலர் பல வகையாகவுங்கூறுகின்றனர். பரமாத்மா உலகைப் படைக்க வேண்டு மென்று யோசித்து, தானே உலகில் ஜீவனுகப் புகுந்தார் என உபநிஷத்துகள் ஸ்பஷ்டமாகக் கூறுவதால் ப்ரஹ்மமே ஜகத்திற்குக் காரணமாகும். மற்றவை காரணம் அல்ல என்பது ஸத்யம்.

1278. நாமரூபமற்றவனுக இருக்கிருன் ஆத்மா. ஆயினும் தனது மாயாசக்தியால் ஸாதகர்களின் அநுக்ரஹத்திற்காக, ரூபத்தை எடுத்துக்கொள்வார். ஆனுல் இது யதார்த்தமான ரூபமல்ல. ஒரு விஷயத்தைப் பார்த்தவுடன் திடீரென அதை நிச்சயித்து விடாதே. முன்னும் பின்னும் பலமுறை அதை நன்கு யோசித்துக் குற்றமற்றதாயின் அதைக்கொள். சாஸ்த்ர விரோதமானதைத்தள்ளு.

1279. ஜீவன் என்பது ஆத்மாவைவிட அத்யந்தம் பின்னமான வேறு பொருளல்ல. இது, தேஹம் மநம் இந்திரியம் முதலியவைகளால் ப்ரஹ்மத்தைவிட்டுப் பிரிக்கப்பட்டது போல் காணப்படுகிறது. இதை அறிவில்லாத பாலர் ஜீவன் என்பார். ஒன்றுன ஆகாசத்தைப் பானையின் ஆகாசம் வீட்டிலுள்ள ஆகாசம் எனப் பிறித்துக்கூறுவதுபோலாம் இது. உபாதி உள்ளவரையிலும், ஐக்யஞாநம் வரும் வரையிலும் ஜீவன் கர்த்தா போக்தா எனப்படுவான். பின்னர் பேதமேது?

1280. அகண்டமான ஆத்மா, ஸூக்ஷ்மமான ஹ்ருதய குஹையில் இருக்கிருர் என்பது எப்படி பொருந்தும்? எனில் அந்தச் சிறு இடம் உபாஸனைக்காகக் கூறப்பட்டதாகும். அங்கே அவனைக் காணலாம் என்றும் கூறப்பட்டது.

ஆங்குள்ள ஆத்மாவிற்கு ஸுக துக்க அநுபவம் உண்டாகு மே எனில், ஜீவன் அதை அநுபவிப்பான். பரமாத்மா ஸம்பந்த மில்லாமலிருப்பார். வீடு எறிந்தாலும் வீட்டிலுள்ள ஆகாசம் எரிகிறதா ?

1281. ப்ரதி சரீரத்திலும் சந்த்ர ஸூர்யாதிகளிடமும் பூமியினுள்ளும் எங்கும் இருக்கிறது ஆத்ம ஸ்வரூபம் உள்ளே இருந்து அந்தந்த வஸ்துக்களையும் அடக்கி ஆள்வதும் ஆத்மாவே ஆவர். ஒன்றை அடக்கி ஆள கை கால் முதலிய ஸாதநங்கள் வேண்டுமே, ப்ரஹ்மம் அவயவமில்லாதன்றோ ? எனில், இது உண்மையே. எதை அடக்கி ஆள்கிறதோ அதன் கைகால்களைக்கொண்டு தன் வ்யாபாரத்தை நடத்துகிறது ஆத்மா. ஜீவனும் ஆத்மாவும் ஒன்றே என்றதால் ஆத்மாவை ஆட்டி வைப்பவன் யார் என கேள்விக்கு இடமில்லை. தன்க்குத்தானே காரணமானது அது.

1282. தேஹத்தை ஆத்மாவாக நினைப்பது அவித்யை ஆகும். தேஹத்தைப் பூஜித்து கௌரவிக்க வேண்டும் என்று எண்ணுவது ராகமாம். அதற்கு அவமானம் ஏற்படும் போது த்வேஷம் உண்டாகும். சரீரத்திற்கு நாசம் வருமென்று பயப்படுதல் மோஹமாகும். இவ்வளவு அநர்த்தமும் ஒவ்வொருவருக்கும் ப்ரத்யக்ஷமாகக் காணப்படுகிறது. இதைத் தவிர ப்ரத்யேகமாக நமக்குப் பற்பல துன்பங்களுமுண்டு. இவைகளை அகற்றி ஸுகம் பெறுவதற்கு ஞானம் ஒன்றே தக்க ஸாதநமாகும்.

1283. தேவர்களுக்குக்கூட ப்ரஹ்ம வித்யையில் அதிகாரமுண்டு. அவரவர்களுடைய ஹ்ருதயத்தில் அவரவர் அங்குஷ்ட அளவில் ஆத்மா வஸிக்கிறார். தேவர்களுக்கு சரீரமிருந்தால் பலவிடங்களில் ஒரே ஸமயத்தில் பலர் யாகம் செய்வதால் தேவர் எங்கே போவது? எனில், ஒரே தேவருக்குப் பல சரீரம் எடுக்கும் யோக்யதை இருப்பதால் தனித்-

தனி சரீரமெடுத்து அங்கங்கு செல்லலாம். அன்றியும் தேவர்கள் நம்மைப்போல் இலையில் உட்கார்ந்து கையால் எடுத்து உண்பவரில்லை. பார்த்தே ஸந்தோஷிப்பவர். ஆதலால் ஒருவரைப் பலர் ஏககாலத்தில் நமஸ்கரிப்பதுபோல் பலர் ஒரு தேவருக்கு யக்ஞம் செய்யலாம். அதைத் தன் மஹிமையால் தேவர் இருப்பிடத்திலிருந்தே கண்டு களிக்கலாம்.

**1284.** நித்யமாக இருப்பது வேதம். அதிலிருந்து மற்றஉலகைப்போல் தேவர்கள், சரீரத்துடன் படைக்கப்பட்டனர். நமது கண்ணால் அவரைக் காணமுடியவில்லை என்பதனால் வ்யாஸாதிகளும் பார்த்திருக்கமாட்டார் என சொல்லலாமா? தேவதைகளின் சரீரத்தைப் பற்றி வேதம் சொல்கிறது. அந்த மந்த்ரம் வேறு அர்த்தத்தைக் கூறுவதால் தேவதா சரீரத்தைச் சொல்லவில்லை என்று கூறலாகாது. ஏன்? வேறு கார்யமாகச் செல்பவர் வழியிலுள்ள வஸ்துக்களைக் காண்பதில்லையா? ச்ருதி வேறு அர்த்தத்தைச்சொல்ல வந்தாலும் தேவதா சரீரத்தைப்பற்றியுங் கூறுகிறது.

**1285.** உபாஸனையில் தேவர்களுக்கு அதிகாரமில்லை. தேவர்களையே உபாஸிக்கவேண்டியிருப்பதால் எனில், அப்படி இல்லை. அவரைப்போல் அவருக்குமுன்னிருந்த தேவதையை உபாஸிக்கலாம். ஆதலால் அதிகாரமுண்டு. உபநயநமில்லாதவர்களுக்கு க்ரமமாக ஸன்யாஸம்செய்து மஹா வாக்யத்தைக் கேட்கும் ப்ரஹ்ம வித்யையில் அதிகாரமில்லை. "சூத்ர" என்று ஓர் உபநிஷத்தில் வித்யா ப்ரகரணத்தில் கூறப்பட்டிருக்கிறது. அதற்கு "சுக்" எனும் துன்பத்தை "த்ராவய" ஓட்டும் என சரணமடைந்த க்ஷத்ரியன் என்பது பொருளாம்.

**1286.** வேதத்தில் கூறப்பட்ட விஷயங்களை யுக்தியுடன் சேர்த்து நன்கு அர்த்தம் கூறலாமேயன்றி ஏன் இப்படி வேதங்கூறுகிறது எனக் கேழ்க்கக்கூடாது? அந்த வேதம்

உலகைப் படைத்தவரும் ப்ரஹ்மம், உலகமாக மாறியவரும் ப்ரஹ்மம் எனக் கூறுகிறது. ஆதலால் உலகிற்கு உபாதாந காரணம் நிமித்த காரணம் என இரண்டாகவும் ப்ரஹ்ம மிருக்கிறது. பானைக்கு மண் உபாதாந காரணமாம். குயவன் நிமித்த காரணமாவான். உலகிற்கு இரண்டு காரணமாயுமுள்ள ஆத்மாவே உலகு. உலகெலாம் ஆத்மா என்று நினை.

1287. நமது இந்திரியங்களுக்கு எட்டாத விஷயத்தில் மதக்ரந்தங்களை ப்ரமாணமாகக் கொள்ளவேண்டும். அந்நூல்களில் ஒரே விஷயம் வேறு வேறாகச் சொல்லப்பட்டிருந்தால் எந்த நூல் வேதத்தைத் தழுவினதாக இருக்கிறதோ, அதையே ஏற்றுக்கொள்ளவேண்டும். உலகம் ஜடமானதால் அதற்குக் காரணமான பொருளும் ஜடமாயிருக்கவேண்டும் என்று குதர்க்கம் செய்யாதே. சைதன்யமான நம்மிடமிருந்து அசேதநமான நகம் மயிர் உண்டாகவில்லையா? அசேதநமான சாணியிலிருந்து சேதநமான புழு தேள் முதலியவை உண்டாகவில்லையா?

1288. புருஷ புத்தியால் கல்பிக்கப்படும் கேவல தர்க்கம் வெகுகாலம் நிலைத்து நிற்காது. ஒருவர் தர்க்கத்தால் நிச்சயித்த விஷயத்தை, மற்றொருவர் கண்டித்து அவரது புத்தி சாதுர்யத்தால் இதைவிட சிறந்த யுக்தியைக் கூறி வேறொன்றை நிச்சயிக்கலாம். ஆதலால் கேவல தர்க்கத்தை நம்பாதே. அஸத்தே முன் இருந்தது. அதிலிருந்து ஸத் உண்டானது என்ற ச்ருதிக்கு (தர்க்கத்தைக் கொண்டு வேத அர்த்தத்தைத் தழுவி) இப்போது காணப்படுவதுபோல் உலகம் நாமரூபத்துடனில்லை. ஸூக்ஷ்மமாக இருந்தது என்று அர்த்தங் கூறுதல் நியாயமாகும். இல்லையேல் பசுவின் கொம்பிலிருந்து பால் வரலாம். மணலிலிருந்து எண்ணெ வரலாம். காரணத்தில் கார்யம் ஸூக்ஷ்மமாக இருக்கும். ஆதலால் அதை அஸத் என்றது ச்ருதி.

1289. ஒரே கல் தான் விலை உயர்ந்த வஜ்ரவைடூர்ய மாகவும் ஸூர்யகாந்தக் கல்லாகவும், ஸாதாரண கல்லாகவும் இருக்கிறது. ஒரே மண்ணை ஆச்ரயித்த விதை, பத்ரம் புஷ்பம் காய் கனி முதலியவைகளாக மாறுகிறது. நாம் உண்ணும் ஒரே அன்னம், ரஸம் ரத்தம் மயிர் முதலியவைகளாக மாறுகிறது. அதே போல் ஒரே ஆத்மா ஜீவன் உலகம் முதலியவைகளாக மாறி நிற்கிறது. ஜலம் பனிக்கட்டியாக ஆவது போலும் பால் தயிராவதுபோலும், ப்ரஹ்மம் தானே விசித்ரமாக மாறுகிறது. உஷ்ணம் மோர் இவைகள், ஜலம் பனிக்கட்டியாகவும் பால் தயிராகவும் மாறக் காரணமெனில், உஷ்ணம் ஸம்பந்தபட்ட தெல்லாம் பனிக்கட்டியாகவும் மோர் ஸம்பந்தப்பட்ட தெல்லாம் தயிராகவும் ஆகுமா?

1290. மற்றோர் ஸாதநத்தை அபேக்ஷிக்காமல் ப்ரஹ்மம் தானே விசித்ரமான உலக வடிவமாக மாறுகிறது. தேவர்களும் பித்ருக்களும் வேறொரு ஸாதநமு மில்லாமலே இஷ்டமான சரீரம் ரதம் வீடு முதலியவைகளைப் படைக்கின்றனர். சிலந்திப்பூச்சி நூலைப்படைக்கிறது. கொக்கு புருஷ வீர்யமில்லாமலே கர்ப்பத்தைத் தரிக்கிறது. ஸர்வக்ஞனும் அபார சக்தியுள்ளவனுமா யிருக்கும் ஆத்மாவைப்பற்றி கேட்கவும் வேண்டுமோ? அவன் உலகைப் படைக்க வேறு ஸாதநமும் வேண்டுமோ?

1291. எவனும் ஏதாவது ஒரு பலனை நாடியே ஓர் கர்மாவைச் செய்வான். உலகைப் படைக்கும் கார்யத்திலீடு பட்ட ப்ரஹ்மத்திற்கு இதனால் யாதொரு லாபமுமில்லை. ஆதலால் உலககாரணம் ப்ரஹ்மமில்லைஎன்றால் அப்படி இல்லை. ஒருபயனையும் எண்ணாமல் ஸாமான்ய மனிதரும் ப்ரபுவும் விளையாடுவதில்லையா? அதைப்போல் ஆத்மாவிற்கு இது ஸாமான்ய லீலையேயாகும்.ஏன் அப்படிப் படைக்கிறார்என்று நாம் கேட்கமுடியாது. ஏன்? அவர் ஸ்வபாவம். நெருப்பு ஏன் சுடுகிறது? என்று கேட்க முடியுமா?

1292. ஆனால், எல்லோரையும் பணக்காரனாகவோ ஏழையாகவோ படைக்காமல் சிலரைத் தனிகராகவும் சிலரை ஏழையாகவும் படைப்பதால் ப்ரஹ்மத்தைப் பக்ஷபாதமுள்ளது, தயை இல்லாதது என்று சொல்லக்கூடாதா எனில்? கூடாது. ஏன் ? மழை பயிர்களுக்குப் பொதுவான காரணமாக இருக்கிறது. அதன் விதையின் தோஷமும் குணமும் அதன் இளைப்பிற்கும் விருத்திக்கும் காரணம் அல்லவா ? அப்படியே பொதுவாகப் படைப்பது ஆத்மாவாம். ஏழையாவதும் பணக்காரனாவதும் அவனவன் செய்த பாப புண்ணியத்தைச் சார்ந்ததாகும்.

1293. வேதாந்த நூல் தன் மதத்தை நன்றாக எடுத்துக் காட்டினால் போதாதா? இதர மதத்தை ஏன் கண்டிக்க வேண்டும்? கண்டநம் என்பது த்வேஷத்தைக் காட்டவில்லையா ? எனில், இல்லை. நல்ல யுக்தியைப்போல் காணப்படுவதாலும், இதர மதநூலை இயற்றியவர் பெரியோர் என்பதாலும், ஸாமான்யமானவர் இதர மதங்களை நம்பிவிடக்கூடும். அதனால் மோக்ஷாநந்தத்தை அடையாமல் ஸம்ஸாரத்தில் உழண்டு நரகத்தை அடையக்கூடும். அங்ஙனம் கூடாதென்ற கருணையால் அதைக் கண்டிக்கிறது வேதாந்தம்.

1294. ஜீவன் அணுபரிமாணமுள்ளது. நமது சரீரம் எவ்வளவு பெரியதோ அவ்வளவு பெரியது ஜீவன் எனச் சிலர் கூறுவர். அது அங்ஙனமல்ல. பலவேத வாக்யங்கள் அதை அணுவெனக் கூறுகின்றன. ஓரிடத்தில் அணுவாக இருக்கும் ஜீவனுக்கு சரீரத்தின் மற்றோரிடத்தில் நடக்கும் விஷயம் எங்ஙனம் தெரியுமெனில், ஓர் இடத்தில் பூசிய சந்தநம் உடல் முழுமையும் ஆநந்தத்தை அளிக்கவில்லையா? ஓரிடத்தில் வைத்த தீபம் மற்ற இடத்திற்கு ப்ரகாசத்தை அளிக்கவில்லையா? ஜீவனும் தனது சக்தியால் இருந்த இடத்திலிருந்தே அரசனைப்போல் எல்லாவற்றையும் அறிகிறது.

1295. உண்பது உறங்குவது முதலிய கர்மாவைச் செய்கிறவன் ஜீவனே ஆவான். அவ்வேலை செய்வது அக்னிக்கு உஷ்ணம்போல், அவனுக்கு இயற்கையான குணமில்லை. தச்சன் வாச்சியைக்கொண்டு வேலைசெய்யும்போது கஷ்டப்படுகிறான். வீட்டிற் சென்று வாச்சியை வைத்து ஸுகமாக இருக்கிறான். அதேபோல் ஜீவன், புத்தி இந்திரியம் முதலியவைகளைக்கொண்டு கர்மாவைச் செய்து கஷ்டப்படுகிறான். அவைகளை விட்டு ப்ரஹ்மமெனும் வீட்டில் நித்ரை எனும் ஸுகத்தை அநுபவிக்கிறான்.

1296. எல்லாவற்றிற்கும் தைவமே காரண மென்றால், நம்மை நல்ல கார்யத்தையோ அல்லது கெட்ட கர்மாவையோ செய்யும்படி தூண்டுவதும் தைவமே ஆகும் அல்லவா ? அப்படி ஆயின் ஒருவனை நற்கருமத்தையும் மற்றொருவனை துஷ்கர்மாவையும் செய்யத் தூண்டுவதால் தைவம் பக்ஷபாதமுள்ளது, ஸமமில்லாதது என்றல்லவோ தோன்றுகிறது. எனில் ? பொதுவாக ஸகல கர்மாவையும் செய்ய சக்தி அளிப்பது தைவமாகும். செய்கிறவன் ஜீவனாவான். தூண்டுவது முன் செய்த கர்மாவின் வாஸனை ஆகும்.

1297. ஆத்மாவே ஸகல வஸ்துக்களாகத் தோன்றியதாயின், இதைச் செய்யாதே இதைச் செய் என்று ஏன் வேதங்கூறவேண்டும் ? எல்லாம் ஆத்மா அன்றோ ? எனில் மாயையை ஜயித்தவனுக்கன்றோ எல்லாம் ஆத்மா ? வியவஹாரதசையிலும், எல்லாமாத்மாவாயினும் ஒரே ஸூர்யனது ப்ரகாசம் சுத்தமான இடத்தில் இருந்தால் அதை ஏற்கிறோம் அசுத்த இடத்திலிருந்தால் அதை விடுகிறோம். சாணி ஒன்றே ஆனாலும் பசுவினது சாணியைச் சுத்திசெய்ய ஏற்கிறோம், மற்றதை அசுத்தமென விலக்குகிறோம். அப்படி அசுத்த ஆத்மாவை விலக்க வேண்டியதுதான் நியாயமாகும்.

1298. இறந்தபின் ஜீவன், லோகாந்தரம் சென்று

திரும்பும்போது அங்கு, தான் அநுபவித்த புண்ய பாபங்களில் ஓர் சிறு பாகத்துடன் பூமிக்கு வருகிறான். புண்யசாலி ஸதாசாரமுள்ள குலத்திலும், பாபி, மிருக பக்ஷி முதலிய ஜாதிகளிலும் பிறக்கிறான். ஆசாரமில்லாமல் எப்புண்யம் செய்தாலும் பயனற்றதாகும். ஜீவன் ஸ்வர்க்கத்திலிருந்து திரும்பும்போது ஆகாசம் மேகம் முதலியவைகளுக்கு ஸமமாக ஆகிறதே அன்றி, அவைகளின் ஸ்வரூபமாக மாறுவதில்லை. ஆங்கே வெகுநேரம் தங்குவதுமில்லை. நெல் முதலியவைகளிடமிருந்து நம் ஜீவன் வெளிப்படுவதுதான் தாமதமாகவும் கஷ்டமாகவும் இருக்கிறது.

**1299.** மறு பிறப்பிற்காக தான்யத்தில் வந்து தங்கும் ஜீவன், தான்யத்தின் ஸுக துக்கங்களை அநுபவிப்பதில்லை. வேதமே ப்ரமாணமாதலால் யாகாதிகளில் செய்யப்படும் ஹிம்ஸை ஹிம்ஸை ஆகாது. விழிப்பும் தூக்கமும் சேருமிடமே ஸ்வப்நம் ஆகும். ஆதலால் ஸந்த்யம் என்று ஸ்வப்நத்திற்குக் காரணப் பெயருண்டானது. ஸ்வப்நத்தில் கண்டவை, ஸத்யமானவை அல்ல என்றாலும் வரப்போகும் நல்லதையோ கெட்டதையோ காட்ட ஸ்வப்நம் ஸூசகமாக இருக்கிறது. காம்ய கர்மாவில் பெண்களைக் கண்டாலும் யானை மீதேறக் கண்டாலும் செல்வ முண்டாகும். கறுத்த பல்லுள்ள கறுப்பு மனிதனைக் கண்டாலும் கழுதை மீதேறக்கண்டாலும் விரைவில் மரணமுண்டாகும்.

**1300.** தூங்கும்போது ஸகல ஜீவராசிகளும் ப்ரஹ்மத்தினிடம் சேர்ந்து விடுகின்றன. எழுந்திருக்கும்போது அதே ஜீவராசிகள் பல தினங்களில் செய்யக்கூடிய தன் தன் உடலில் தான் வந்து புகவேண்டும் என்பது என்ன நியதி? நதியின் ஜலம் ஸமுத்ரத்தில் விழுந்தபிறகு அந்தந்த நதி ஜலத்தைப் பிரித்தெடுக்க முடியுமா? எனில் தூங்கி விழித்தவன் நேற்று தான் பாதி செய்துவிட்ட கர்மாவை இன்று ஆரம்பிக்கிறான்.

நேற்று நடந்த விஷயத்தை ஸ்மரிக்கிறான். வேதமும் நேற்று தூங்கியவனை இன்று எழுந்தவன் என கூறுகிறது. கர்மா வித்யை முதலியவைகளும் பல நாளிருக்கும் ஒரே ஜீவனைக் குறித்தே விதிக்கப்படுகின்றன. இக்காரணங்களால் நித்திரையில் ஐக்யமானாலும் வாஸனையுடன் அந்தந்த ஜீவன் தன் தன் உடலில்தான் வந்துபுகும்.

1301. ஜாக்ரத் ஸுஷுப்தி ஸ்வப்நம் மரணம் என நான்கு அவஸ்தைகளிருக்கின்றன. ஜீவனுக்கு மூர்ச்சை என்பது தனித்ததோர் அவஸ்தை ஆகாது. பாதி மரணத்திற்கு ஸமமானது. அது தைவத்தின் மஹிமை நம்மால் அளவிட்டுக் கூறமுடியாததாக இருக்கிறது. பொதுவாக சுக்லசோணித ஸம்பந்தமே ப்ராணிகள் உண்டாகக் காரணமாக இருந்தாலும், த்ருஷ்டத்யும்நன், த்ரௌபதி, முதலியோர் தாய் தந்தை இல்லாமலேயே, அக்னியிலிருந்து ஜநித்தனர். தாயில்லாமலே அகஸ்த்யர் பானையிலிருந்து உண்டானார். கொக்கு புருஷனில்லாமலே கர்ப்பத்தைத் தரிக்கிறது.

1302. வேதத்தில் சில இடங்களில் பரமாத்மாவிற்கு சரீரம் முதலியவைகள் கூறப்பட்டிருக்கின்றன. அவை உபாஸனைக்காகக் கூறப்பட்டவைகளே அன்றி உண்மையானவை எனக் கூற முடியாது. ஏன்? அகண்டமாகவும் அரூபமாகவும் இருக்கிறது ஆத்மா என உதாஹரணபுரஸ்ஸரமாக ச்ருதி பல இடங்களில் வர்ணிக்கிறது. சேற்றில் காலை வேண்டுமென்று தானே வைத்துப் பின்னர் அலம்புவது போல் ப்ரஹ்மத்திற்கு உலக வடிவமான ரூபத்தை ஏன் ச்ருதி தானே கல்பிக்க வேண்டும்? பின்னர் அதை ஏன் கண்டிக்க வேண்டும்? எனில் உலகத்தவரால் கல்பிக்கப்பட்ட உருவத்தை ச்ருதி அநுவாதம் செய்து அதைக் கண்டிக்கிறதே தவிர ரூபத்தை கல்பிக்கவில்லை.

1303. நிர்க்குண ப்ரஹ்மத்தை அறிந்த வஸிஷ்டர்

வியாஸர் போன்றவர்களுக்கும், மறு பிறப்பு இருப்பதாக புராணங்கள் கூறுகின்றன. ஆதலால் முக்தி பெற்றவனுக்கும் முக்தி பெறுதவனுக்கும் பிறப்பிருக்குமாயின், பெருங் கஷ்டங்களை ஏற்று முக்திபெற முயற்சிப்பது வீணில்லையா? எனில் வ்யாஸர் வஸிஷ்டர் முதலிய ஜீவன் முக்தர்கள், அதிகாரி புருஷர்களாவார். பகவத் ஸங்கல்பத்தால் சிறிது காலம் உலகத்திலிருந்து, குறித்த வேலைகளைச் செய்து, பின்னர் விதேஹ முக்தி அடைவர். மற்ற முக்தர்களுக்குப் பிறப்பே கிடையாது.

**1304.** சாந்தோக்ய உபநிஷத்தில் வைச்வாநர வித்யையில் ப்ராணாக்நிஹோத்ரம் என்ற ஓர் கர்மா கூறப்பட்டிருக்கிறது. உண்பதற்கு முன் பரிஷேசநம் செய்து ப்ராணாபாநாதிகளுக்கு ஜாடராக்னியில் ஹோமம் செய்வதே ப்ராணாக்நிஹோத்ரமாகும். ஏகாதசி முதலிய உபவாஸ திநங்களில் போஜநமில்லாததால் உபாஸனைக்காக ப்ராணாக்நிஹோத்ரம் செய்ய வேண்டிய அவச்யமில்லை.

**1305.** உபநிஷத்துகளில் சில கதைகள் கூறப்பட்டிருக்கின்றன. அச்வமேத யாகத்தைச் செய்யும் அரசனை அவன் குடும்பத்துடன் உட்காரவைத்து அவனுக்குக் கதை சொல்ல வேண்டும் என்று கர்ம காண்டத்தில் ஓர் விதி இருக்கிறது. அதைப்போல் தான் இக் கதை கேவலம் பொழுது போக்குவதற்காக ஏற்பட்டதா? எனில், இல்லை. ப்ரஹ்ம வித்யையின் பெருமையையும் ஸம்ப்ரதாயத்தையும் விளக்குவதே இக் கதைகளின் கருத்தாகும்.

**1306.** மோக்ஷமடைவதற்கு ஞானமே ஸாக்ஷாத் காரணம் என்பதில் ஆக்ஷேபமில்லை. ஞானம் வரவேண்டுமாயின் நித்ய கர்மாக்களை நன்றாக அநுஷ்டிக்க வேண்டும். குதிரையின் குணத்தைக் கண்டு, அதை வண்டியில் பூட்டுவார்களே அன்றி, மாடிழுக்கும் கலப்பையை அதன் கழுத்

தில் வைக்க மாட்டார்கள் அல்லவா ? ஞானத்திற்கு அங்கமாக சமதமாதிகள் விதிக்கப்பட்டிருக்கின்றன. கர்மா அங்கமல்ல. ப்ராணனை ப்ரஹ்மமாக உபாஸிப்பவன் எதையும் சாப்பிடலாம் என்று ச்ருதி சொல்கிறது. ஆயினும் இவ்விதியை ஆபத்காலத்தில் தான் வைத்துக்கொள்ள வேண்டும் என மற்ற நியாயத்தால் ஸித்திக்கிறது.

1307. க்ஷேமத்தை அடைய விரும்புகிறவன் உசிதமான ஆச்ரம தர்மத்தை ஆச்ரயிக்க வேண்டும். மனைவியை இழந்த க்ருஹஸ்தனுக்கு வேதாந்த வித்யையில் அதிகாரம் உண்டு. ஆயினும் ஆச்ரமமின்றி ஒரு க்ஷணமேனும் இருக்கலாகாது. நைஷ்டிக ப்ரஹ்மசர்யத்திலிருந்து, தவறியவனுக்கு தலை அறுந்து கீழே விழுந்த பிறகு எப்படி வைத்யம் பயன்படாதோ அப்படியே ப்ராயச்சித்தாதிகளால் பரிஹாரம் ஏற்படாது. தன் ஆச்ரமத்திலிருந்து நழுவிய ஸன்யாஸியையும் பஹிஷ்கரிக்கவேண்டுமென தர்மசாஸ்த்ரங் கூறுகிறது. பரிபாகமில்லாவிடில் ஸன்யாஸம் செய்து கொள்ளாதே.

1308. ஞானி பாலனைப்போலிருக்க வேண்டும் என உபநிஷத்துகள் சொல்கின்றன. சிறுவனைப்போல் விதிநிஷேதமில்லாமல் கண்டதைத் தின்று இஷ்டப்படி ஸஞ்சரிப்பதென்று அதன் பொருளல்ல. சிறு குழந்தைகள் எப்படி தன் ஸ்வரூபத்தைப் பிறருக்குக் காட்டாமலிருக்கின்றனவோ அப்படியே தனது யோக்யதையை வெளியிடாமல், உலக வாஸனையிலீடுபடாமல் இருப்பதென்பது அதன் பொருளாகும். ப்ரதிபந்தகமில்லாவிடில் ஞாநாப்யாஸம் செய்பவனுக்கு இப் பிறவியிலேயே ஞானம் உதயமாகும். ப்ரதிபந்தகமிருந்தால் மறு பிறப்பிலோ அதற்கடுத்த ஜன்மத்திலோ ஞானம் உதயமாகும். ஞானம் வந்தவனுக்கு அந்த க்ஷணத்திலேயே முக்தி உண்டாகும்.

1309. வேதாந்த உபதேசத்தை ஒரு முறைக் கேட்

*

டால் போதாது. மநதிற்குப் பிடிபடாத விஷயமாதலாலும் ச்ருதி பலமுறை உபதேசித்திருப்பதாலும் ஆத்மஸாக்ஷாத்காரம் வரும்வரையில் ச்ரவண மநந நிதித்யாஸநம் முதலியவைகளை விடக்கூடாது. உத்தம அதிகாரிக்கு ஒரே முறை உபதேசம் போதுமானது. ஆத்மப்ரத்யக்ஷ முள்ளவன் இவைகளைச் செய்யவேண்டியதில்லை. வரனைக் கொல்வதற்காகவா பெண்ணை மணப்பது? ப்ரஹ்ம ஸ்வரூபத்திலிருந்து நழுவுவதற்காகவா முக்தன் ச்ரவணாதிகளைச் செய்வது?

1310. ஆத்மாவை அநுஸந்தாநம் செய்வது மனத்தின் வேலை. ஆதலால் நடக்கும் பொழுதோ படுத்துக்கொண்டபொழுதோ அல்லது நிற்கும் பொழுதோ ஏன் த்யாநம் செய்யக்கூடாது? எனில், அநுஸந்தாந மென்பது ஒரே தாரையாக மனதில் ஆத்மாவை எண்ணுதலல்லவா? நிற்கும் போது மநம் சரீர தாரணத்திலீடுபடும். படுக்கும்போது தானாகவே நித்ரை வந்துவிடும். நடக்கும்போது மநது அலையும். ஆதலால் ஏகாந்தமான இடத்தில் உட்கார்ந்தே த்யாநம் செய்யவேண்டும். அநுஸந்தாநத்திற்கு தேச கால நியமமில்லை. மனதிற்கு இசைந்த தேச காலத்தில் த்யாநம் செய்யலாம்.

1311. ஞானம் வந்தவுடன் ஸஞ்சிதமெனும் பாபம் அழிந்துவிடும். ஆகாமி என்பது அருகில் அணுகாமல் ஒழிந்துவிடும். ப்ராரப்தம் என்பதுமாத்ரம் அதன் பலன் முடிந்தபிறகே ஒழியும். ஏன்? குயவன் சக்ரத்தைச் சுற்றி விட்டால் வேகம் குறைந்த பிறகல்லவோ சுற்றுதல் நிற்கும். புண்ய கர்மாவும் பந்தத்தைக் கொடுப்பது ஆதலால் அது அழிவதும் ஞானிக்கு இஷ்டமே ஆகும். ஆயினும் ஞானியைப்போற்றி ஆதரிப்போர் அவனது புண்ய கர்மாவின் பயனையும், நிந்திப்போர் பாபகர்மத்தின் பயனையும் அநுபவிப்பர்.

1312. ஸகுண ப்ரஹ்மோபாஸகன் ஸூர்ய ரச்மி

வழியாகக் கிளம்பி பகல் சுக்லபக்ஷம் உத்தராயணம் முதலிய வைகளைத் தாண்டி ப்ரஹ்மலோகம் செல்கிறான் அல்லவா? ஒரு ஸமயம் அவன் இரவில் இறந்தால் என் செய்வது எனில் இரவிலும் ஸூர்யரச்மி ஸூக்ஷ்மமாக இருப்பதால் அதைத் தழுவியே கிளம்புகிறான். தக்ஷிணாயனத்தில் இறந்தால் என்ன செய்வது? எனில் உத்தராயண தேவதை தக்ஷிணாய னத்திலும் வந்து உபாஸகனை ப்ரஹ்மலோகத்திற் கனுப்பும். ஆயினும் பீஷ்மர் உத்திராயணத்தை எதிர்பார்த்து அது வரை ப்ராணனை விடாமலிருந்தது ஏன்? ஸம்பிரதாயத்தைக் கைவிடவேண்டாமென்றும், அவித்வான்களுக்கு உள்ள நம் பிக்கையைக் கெடுக்காமலிருக்கவுமே அவர் காத்திருந்தார்.

1313. ஆத்மாவுடன் ஐக்யமான ஜீவன் மற்றவர்களைப் போல் யாதொரு ஸங்கல்பத்தையும் செய்ய மாட்டான். எதாவதொன்றைச் செய்துவிடுவானாகில் அவன் ஸத்ய ஸங் கல்பனாதலால் உடனே அது கைகூடும். இவனே ப்ரஹ்ம மானதால் இவன் கோரிய பயனை அடைய எவர் ஸஹாயமும் இவனுக்கு வேண்டியதில்லை. உபாஸனையால் தேவதைகளின் ஸ்வரூபத்தை அடைந்தவர்களும், அணிமாதி ஸித்திபெற்ற வர்களும் இஷ்டமான கார்யத்தைச் செய்யலாம். ஜகத்தைப் படைப்பது முதலிய வியாபாரம் மாத்ரம் பரமேச்வரனைச் சார்ந்தது. ஆதலால் அதைச் செய்யமுடியாது. உபாஸனா மார்க்கத்தால் ப்ரஹ்மலோகம் சென்றவரும் இங்கேயே பரமாத்மாவை ஞானத்தால் அடைந்தவரும் மறுபடி பிறப் பதில்லை. நித்யாநந்தத்தைப் பெறுவார்.

ஓம் தத்ஸத் ப்ரஹ்மார்ப்பணமஸ்து.



கார்லண்டு அண்டு கம்பெனி, சென்னை.